# ஈழத்துச்சித்தர்கள்



உ
சிவமயம்

# ஈழத்துச் சித்தர்கள்

1980ஆம் ஆண்டு சாகித்தியமண்டலப் பரிசு பெற்றது.

ஆசிரியர்:

நா. முத்தையா

வெளியீடு:

ஆத்மஜோதி நிலையம்
"குரு பவனம்", கண்டி வீதி,
சாவகச்சேரி.
(இலங்கை)

முதற் பதிப்பு: டிசம்பர் 1980

இரண்டாம் பதிப்பு: ஏப்ரல் 1988

விலை ரூபா: 18-00

அச்சுப் பதிவு:
மஹாத்மா அச்சகம்,
ஏழாலை.
இலங்கை.

# முன்னுரை

வேதாந்த சித்தாந்த அறிவு பெறவேண்டுமானால் அவற்றுக் குரிய சாஸ்திரங்களைப் படித்து அறிந்துகொள்ளலாம். அநுபூதி வேண்டுமானால் மகான்களை நாடிச் செல்லவேண்டும். அதாவது அநுபூதி பெற்றவர்களால்தான் அநுபூதி அடையச்செய்ய முடியும். குருடன் குருடனுக்கு வழிகாட்ட முடியுமா?

யோகிகள். சித்தர்கள், முனிவர்கள், ரிஷிகள் என்று அழைக்கப் படுவோர் எல்லாரும் ஒரு கூட்டத்தைச் சேர்ந்தவர்களே. இவர்களில் மூவகையினர் உள்ளனர்:

- தம்முள்ளே கிடக்கும் தெய்வக் குறிப்பைக் கண்டு அதன்படியே நடந்து ஆன்மீக அனுபவங்களைப் பெற்று மற்றவர்களைத் தம்மீ டம் அணுகவொட்டாது மற்றவர்களின் பார்வைக்கு ஏளனமாகக் காட்சி அளிப்பார்கள்.

- அனைத்துயிர்களும் முன்னேறவேண்டும் என்று கருதி அதிதீவிர ஆத்ம சாதனைகள் செய்து கிடைக்கும் ஆன்மீக அனுபவங்கள், தெய்வக் குறிப்புகள் யாவற்றையும் ஞாலத்திற்கு வெளியிட்டு மறைந்துவிடுவார்கள்.

- இவர்கள் மற்றவர்களைத் தங்களிடம் அணுகவிடுவார்கள். ஆனால் தங்களுக்குக் கிடைக்கும் அனுபவங்களையோ முன்னேறும் வழி முறைகளையோ பிறருக்கு வெளியிடமாட்டார்கள். மாறாக நெருங்கி இருப்பவர்களின் குறைகளைத் தங்களின் ஆத்ம சக்தியால் போக்கிவிடு வார்கள். இவர்கள் செய்த அற்புதங்களையும் சொல்லியவைகளையும் அப்பகுதி மக்கள் வானாரப் புகழ்வார்கள்.

இறையுணர்வு பெற்றவர்கள், இறைவனை அடைய இறைவழி சென்றவர்கள், இறைதரிசனம் பெற்றவர்கள், இறைவனோடு கலந்த வர்கள் என்ற நிலையில் ஆத்மஞானிகள் உணரப்படுகிறார்கள். இந் நூலில் காணப்படும் பதினாறு சித்தர்களும் தங்கள் ஆத்ம சாதனையின் போது கீழ்க்கண்ட அனுபவங்களை அவரவர் நிலைக்கேற்றவாறு கண் டுள்ளார்கள்.

(1) விதி அனுபவம் (2) உயிர் அனுபவம் (3) அருள் அனுபவம் (4) மரண அனுபவம் (5) ஆத்மானுபவம் (6) ஞான அனுபவம் (7) இறைக்காட்சி அனுபவம் (8) இறைவனோடு ஐக்கியமாகும் சச்சிதானந்த அனுபவம்.

ஈழத்தில் இந்தப் பதினாறு சித்தர்கள்மாத்திரம் அல்ல, இன்னும் பலர் வாழ்ந்திருக்கிறார்கள். வாழ்ந்துகொண்டும் இருக்கின்றார்கள். இவர்களுடைய சரித்திரம் பூரணப்படுத்தப்பட்ட சரித்திரம் என்றும் சொல்வதற்கில்லை. கடந்த 32 ஆண்டுகளுக்கு மேலாக அங்கங்கு கஷ்டப்பட்டுக் கிடைத்த குறிப்புக்களைக் கொண்டு எழுதப்பட்டவையாகும். இந்த விஷயத்தில் அமரர் க. இராமச்சந்திரா அவர்கள் பெரும்பங்கு ஏற்றுள்ளார்கள் என்றே கூறவேண்டும்.

இந்த நூலில் கூறப்பட்ட சித்தர்களைப்பற்றி ஈழத்திலேயே பலர் அறியார்கள். உலகின் பல பாகங்களிலுமுள்ள தமிழர்கள் மேலோட்டமாயேனும் ஈழத்துச் சித்தர்களை அறியவேண்டும் என்ற அவாவினாலேயே கிடைத்த குறிப்புகளைக்கொண்டு எழுதியுள்ளோம்.

இந்நூலைப் படித்துணர்வதின்மூலம் வாசகர்கள் தங்களுக்குள்ளே இருக்கும் பேரமைதியை வெளிக்கொணர்ந்து ஆனந்த அமைதியோடு பிரகாசிக்கவேண்டும். இறைவனையே சதா நினைந்து இறையுணர்வு பெற்று இறையருளின்மூலம் சச்சிதானந்தப் பெருநிலையை இந்நூலின் மூலம் பெறவேண்டும். எல்லா உயிர்களும் இன்புற்று வாழ ஆன்ம நேய ஒருமைப்பாட்டையும், ஆனந்த அமைதியையும் உலகம் முழுவதும் பரப்ப வாசகர்கள் பணி செய்யுமாறு வேண்டுகின்றோம். இவ்வுலகிலே உடல்நூல், மனநூல், அறிவுநூல், ஆன்மீகநூல் போன்ற நான்கு வகையான நூல்கள் உள்ளன. இது ஆன்மீகநூல் வர்க்கத்தைச் சேர்ந்ததாகும்.

இந்த நூலை வாசிக்கும் ஒவ்வொருவரும் அவரவர் பரிபக்குவத்திற்கேற்ற அளவு ஆன்மீக நாட்டம் கொள்ளுவார்கள் என்ற நம்பிக்கை உண்டு. மனிதனுடைய வாழ்க்கை எவ்வாறு அமையவேண்டும் என்பதைப் படம்பிடித்துக் காட்டுவனவே இச்சித்தர்களுடைய வரலாறுகளாகும். பெரியபுராணத்திற்குச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத்தொகை பாடிச் செய்த சேவைபோலவே, இச்சித்தர் வரலாற்றுக்கும் அடியேனுடைய பணி அமைந்தது என்பதை மிக அடக்கத்துடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன். திருத்தொண்டத்தொகையிலிருந்து பெரியபுராணம் விரிந்ததுபோன்ற ஒரு வரலாறு எதிர்காலத்தில் உருவாவதற்கு சேக்கிழார் பெருமான்



போன்ற ஒருவரைத் தோற்றுவிக்கவேண்டும் என்று எல்லாம் வல்ல திருவருளை வழுத்துகின்றேன்.

இந்நூலை எழுதி வெளியிடுவதற்குத் தூண்டுகோலாயிருந்தவரும் இந்த நூலை நல்ல முறையில் ஆய்வுசெய்து மதிப்புரை அளித்தவருமாகிய யாழ்ப்பாண வளாகப் பேராசிரியர் உயர்திரு. க. கைலாசபதி, M. A. (Cey.) Ph. D. (Birm.) அவர்களுக்கும், அணிந்துரை ஒன்றை நல்ல முறையில் அளித்தவரும் எமது ஆத்மீக நண்பரும் 'காங்கிரஸ்' இதழின் ஆசிரியரும் இ. தொ. கா. வின் உபதலைவர் மற்றும் சமூக, கலாச்சாரப் பிரிவின் பொறுப்பாளரும், சமாதான நீதவானுமாகிய உயர்திரு. ம. க. விஜயசுந்தரம் அவர்களுக்கும் எமது மனமார்ந்த நன்றியையும் வணக்கத்தையும் செலுத்துகின்றோம்.

குருஜி என்று பக்தர்களால் அழைக்கப்படுபவரும், திருக்கோவலூர் ஞானானந்த சுவாமிகளுடைய உத்தம சீடரும், அகில உலகமும் தமது பக்தி பஜனாமிருத பிரவசனங்களால் மக்களின் உள்ளங்களைக் கொள்ளை கொண்டவருமாகிய சுவாமி ஹரிதாஸ்கிரி 19–12–80 தொடக்கம் 5 நாட்களுக்கு சென்னையில் நடைபெற்ற சுவாமி ஞானானந்தருடைய ஏழாவது ஆராதனை விழாவில் இந்த நூலை வெளியீடு செய்துவைத்தமைக்கு ஆத்மஜோதி நிலயத்தினரின் வணக்கத்தையும் நன்றியையும் செலுத்திக்கொள்வதில் பெருமகிழ்வடைகின்றோம்.

இந்த நூலை ஆக்குவதற்கு உதவி புரிந்த எல்லா உத்தமர்களுக்கும் மனமார்ந்த நன்றியையும் பணிவான வணக்கத்தையும் செலுத்திக்கொள்வதில் மகிழ்வடைகின்றோம்.

ஆத்மஜோதி நிலையம்,
நாவலப்பிட்டி.
இலங்கை. 13–12–80.

நா. முத்தையா



# மதிப்புரை

சமய அடிப்படையிலே மெய்ப்பொருளைக் காணும் முயற்சியில் இரு போக்குகள் அல்லது முறைகள் பொதுவாகக் காணப்படுகின்றன. குறிப்பிட்ட ஒரு மதத்தில் பிரமாணங்களாகக் கொள்ளப்படும் நூல்கள், சாத்திரங்கள், கட்டளைகள் ஆகியன விதிக்கும் நெறிமுறைகளினின்றும் வழுவாமல் அறிவுபூர்வமாக மெய்ப்பொருளை நாடுவது ஒரு வழி; குறிப்பிட்ட ஒரு மதத்தின் அடிப்படைகளைச் சார்ந்திருக்கும் அதே வேளையில், அவை விதிக்கும் சடங்கு, சம்பிரதாயம், கரும விதி முதலியவற்றிலும்பார்க்க, சுவானுபவமும் உள்ளுணர்வும் காட்டும் ஒழுகலாற்றில் நின்று உணர்ச்சிபூர்வமாக மெய்ப்பொருளை நாடுவது மற்றொரு வழி. இவை இரண்டும் ஒன்றை ஒன்று விலக்கும் வழிகள் அல்லவாயினும், நடைமுறையில் வேறுபட்டுச் செல்வனவாகவே உள்ளன. ஆன்மீகப் பயணிகள் இவ்விரு பாதைகளிலும் சென்று தமது இலக்கை அடைகின்றனர் எனலாம்.

தமிழ் நாட்டிலே, குறிப்பாகச் சைவம், வைணவம் என்ற இரு பெரும் பிரிவுகளிலும் இத்தகைய பாகுபாட்டினைக் காணக்கூடியதாய் இருக்கிறது. உலகில் உள்ள ஏனைய மதங்களிலும் இவ்விரு போக்குகளும் – அணுகுநெறிகளும் வெவ்வேறு அளவிலே செயற்படுவதைக் கண்டுகொள்ளலாம். இதன் அடிப்படையிலேயே உலகப் பொதுவான மறைஞானத்தைப்பற்றி நாம் பேசக்கூடியதாய் இருக்கிறது. இந்த அடிப்படையிலேயே கிழக்கும் மேற்கும் இணையக்கூடியதாயிருக்கிறது.

தமிழ் உலகிலே சமயாசாரியர் சந்தானாசாரியார்கள் வழிவரும் சைவசித்தாந்தம், வேதாகமங்களையும் மெய்கண்ட சாத்திரங்களையும் ஆதாரமாய்க்கொண்டு இயங்குவது. அது பெரும்பாலும் அறிவுபூர்வமான சமயநெறியாகும். சமய தத்துவம் என்ற வகையில் வைதிகத்துள் அது அடங்குமாயினும், வைதிக சமயங்கள் பலவற்றினின்று அது வேறுபடுவதும் விசேஷமாய்க் கருதப்படுகிறது. சைவசித்தாந்தத்தின் தனித்துவம் சுத்தாத்துவ வாதிகளினால் விதந்துரைக்கப்படுவது யாவருமறிந்ததே. ஆயினும், சைவ மரபிலேயே பலகாலமாகச் சமரசப் போக்கும் உயிராற்றலுடன் இருந்து வருகிறது. செந்நெறி இலக்கிய மரபும் சாத்திர மரபும் அதனைப் பலவேளைகளில் புறக்கணித்தாலும், தன்னிலை கெடாமல் அச்சமரசநெறி



தமிழுலகிற்குத் தண்ணளி செய்துவந்துள்ளது. திருமூலர் துவக்கம் தாயுமானவர் வரைக்கும் அவருக்குப் பின்னரும் இராமலிங்கர் ஈறாக, பல மறைஞானிகள் சமயங்களின் பொதுப் பண்புகளைப் போற்றி சமரச ஞானத்தையும் அனுபூதி மார்க்கத்தையும் கடைப்பிடித்து வந்துள்ள இடைக்காலத் தமிழ்நாட்டுச் சூழ்நிலையிலே சைவ வைணவ வேறுபாடுகள் மட்டுமன்றிச் சித்தாந்த வேதாந்த விகற்பங்களும் மேலோங்கியிருந்தபொழுது ஒருமைப்பாட்டினை வலியுறுத்தி உண்மையை நாடிய ஞானிகள் பொதுமக்களிடையே செல்வாக்குடன் விளங்கியது மட்டுமன்றிச் சமய உணர்ச்சி நிலைபெற்றிருக்கவும் பெருந்தொண்டாற்றினர். சமரச ஞானச் செல்வராகிய தாயுமானாரும்,

வேதாந்தஞ் சித்தாந்தம்
வேறென்னார் கண்களிக்கும்
நாதாந்த மோன
நலமே பராபரமே.

என்று பரவசத்துடன் பாடினார்.

பிரமாணாதீத நிலையில் நின்ற ஞானியருள் தமிழ்நாட்டுச் சித்தர் கணத்துக்குத் தனிச்சிறப்பான ஓர் இடமுண்டு. இவர்கள் மனிதன் கற்பித்துக்கொண்ட வரம்புகளையும் வரையறைகளையும், சடங்குகளையும் சம்பிரதாயங்களையும், பாகுபாடுகளையும் பாரபட்சங்களையும் கடந்தவர்கள். சாதி, குலம், பிறப்பு, இனம், நிறம், கொள்கை, பெண், ஆண், அந்தஸ்து என்ற அளவுகோல்களையும் தாரதம்மியங்களையும் இவர்கள் பொருட்படுத்தினாரல்லர். சித்தர்களில் ஒருவரான சிவவாக்கியர் கூறியதுபோல, 'உங்கள்பேத மன்றியே உண்மை பேதமில்லையே' என்றே அனுபூதிமான்கள் கூறிவந்திருக்கின்றனர். ஆன்மீக விகசிப்பே – பேதமற்ற போத நிலையே–அவர்களின் இலட்சியமாயிருந்தது. ஆகுலமும் ஆரவாரமுமற்ற மோன நிலையைப் பலர் கைக்கொண்டிருந்தனர். அத்தகைய வைராக்கியர்களால் ஆகர்ஷிக்கப் பெற்ற பொதுமக்கள் அவர்கள் அற்புதங்களும் அருஞ்செயல்களும் ஆற்ற வல்லவர்கள் என்றும் நம்பினர்; அவர்களாற் பற்பல பயன்களும் பெற்றனர். சித்தர்கள் வழிவருவதே சித்த வைத்தியம்.

சித்தர் பரம்பரையொன்று இலங்கையிலும் இருந்துவந்திருக்கிறது. எதேச்சையாக வாழ்ந்துவந்த இவர்கள் பொதுவான சமூக வாழ்க்கையிலிருந்து விலகியிருந்தமையால் ஏட்டிலும் இலக்கியத்திலும் அதிகம் இடம்பெறாமல்போயினர். மனத்தில் தோன்றும் சகல விதமான ஆசைகளையும் நீக்கி ஆன்மாவில் முழுநிறைவு எய்தும் சாதுக்கள் தங்களைப்பற்றிய செய்திகளையும் தகவல்களையும் பிறருக்குக் கூறுவதும் இல்லை. இதனால் சித்தர்களைப்பற்றிய வரலாறுகள் சரிவரத்

தெரியப்படாமல் மறைந்துபோயின. இந்நூலாசிரியர் குறிப்பிடுவது போல, கடந்த இரண்டு மூன்று நூற்றாண்டுகளிலே வாழ்ந்த ஒரு சிலருடைய வாழ்க்கை வரலாறுகளே ஒருவாறு அறியப்படுவன. அவையும் பெரும்பாலும் செவிவழிச் செய்திகளாக வந்தவையே. இவற்றை அரிதின் முயன்று உலகத்தார்க்கு நூல் வடிவில் வழங்கும் பணியைப் பலகாலமாக ஆசிரியர் ஆற்றிவருகின்றார். முப்பெரும் சித்தர்கள் (1973) ஏழாலை, (1977) என்னும் நூல்களில் சாதுக்கள் பரம்பரைபற்றி ஏலவே எழுதியுள்ள ஆசிரியர், இப்பொழுது ஈழத்துச் சித்தர்கள்பற்றி முழுமையான நூலொன்றை எழுதி வெளியிட முன்வந்துள்ளமை பொருத்தமேயாகும். ரிஷிமூலமும் நதிமூலமும் கண்டறிவது கடினம் என்பர். ஆயினும் இப்பொழுது இலங்கையில் காணும் சுவடுகளைப் பின்பற்றி, மூலம் கண்டறியத்தக்க சாதுக்கள் பரம்பரையை நோக்கும்பொழுது கடையிற் சுவாமிகள்வரை எமது ஆய்வு செல்லக்கூடியதாய் உள்ளது. அவரே இலங்கையின் நவ அருட் பரம்பரைக்கு வித்திட்ட குருமுதல்வர் என்கிறார் ஆசிரியர். பதினாறு இலங்கைச் சித்தர்களின் வரலாறுகள் இந்நூலிலே விவரிக்கப்பட்டிருக்கின்றன.

இங்கு கூறப்படும் பெரியார்கள் சிலரைப்பற்றி அன்பர்கள் ஏலவே எழுதியிருக்கின்றனர்: யோகர் சுவாமிகள், குழந்தைவேற் சுவாமிகள், செல்லாச்சி அம்மையார், மகாதேவ சுவாமிகள், தாளையான் சுவாமிகள் ஆகியோர் வரலாறுகள் தமிழுலகிற்கு ஓரளவு அறிமுகமானவை. ஆயினும் இந்நூலிலே அவை உரிய சூழமைவிலும் இன்றியமையாத வரன் முறையிலும் அமைந்துள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். சாதுக்கள் பரம்பரையை அறிந்துகொள்வதோடு, நமது சமூகவரலாற்றின் சிலபல செய்திகளையும் தெரிந்துகொள்ளும் வாய்ப்பு இந்நூலைப் படிப்போருக்கு ஏற்படும். போகிறபோக்கிலே சுவையான கதைகளையும் சம்பவங்களையும் கூறிச்செல்லும் போக்கு ஆசிரியரின் நூல்களுக்கு அமைந்த தனிச்சிறப்பு. இந்நூலிலே இடம்பெறும் சாதுக்கள் சித்தாந்த வேதாந்த பேதங்களைக் கடந்தவராய்க் காட்சி தருகின்றனர். மகாதேவ சுவாமிகளைப்பற்றிக் கூறுமிடத்தில், “இதில் (ஆச்சிரமத்தில்) வேதாந்தம் போதிக்கப்பட்டுவரும்போது வேதாந்த சித்தாந்த மாறுபாடுகளுக்கிடமளியாது சமரச நோக்குடனேயே கல்வி போதிக்கப் பட்டது” என்று (பக். 123) ஆசிரியர் எழுதியிருக்கிறார். செல்லாச்சி அம்மையார் சரித்திரத்திலே பூசாரிக் கிழவனார் ஆறுமுகம்பற்றிக் குறிப்பிடும்பொழுது, “இவர் சைவசித்தாந்தப் பயிற்சியும் வேதாந்த சாத்திர ஆராய்ச்சியும் கைவரப்பெற்றவர்” என்று (பக். 108) எழுதியுள்ளார். ஏழாலை என்னும் நூலிலும் வேதாந்த சாத்திரப் பயிற்சியுடையார் பலர் குறித்து எழுதியிருப்பதைக் காணலாம். சைவ சித்தாந்தம் பெருநெறியாக இருந்துவந்துள்ள யாழ்ப்பாணச் சமுதாயத்திலே வேதாந்தக் கல்வியும் சாத்திர மரபும் இருந்துவந்த வரலாற்றையும் ஆசிரியர் இனிவரும் நூல்களிலே விவரித்தல்வேண்டும் எனக் கேட்டுக்கொள்ளுகிறேன். நம்மவரின் ஆன்மீக வாழ்க்கையின் பன்முகப்பாட்டையும் முழுமையையும் சித்திரிக்க அத்தகைய ஒரு வரலாறு பெரிதும் உதவும் என்பது என் கருத்து. தொண்டர் சீர் பரவும் மெய்யடிமைத் திறத்தில் மிக்க ஈடுபாடுகொண்டு பல வருடங்களாக மேலான சேவை செய்துவரும் ஆசிரியர் நா. முத்தையா அவர்கள் இதுபோன்ற நூல்களை மேலும்மேலும் எழுதுவார் என்பதில் ஐயமில்லை. அன்பர்கள் அவருக்கு வேண்டிய ஆதரவை அளிப்பர் என்பதிலும் எனக்கு எதுவித ஐயமில்லை.



சைவசமயம், இந்து நாகரிகம் என்பன பள்ளிக்கூடங்களிலும் பல்கலைக் கழகங்களிலும் பாடநெறிகளாக அமைந்திருக்கும் இவ்வேளையில் இத்தகைய நூல்கள் மாணாக்கர்க்கும் ஆசிரியர்க்கும் பெரிதும் பயன்படும். அதற்காகவும் நூலாசிரியரை நாம் பாராட்டுதல் வேண்டும்.

திருநெல்வேலி,
யாழ்ப்பாணம்.
05-12-1980.

க. கைலாசபதி
கலைப்பீடாதிபதி,
யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம்.



# அணிந்துரை

'ஈழத்துச் சித்தர்கள்' என்ற இந்நூலுக்கு ஒரு அணிந்துரை வழங்குமாறு ஆத்மஜோதி நிலைய அதிபர் திரு. நா. முத்தையா அவர்கள் என்னைப் பணித்தபொழுது நான் திகைத்துவிட்டேன்.

வாசி யதை கும்பகத்தால் வலியக்கட்டி
மண்போலே சுவர்போலே வாழ்தல் வேண்டும்

என்ற தத்துவத்திற்கிணங்க அடக்கமே உருவாய், அமைதியே அணி கலனாய், தானும் ஒரு சித்தரைப்போல் வாழும் அவர் நன்காராய்ந்து தெள்ளிய நீரோட்டத் தமிழ் நடையில் எழுதியுள்ள இந்நூலுக்கு ஓர் இன்றையச் சாதாரண மனிதனாகிய நான் அணிந்துரை எழுதச் சிறிதும் தகுதியற்றவனாயிருந்தும் அன்பின் காரணமாக அவர் இட்ட பணி இது என்றே கூறவேண்டும்.

புத்தகத்தை ஒரே முறையில் படித்தேன். இத்தனை சித்தர்கள் இவ்வீழநாட்டிலும் நடமாடியுள்ளனரா என்று எனக்கு ஆச்சரியமா யிருந்தது. அதில் குறிப்பிட்டுள்ள ஒரு சித்தரை நேரில் தரிசிக்கும் பாக்கியம் எனக்குண்டு.

ஐம்பது வருடங்களுக்கு முன் நான் யாழ்ப்பாணத்தில் கல்வி கற்றுக்கொண்டிருக்கும்பொழுது கட்டுரைப் பரிசுப் பொருளாகக் கிடைத்த பல புத்தகங்களில் 'பாரதியார் பாடல்கள்'' என்ற புத்தகமும் இருந்தது.

அந்தப் புத்தகத்தில் ஒரு இடத்தில்

'' ......................................................
குவலயத்தின் விழிபோன்ற யாழ்ப்பாணத்தான்
தேவிபத மறவாத தீரஞானி
சிதம்பரத்து நடராஜ மூர்த்தியாவான்
பாவியரைக் கரையேற்றும் ஞானத்தோணி
பரமபத வாயிலெனும் பார்வையானன்''

என்று தான் புதுவையில் கண்ட ஒரு யாழ்ப்பாணத்துச் சுவாமி யைப்பற்றிப் பாரதியார் பாடியிருப்பதை எனது தமிழாசிரியர் திரு. சுப்பிரமணியம் என்பவரிடம் காட்டினேன். இவர் போன்றவர்கள் இன்றும் இருக்கிறார்கள். அவர்தான் யோகர் சுவாமி என்று அவர் கூறியதுமல்லாமல் ஒருநாள் என்னையும் சுவாமிகளிடம் கூட்டிச் சென்றார். அந்த ஆசிரியரை எல்லோரும் 'கடவுள் சுப்பிரமணியம்' என்றே அழைப்பார்கள். அவர் யோகர் சுவாமிகளின் பரம பக்தர். இருவரும் சென்று வணங்கினோம். மலையகத்திலிருந்து வந்து படிக்கும் இந்திய மாணவன் என்று என்னை அறிமுகப்படுத்தினார். பாரதியார் போற்றியதுபோன்ற ஞானியா இந்தச் சிறுகுச்சுக்குள் வாழ்கிறார் என்று எனக்கு ஏமாற்றமாய் இருந்தது. என்னை உற்று நோக்கிய சுவாமிகள் 'என்ன மகனே, ஏழைக் குடிசையாய் இருக்கிறதென்று பார்க்கிறாயா? நீயும் ஏழைக்கு உழைக்கவேண்டியவன்தானே. போய்க் கடமையைப் பாரடா' என்று சிறிது அதட்டலாகவே சொன்னார். எனக்கு ஏன் வந்தோம் என்றிருந்தது. அன்று எங்கள் குடும்பம் இருந்த பொருளாதாரச் செருக்கில் வளர்ந்த இளைஞனை என்னைச் சுவாமிகள் சபிக்கிறார் என்றே எடுத்துக்கொண்டு மனம் சோர்வடைந்தேன். ஆனால் இன்றோ? அவர் பெரிய தீர்க்கதரிசி எனச் சிந்திக்கிறேன்.

அக்காலத்தில் யாழ்ப்பாணத்தில் உயர்நீதிமன்றம் கூடும்பொழுது பிரதம நீதிபதியாக இருந்த புகழ்பெற்ற அக்பர் என்பவர் ஒவ்வொரு தடவையும் நீதிமன்ற அலுவல்களைத் தொடங்குமுன் யோகர் சுவாமிகளிடம் சென்று ஆசி பெற்றுச் செல்வார் என்றும் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

இலங்கையில் இலைமறைவு காய்மறைவாய் வாழ்ந்து பாமர மக்களிடம் பக்தி மார்க்கத்தைப் பரப்பி, முத்திக்கு வழிகாட்டிய சித்தர்கள் வரலாற்றை அலைந்து திரிந்து சேகரித்து ஆராய்ந்து இனிய தமிழில் ஆத்மீகமும் சரித்திரமும் இணைந்த முறையில் ஆக்கப்பட்டுள்ள இந்நூல் கல்விக்கூடங்களில் ஒரு பாடப் புத்தகமாக வைக்க மிகப் பொருத்தமானதாகும்.

இத்தகைய ஆன்மீக சேவைகள் இன்னும் பல செய்ய அன்பர் திரு. நா. முத்தையா அவர்களுக்கு ஆண்டவன் அருள்புரியப் பிரார்த்திக்கின்றேன்.

72, ஆனந்தக்குமாரசுவாமி மாவத்தை, கொழும்பு-7. 09-12-80.

ம. க. விஜயசுந்தரம்
உப தலைவர் - இ. தொ. கா.

★★★

# இரண்டாம் பதிப்புரை

1980ஆம் ஆண்டுக்குரிய சாகித்தியமண்டலப் பரிசைப் பெற்ற இந்த நூல் கல்விப் பொதுத் தராதரப் பத்திர வகுப்பு இந்து நாகரிகத்திற்கான உசாத்துணை நூலாகவும் அனுமதிக்கப்பட்டுள்ளது. இந்த நூலின் முதலாவது வெளியீடு, கலைமகள் ஆசிரியர் திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்களின் தலைமையில் சென்னையில் நடைபெற்றது. இந்தியாவில் ஆயிரம் புத்தகங்கள்வரை செலவாகியபடியினால் இந்த நூலுக்கு இலங்கையில் தட்டுப்பாடு ஏற்பட்டுவிட்டது. ஆகவே இந்த இரண்டாம் பதிப்பை இப்பொழுது அச்சேற்றும் அவசியம் ஏற்பட்டுள்ளது. வாசகர்களும் விற்பனையாளர்களும் முந்திய நூல்களுக்கு ஆதரவு தந்ததுபோலவே இதற்கும் ஆதரவு தந்து உதவுவார்கள் என்பது நம்பிக்கை.

மஹாத்மா அச்சகத்தார் உரிய காலத்தில் இந்த நூலை அச்சேற்றித் தந்தமைக்கு என்றும் நன்றி உடையோம்.

"குரு பவனம்",
கண்டி வீதி,
சாவகச்சேரி.

நா. முத்தையா



# உள்ளே....



★★★

சிவமயம்

# ஈழத்துச் சித்தர்கள்

## தோற்றுவாய்

சித்தர்கள் என்ற சொல்லுக்கு சித்தி பெற்றவர்கள் என்பது பொருள். அதாவது வீடுபேறு அடைந்தவர்கள் என்றே கூறலாம். இந்த உடல் இருக்கும்போதே முத்தி அடைந்தவர்களை ஜீவன் முத்தர்கள் என்று அழைப்பர். சித்தன்வாழ்வு என்பது முருகப் பெருமானது கோயில். தமிழகத்தில் திருவாவினன்குடிக்கு முற் காலத்தில் சித்தன்வாழ்வு என்று பெயர் இருந்தது. திருமுருகாற்றுப் படை உரையில் திருவாவினன்குடியைப்பற்றிக் கூறுமிடத்து நச்சினார்க் கினியர் "சித்தன் வாழ்வென்று சொல்லுகின்ற ஊர் முற்காலத்து• ஆவினன் குடியென்று பெயர் பெற்றதென்றுமாம். அது சித்தன் வாழ்வு இல்லந்தொறும் மூன்றெரியுடைத்து என்று ஔவையார் கூறியதனால் உணர்க" என்று கூறுகிறார். எல்லாம் வல்ல சித்தனாகச் சிவபெருமான் திருவிளையாடல் புரிகின்றார் என்று புராணங்கள் கூறுகின்றன.

சிவபெருமான் எல்லாம் வல்ல சித்தராகி கல்லானைக்குக் கரும் பருந்திய செய்தியை நாமெல்லாம் திருவிளையாடற் புராணத்தில் படிக்கின்றோம். கடவுளைக் காண முயல்கின்றவர்களைப் பக்தர்கள் என்றும், கண்டு தெளிந்தவர்களைச் சித்தர்கள் என்றும் தேவாரம் வேறுபிரித்துக் கூறும். அட்டமாசித்திகளும் கைவரப்பெற்றவர்கள் சித்தர்கள். அணுவைப்போலச் சிறிதாதல் – அணிமா. மேருவைப் போலப் பெரிதாதல் – மகிமா. காற்றுப்போல லேசாதல் – இலகுமா. பொன்போலப் பளுவாதல் – கரிமா. எல்லாவற்றையும் ஆளுதல் – பிராப்தி. எல்லாவற்றையும் வசப்படுத்தல் – வசித்துவம். கூடு விட்டுக் கூடு பாய்தல் – பிரகாமியம். விரும்பியதை எல்லாம் செய்து முடித்து அனுபவித்தல் – ஈசத்துவம் என்ற எட்டு வகைப் பெரும்பேறுகளை அஷ்டமாசித்திகள் என்பர். சித்தர்களுக்குச் சாதி சமய பேதம் எதுவும் இல்லை. அவர்கள் எல்லா உயிர்களிலும் இறைவனைத் தரிசித்தவர்கள்.

அட்டமா சித்திகளைப் பெற்றவர்கள் பதினெண்மர் என்பர். அகத்தியர், போகர், கோரக்கர், கைலாசநாதர், சட்டைமுனி, திருமூலர், நந்தி, கூன்கண்ணர், கொங்கணர், மச்சமுனி, வாசமுனி, கூர்மமுனி, கமலமுனி, இடைக்காடர், புண்ணாக்கீசர், சுந்தரானந்தர், உரோம ரிஷி, பிரமமுனி ஆகியவர்களே அந்தப் பதினெண்மரும் ஆவர். இவர்கள் யாவரும் பாரத நாட்டைப் பிறப்பிடமாகக் கொண்டவர்கள். காலத்தால் மிகமிக முந்தியவர்கள்.

ஈழத்திலேயும் இத்தகைய சித்தர்கள் வாழ்ந்துள்ளார்கள் என்பதை வரலாற்று ரீதியாகவும் கர்ண பரம்பரைக் கதைகள் மூலமாகவும் அறியக்கிடக்கின்றது. லிமூறியாக் கண்டம் இருந்த காலத்திலே அதாவது இந்து சமுத்திரம் தரைப் பரப்பாக இருந்த காலத்திலே, ஈழமும் பாரத நாடும் ஒன்றுசேர்ந்திருந்தன என்று கூறப்படுகின்றது. வடஇந்தியாவில் 84 சித்தர்கள் இருந்ததாகச் சொல்லப்படுகின்றது. "நிலந் தொட்டுப் புகார்; வானமேறார்; விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்" எனக் குறுந்தொகை மூன்று சித்திகளைக் கூறுகின்றது; இதனைக்கொண்டு சங்க காலத்திலும் சித்தர்கள் இருந்தார்கள் என்று எண்ண இடமுண்டு.

ஈழத்திலே 18ஆம் 19ஆம் 20ஆம் நூற்றாண்டுகளிலே வாழ்ந்த ஒருசிலருடைய வாழ்க்கை வரலாறுகள்தான் எமக்குக் கிடைத்துள்ளன. இச்சித்தர்களுடைய வாழ்க்கை ஈழநாட்டையும் தமிழகத்தையும் ஒன்றுபடுத்திக் காட்டுகின்றது. புத்த பெருமானுடைய வரவும் தோற்றமும் ஈழத்தில் வாழ்ந்த சிங்கள மக்களுடைய அகவாழ்விலே பெரியதொரு மாற்றத்தை உண்டாக்கியதுபோன்று ஈழத்துச் சித்தர்களுடைய தோற்றத்தினால் ஈழத் தமிழ் மக்களுடைய அகவாழ்விலே பெரியதொரு மாற்றம் ஏற்பட்டதைக் காணமுடிகின்றது. இன்றைய மனிதன் புறவாழ்வைப்பற்றி மாத்திரமே சிந்திப்பதனால்தான் உலகில் இத்தனை இன்னல்களும் தோன்றிஉள்ளன. மனிதன் என்று அகவாழ்வைப்பற்றிச் சிந்திக்க மறந்தானோ, அன்றே அவன் மிருக வாழ்க்கையின் நிலைக்கு இறங்கிவிட்டான். புறவாழ்வு என்பது உண்பதும் உறங்குவதும் உணவு தேடுவதும் இனத்தைப் பெருக்குவதுமான வாழ்க்கை. இத்தகைய வாழ்க்கை மிருகங்களிடத்தும் காணப்படுகின்றன. பத்துப் பசுக்களை எடுத்து ஆராய்ந்து பார்த்தால், பத்துப் பசுக்களிடமும் பசுவின் குணத்தையே காணலாம். பத்துப் புலிகளை எடுத்து ஆராய்ந்து பார்த்தால், பத்துப் புலிகளிடமும் புலியின் குணத்தையே காணலாம்; ஆனால் பத்து மனிதரை எடுத்து ஆராய்ந்தால் பத்து மனிதரிடமும் மனிதக் குணத்தைக் காண முடியாது; பசுவைப் புலியாக்க முடியாது. புலியைப் பசுவாக்க முடியாது. ஆனால் மனிதன் புலியாகவும் வாழலாம்; பசுவாகவும் வாழலாம்; மனிதனாகவும் வாழலாம்; தேவனாகவும் வாழலாம்.



சமயவாழ்க்கையின்றி மனிதன் மனித வாழ்க்கை வாழ முடியுமென்று கனவு காணுகிறான். அதன் பலன்தான் இன்றைய மனிதனுடைய மிருக வாழ்க்கையாகும். கலாசாரம் என்றொரு சொல் இன்று எல்லார் நாவிலும் உதிப்பதைக் காணுகின்றோம். அகச் சீர்திருத்தம், புறச் சீர்திருத்தம் ஆகிய இரண்டையும் அகப்படுத்தி நிற்பதே கலாசாரத்தின் பூரண இலக்கணமாகும். சித்தர்கள் புறச் சீர்திருத்தத்திற்கு முக்கியத்துவம் அளித்தாரில்லை. அகச் சீர்திருத்தத்திற்கே முக்கியத்துவம் கொடுத்து வாழ்ந்துள்ளார்கள். இந்நிலைக்கு மனிதன் தள்ளப்பட்டுவிடுவான் என்று கருதியே நம் முன்னோராகிய சித்தர்கள் புறச் சீர்திருத்தத்திற்கு அவ்வளவு முத்கியத்துவம் கொடுக்கவில்லை. உட்சுவர் இருக்கப் புறச்சுவர் பூசுவதா? என்ற பழமொழி தமிழர் வாழ்க்கையில் எப்பொழுதோ கேள்விக்குறியாகி விட்டது.

சமயத்தை இழந்து நமது சமூகம் வாழ முற்படுதல் உயிரை இழந்தபின் உடல் வாழ்க்கைக்கு முக்கியத்துவம் கொடுப்பது போலாகும். பட்ட மரத்திற்குத் தண்ணீர் ஊற்றித் தழைக்கவைப்பது போலாகும்.



# கடையிற் சுவாமிகள்

பாரத நாட்டில் நான்கு திசைகளிலும் நான்கு பெரும் ஆச்சிர மங்கள் இருக்கின்றன. வடக்கே ஸ்ரீ சிவானந்த ஆச்சிரமம், தெற்கே ஸ்ரீ ரமணச்சிரமம், கிழக்கே ஸ்ரீ அரவிந்தாச்சிரமம், மேற்கே ஆனந் தாச்சிரமம். இதுபோன்று ஈழத்திலும் நான்கு பெரும் திசைகளிலும் நான்கு பெரும் சமாதிக் கோயில்கள் இருக்கின்றன. வடக்கே யாழ்ப் பாணத்தில் நீராவியடியில் கடையிற் சுவாமிகள் சமாதியும், தெற்கே தாவலப்பிட்டி, குயீன்ஸ்பரியில் நவநாத சித்தரின் சமாதியும், மேற்குத் திசையில் கொழும்பு முகத்துவாரத்தில் பெரியானைக்குட்டி சுவாமிகளின் சமாதியும், கிழக்குத்திசையில் காரைதீவில் சித்தானைக்குட்டி சுவாமி களின் சமாதியும் விளங்குகின்றன.

பாரத நாட்டிலிருந்து ஈழம் வந்த இந்த நான்கு பெரும்மகான் களின் பரம்பரை ஒன்று இன்று ஈழம் முழுவதிலுமே காலூன்றிப் பரவிஉள்ளது. இந்த நால்வரில் முதல்முதல் ஈழத்திற்கு வந்தவர் கடையிற்சுவாமிகள் ஆவர். ஆதிகடைநாதன் என்று ஆராஅன்புடன் கொண்டாடப்படும் அருள் வள்ளலாகிய யாழ்ப்பாணம் கடையிற் சுவாமிகள், இலங்கையில் ஒரு அருட் பரம்பரைக்கு மூல வித்திட்ட குருமுதல்வராவர்.

சுவாமிகள் தென்னிந்தியாவிலுள்ள பங்களூரில் ஒரு நீதவானக இருந்தவர்கள். ஒரு கொலை வழக்கில் குற்றவாளிக்குத் தூக்குத் தண் டனை விதிக்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டது. யூரிமார் ஏகமன தாகக் குற்றவாளியைக் கொலைகாரன் எனத் தீர்ப்புக் கூறினர். நீதவா னுடைய உள்ளம் குற்றவாளியைக் கொலைகாரனுக ஏற்றுக்கொள்ள வில்லை. மனச்சாட்சி என்று சொல்வார்களே, அது நீதவானின் உள்ளே நின்று பேசியது. இவனா நானா? என்ற விசாரணை எழுந்தது. அவ னுக்குத் தூக்குத் தண்டனை விதிக்க எனக்கு என்ன உரிமை உண்டு. இவ்விசாரணை நான் ஆர்? என் உள்ளம் ஆர்? ஞானங்கள் ஆர்? என்னை யார் அறிவார்? என்ற அளவிற்கு நீண்டு சென்றது. ஈற்றில் நீதவான் உத்தியோகத்திற்கு ஒரு முழுக்குப் போட்டார். குருவை நாடினுர். குருவின் கடாட்சம் கிடைத்தது. ஜீவன் முத்தராம் பேறு பெற்றார். சுவாமிகளை யோகியர், துறவியர், சித்தர், முனிவர், தெய் வீகபுருடர் எனப் பல்லாயிரவர் பக்தியுடன் போற்றிப் பரவி வாழ்த் தார்கள். சுவாமிகள் முத்தியானந்தா என்ற தீக்ஷாநாமம் பெற்று விளங்கினர்கள்.



சுவாமிகளுடைய பூர்வாச்சிரம வரலாறு அறிந்துகொள்ள முடிய வில்லை. அது அவசியமும் அல்ல. எந்த மகானும் பூர்வாச்சிரம வர லாற்றைப் பிறருக்குக் கூற விரும்புவதில்லை. இக்காரணம் கருதியே ஒருவன் பிறந்த ஊரில் சந்நியாசி ஆகக்கூடாது என்ற கருத்தும் நிலவிவருகின்றது. மைசூர் சிருங்கேரி மடத்தின் சங்கராச்சார்ய பீடத்தில் 32-வது தலைவராக வீற்றிருந்து 1817-ம் ஆண்டுதொடக் கம் 1879-ம் ஆண்டுவரையில், அருட் செங்கோலோச்சிய அற்புத ஞானசித்தர் ஸ்ரீ நரசிம்மபாரதியாகும். இவர் இணையற்ற ஆத்மசித்தி கைவரப்பெற்றவர். பல ஞானிகளையும், யோகிகளையும், சித்தர்களை யும், சீவன்முத்தர்களையும் சிருஷ்டிக்கக்கூடிய அற்புத சக்தி வாய்ந் தவர். தமது அறுபத்திராண்டு திருவருள் ஆட்சிக் காலத்தில் நாற்பது ஆண்டுகளைத் திக்கு விஜயத்தில் கழித்தவர். அதிலும் இறு திக் காலம் பன்னீராண்டைத் தமிழ் நாட்டின் ஆன்மீகப் பணிக்கே அர்ப்பணித்தவர். தமது உத்தம சீடரும் தம்மைப்போல் ஞான சித்தருமாகிய ஸ்ரீ சச்சிதானந்தசிவா அபிநவநரசிம்மருடன் ஊர் ஊராய்க் கிராமம்கிராமமாய்ச் சென்று மக்களுக்குச் சமய மறு மலர்ச்சியை உண்டாக்கினர்கள். இத்தகைய ஒரு சந்தர்ப்பத்திலே தான் நீதவான் சுவாமி முத்தியானந்தர் ஆனர்

எங்கள் ஈழவளநாடு சிவபூமி என்பது திருமூலர் கருத்தாகும்.

''இடைபிங்கலை யிமவானே டிலங்கை
நடுநின்ற மேருநடுவாஞ் சுழுமுனை
கடவுந் தில்லைவனங் கைகண்டமூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமன்றே.''

என்பது திருமந்திரம். அகத்துக் காணப்படும் இடைகலை, பிங்கலை இரண்டும் புறத்து முறையே பொன்மலையாகவும் இலங்கையாகவும் கொள்ளப்படும். நடுநாடியாகிய சுழுமுனை தில்லைவனம் எனப்படும். நடுநாடியே எல்லாவற்றையும் நடத்துகின்றது. அதுபோல் புறத்துத் தில்லைவனம் பொன்மலை முதல் இலங்கையீருகக் கொள்ளப்படும் நில மனைத்தையும் நடுநின்று நடத்துகின்றது. அதனல் ''கடவும் தில்லை வனம் கைகண்டமூலம்'' என ஓதியருளினர். எங்கணும் நீக்கமற நிறைந்தொன்றி நிற்பவன் படர்வொன்றியாவன். அவனே பரமாம். பரமுமாவன் என்பது பாடலின் பொருளாகும்.

அந்தக் காலத்திலே இலங்கையின் வடபாகத்திலே ஊர்காவற் றுறை முக்கிய துறைமுகமாக விளங்கியது. பெரிய பாய்மரக் கப்பல் கள் இந்தியாவிலிருந்து இலங்கையை நோக்கி வந்த காலம். நாக பட்டினத்திலிருந்து இலங்கையை நோக்கிப் புறப்பட்ட கப்பல்களுக்கு முதன்முதல் தெரிந்த இடம் எழுவைதீவாகும். அதற்குரிய பெயரும்

இக்காரணங்கொண்டே அமைந்தது. இத்தகைய கப்பல் ஒன்றில்தான் முத்தியானந்தர் ஊர்காவல்துறையை வந்து அடைந்தார். ஊர்காவல் துறையிலிருந்து கால்நடையாகவே யாழ்ப்பாணம் நோக்கி வந்தார். வரும்போது சுவாமிகள் முதன்முதல் தங்கி இருந்த இடம் மண்டைதீவாகும்.

சுவாமிகள் இங்கு வருவதற்கு மூலகாரணராக அமைந்தவர் யாழ்ப்பாணத்தை வசிப்பிடமாகக்கொண்ட வயிரமுத்துச் செட்டியாராவர். இவர் அடிக்கடி இந்திய யாத்திரை செய்யும் வழக்கம் உடையவர். ஒரு தடவை வயிரமுத்துச் செட்டியார் இந்தியாவில் இருந்தபோது முத்தியானந்தருடைய தரிசனை கிடைக்கப்பெற்ருர். இக்காலத்தே பாரத நாட்டில் பல மகாத்மாக்கள் ஆங்காங்கு தோன்றினர். அவர்களுள் சதாசிவப்பிரமேந்திரர், சுயம்பிரகாசப்பிரமேந்திரர், சுந்தர சுவாமிகள், அப்பையசிவம், திருவருட்பிரகாசவள்ளலார், இல்லற ஞானியாரான ராஜு சாஸ்திரிகள் முதலானேரை முக்கியமாகக் குறிப்பிடலாம்.

இத்தகைய பெரியார்கள் எல்லாம் பாரத நாட்டில் வழிகாட்டிகளாக இருக்க, நமது நாட்டில் ஒருவருமே இல்லை என்பதுதான் வயிரமுத்துச் செட்டியார் அவர்களுடைய கவலை. அதே காலத்தில் ஈழத்திலும் சமய மறுமலர்ச்சியும், அடியார் பணியும் தலைசிறந்து விளங்கியதைக் காணுகின்ருேம். ''அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தலே மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்'' என்ற கொள்கை சென்ற நூற்ருண்டின் பிற்பகுதியில், யாழ்ப்பாணக் குடாநாட்டின் நாலாபக்கங்களிலும் பரவியிருந்தது என்பதற்குச் சான்றுகள் பல இருக்கின்றன. எந்த ஏழையின் வீட்டிலும் பிடியரிசி போட்டுவைக்கும் பழக்கம் இருந்தது. ஒரு குறிப்பிட்ட அளவு அரிசி சேர்ந்ததும் கோயிலிலோ மடங்களிலோ கொண்டுசென்று சோறு ஆக்கி அன்னதானம் அடியார்களுக்கு அளிக்கும் வழக்கம் இருந்து வந்துள்ளது. அதன் உயர்ந்த பயனை இன்றுளார் யாரும் அறியார்.

இத்தகையதொரு சூழ்நிலையில்தான் முத்தியானந்தரை வயிரமுத்துச் செட்டியார் ஈழத்திற்கு வருமாறு அழைத்தார். சுவாமிகளும் தடை சொல்லாது வயிரமுத்துச் செட்டியாரை ஆட்கொள்வதற்காகக் கப்பலில் புறப்பட்டுவிட்டார். மண்டைதீவு சென்ற சுவாமிகள் தங்கியிருந்து உண்டுறங்கிச் சென்ற பழைய இல்லம் ஒன்று இன்றும் அங்குள்ளது. சுவாமிகள் பேணி வைத்திருந்த பொருட்களுள் சில இன்றும் அங்குள்ளன. சுவாமிகளுடைய திருவடி தீண்டப்பெற்றமையினுல் மண்டைதீவிலும் பல மகான்கள் தோன்றினுர்கள்.



யாழ்ப்பாணம் சென்ற சுவாமிகள் பெரிய கடையையே தமது வசிப்பிடமாகக் கொண்டார்கள். அதனுல் மக்கள் எல்லோரும் கடையிற் சுவாமிகள் என்று அழைக்கத் தொடங்கினர். அப்பெயரே நிலைத்துவிட்டது. சுவாமிகளுடைய அக்காலத் தோற்றத்தை அவரது சீடர்களுள் ஒருவரான குழந்தைவேற் சுவாமிகள்,

''பெரியகடைநாதன் பித்தன் திருக்கோலம்
கரியவர்ணச் சீலை கருந்தோலன சால்லை
துரியா தீதப் பொட்டுத் துலங்க நடைமெட்டுச்
சரியாயறிந்தேத்தித் தழைத்தாட்படுவீரே''

என்ற பாடல்மூலம் தெரிவிக்கின்ருர்கள்.

ஒருநாள் வெள்ளிக்கிழமை, செட்டியார் நல்லூர்க் கந்தசுவாமி கோயிலுக்குச் சென்றிருந்தார். தமது குருநாதனைத் தமக்குத் தந்துவிடல்வேண்டும் என்பதே செட்டியாருடைய வேண்டுதலாக இருந்தது. அன்றைய வழிபாட்டில் செட்டியார் பூரண நிறைவு பெற்றிருந்தார். செட்டியார் மிகுந்த மகிழ்ச்சியுடன் வீடுதிரும்பிக்கொண்டிருக்கின்ருர்.

செட்டியார் வீட்டிலே சமையல் முடியுந் தறுவாயில் இருந்தது. அத்தருணம் சுவாமியார் ஒருவர் புகுந்தார். சுவாமியாரைக் கண்டதும் அம்மையார் அகமும் முகமும் மலர வரவேற்ருர். சுவாமியார் பசி தாங்க முடியவில்லை; உடனே உணவு பரிமாறவேண்டும் என்ருர். அம்மையார் சிறிது தயங்கினுர். கணவர் வரவில்லையே என்பதுதான் தயக்கத்திற்குக் காரணம். அதற்காகக் காத்திராது ஆசனம் அமைத்து உணவு உண்பதற்காகச் சாமியாரை அழைத்தார். சுவாமியாரும் உடனே எழுந்து இலைமுன் உட்கார்ந்து இன்னும் ஒரு இலை போடுமாறு பணித்தார். இரு இலைகளுக்கும் உணவு பரிமாறி முடியச் செட்டியாரும் வந்தார். அன்று கும்பிட்ட பயனைக் கையோடேயே கண்டுகொண்டார். குருவருளும் சீடர் அன்பும் ஒருங்கு கலந்துவிட்டன.

செட்டியார் உடல், பொருள், ஆவி மூன்றையும் குருநாதனுக்கே தத்தம் செய்தார். அத்தருமசாதனம் இன்று கந்தர்மடத்தில் அன்ன சத்திரம் என்ற பெயரோடு விளக்கம் உற்றுள்ளது. அங்கேதான் சுவாமிகளுடைய சீடர் சின்னச்சாமி அவர்களுடைய சமாதி உள்ளது. நாம் முன்பு குறிப்பிட்ட குரு பரம்பரையிலிருந்து இன்னும் இருவர் வந்துள்ளனர். ஒருவர் சின்மயானந்தர். அடுத்தவர் நிரஞ்சனுனந்தர். இங்கு சுவாமி சின்மயானந்தர் பரம்பரையில் வந்தவரே சார்ஜன்

சுவாமி, பரம்பரையினர். இப்பரம்பரையில் வந்தவர்களே கந்தர் மடத்து வேதாந்த மடத்தைச் சேர்ந்தவர்கள். சுவாமி நிரஞ்சனுனந்தர் கிரிமலையிற் பரமகுரு சுவாமிகள் என்ற பெயரோடிருந்து குழந்தைவேற் சுவாமிகளுக்குக் குருவாய் விளங்கியவர்.

கடையிற் சுவாமிகளுடைய பெருமை பெரியகடையைச் சூழ உள்ள வணிகப் பெருமக்களிடையே சிறிது தெளிவாகியது. சுவாமிகளைக் குழந்தையாகப் பாவித்து அவருக்கு அன்னங் குழைத்து ஊட்டிய சின்னுச்சிப்பிள்ளை அம்மையார், ஸ்ரீ அருளம்பல சுவாமிகளின் தாயார் ஆவர். அம்மையாரின் கடைக்குட்டியான அருளம்பலம் மூன்று வயதுப் பாலகனுய் சுவாமிகளுக்கு அருகிலிருந்து அவர் உண்ணும்போது அவருடைய உணவில் பங்கெடுப்பதுண்டு.

தம்மை அடைந்த மெய்யடியாரிடையே சாதிபேதம், உயர்வு தாழ்வு, செல்வர் வறியவர் என்ற வித்தியாசம் பாராது எல்லாருக்கும் ஒரேவித கருணைகாட்டி அவர்களது உடல் நோய்க்கும் உளநோய்க்கும் வறுமைக்கும் பரிகாரம் செய்வதில் அநுக்கிரகங்காட்டத் தொடங்கவே அடியார் கூட்டம் பெருகியது.

ஏழைகளின் இல்லங்கட்கும் எழுந்தருளுமாறு அழைப்புகள் அதிகரித்தன. அதற்கிணங்கிச் சென்றபோதெல்லாம் அவர்கள் அவருக்குத் தாம் வழக்கமாகப் பாவிக்கும் மச்ச மாமிசம் மது சேர்ந்த விருந்தையே அளித்தனர். விருப்பு வெறுப்பு அற்றவரான சுவாமிகள் அவற்றையும் ஏற்றனர். தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நின்ற அருட்பெரியோனின் இந்த முறை வைதீகச் சிறுவர்களிடையே குரோதத்தையும் விஷமத்தையும் உண்டாக்கியது. அவர்களையும் அப்பன் தடுத்தாட்கொண்ட தன்மை அற்புதத்தின் அற்புதமாகும்.

கடையிற் சுவாமிகளுடைய உத்தம சீடர்களுள் ஒருவரும், யோகர் சுவாமிகளின் குருநாதருமான நல்லூர் செல்லப்பா சுவாமிகளுக்கே, தமது குருநாதன் மதுபானம் அருந்துகிருர் என்பதைப் பிறர் சொல்லக் கேட்கச் சகிக்கமுடியவில்லையாம். அது அவரால் நம்பமுடியாத விஷயமாகவும் இருந்ததாம். நேரே பரிசோதிக்கக் கருதி ஒரு போத்தல் சாராயத்துடன் குருநாதரைத் தேடிப் பெரியகடை சென்ருர். போத்தலைச் சால்வையில் சுற்றி மறைத்துக்கொண்டு அருகில் உட்கார்ந்ததும், "ஓகோ நீயும் எனக்குச் சாராய விருந்தளிக்க விரும்பிவிட்டாயா? சரி, பின்னுலே மறைத்து வைத்திருக்கும் போத்தலை எடுத்துத் திற. நீயும் நானும் இங்கிருக்கும் அன்பர்களும் எல்லாரும் பகிர்ந்து குடிப்போம்" என்ருராம். நடுக்கத்துடன் செல்லப்பா சுவாமிகள் போத்தலை முன்வைத்துத் திறந்ததுமே, திராவகம் முழு



வதுமே ஆவியாக மாறிக் காற்ருேடு கலந்துவிட்டதாம். சீடர், குருநாதரின் பாதங்களை இறுகப் பிடித்துக் கண்ணீராற் கழுவிவிட்டு நல்லூர்த் தேரடிக்குத் திரும்பிவிட்டாராம்.

சடைவரத சுவாமிகள் என்பவர் எட்டுவயதுச் சிறுவனுயிருந்தபோது, வேறு பல பிள்ளைகளுடன் சுவாமிகளைப் பார்க்கச் சென்றிருந்தார்கள். கடையிற் சுவாமிகள் அவரைக் கண்டமாத்திரத்தே ஆனந்தக் கூத்தாடி அவரைத் தனியாக அழைத்துச் சென்று கட்டிப்பிடித்துக் கொஞ்சித் தம் தலையிற் கிடந்த தொப்பியைக் கழற்றி அவர் தலையிற் சூட்டி ஆனந்தித்தார்கள். இவ்வருள் நிகழ்ச்சிக்கு உதவியாயிருந்த அத்திருத்தொப்பி இன்றும் மண்டைதீவில் உள்ளதென்று சொல்லப்படுகின்றது.

சுவாமிகள் பிசாசுபிடித்தவர் போலவும் பைத்தியம்பிடித்தவர் போலவும் பெரியகடைத் தெருவழியே போன காலங்களில் அவரின் போக்கினைப் பிழையாகக் கருதிய நகர்காவலர்கள், அவரைக் கொழும்புக்கு அனுப்பி மனநோய்க்கு வைத்தியம் செய்யத் தீர்மானித்தனர். அங்ஙனமே அவர்கள் சுவாமிகளை நீதிமன்றத்தில் காட்டி நீதிபதியின் உத்தரவின்வண்ணம் கொழும்புக்கு ஏற்றிச் செல்வதன்முன் பொலிஸ் நிலையத்தில் ஓர் அறையில் பூட்டிவைத்தனர். அடுத்தநாள் சுவாமிகளைக் கொழும்புக்கு அழைத்துச் செல்வதற்கு அறைக் கதவைத் திறந்து பார்த்தபோது அங்கே சுவாமிகள் இருக்கவில்லை. அவர் பழையபடி கடை வீதிகளில் உலாவித் திரிந்தார்கள். இதனுல் நகர் காவலரிற் பலர் சுவாமிகளின் அருமை பெருமைகளை அறிந்து அவரிடம் பக்திகொண்டொழுகுவாராயினர். அவர்களில் ஒருவர் கந்தர் மடத்துக் கந்தபுராண வீதியில் வசித்துவந்த சின்னத்தம்பி என்னும் சார்ஜனுவர். அவரே பிற்காலத்தில் சார்ஜன் சுவாமிகள் என்று அழைக்கப்பட்டவராவர்.

பெரிய கடையில் மிகப் பெரிய புடவைக் கடைக்காரர் ஒருவர் ஒரு தீபாவளித் தினத்திலே சுவாமிகளை இடைமறித்து விலையுயர்ந்த பட்டாடை ஒன்றை அவர் தோளிற் போர்த்து, மேனியிற் சந்தனம் முதலிய வாசனைகள் பூசி, மலர்மாலை அணிவித்து, மகிழ்ந்து வணங்கினுர். சுவாமிகளும் அவர் வழிபாடுகளை ஏற்றுக்கொண்டவர்போல் நடித்தார்கள். அவ்வேளை அவ்வழியே தீண்டாச் சாதியான் ஒருவன் சென்ருன். சுவாமிகள் அவனை அவசரமாகத் தம்மருகே வரும்படி கையசைத்தார். அதனை உணர்ந்த அம்மனிதன் அஞ்சி ஒதுங்கித் தயங்கி நின்ருன். உடனே சுவாமிகள் தன் தோளிற் கிடந்த பட்டாடையைக் கழற்றி அவன் தோளிற் போர்த்து ''முற்பிறப்பிலே நேபாள ராசா நீ போ'' என்று கூறிவிட்டுத் தம்வழியே சென்ருர்கள்.

சுவாமிகள் பெரியகடைப் பகுதியே அல்லாமல் மண்டைதீவுக்கும் போய்வரும் வழக்கம் உள்ளவர்கள். அதனால் மீனவரிடையேயும் அவரை வணங்கும் அடியார்கள் இருந்தார்கள். ஒருசமயம் சுவாமிகள் கரையூர்ப் பகுதியால் நடந்து போனபோது ஒரு கொட்டிலில் அழுகுரல் கேட்டது. அவ்வீட்டின் தலைவன் மீன் பிடிக்கப் போனபோது காற்றுப் பிசகால் கடலில் அலைந்து வழிதப்பி வீட்டுக்கு மீளவில்லை. அதனால் அவன் மனைவி மனமுடைந்து அழுததை அறிந்த சுவாமிகள் வீட்டினுள் புகுந்து வளையிற் சொருகியிருந்த பனைமட்டையை எடுத்து நடுவீட்டில் நின்று கூத்தாடி "ஏலையா ஏலவேலோ" என்று வள்ளம் வலிப்பதுபோல் செய்தார்கள். அங்ஙனம் கூத்தாடியபின் மட்டையை எறிந்துவிட்டு அப்பாற் சென்றார்கள். அவ்வேளை மீனவன் வீட்டுக்கு மீண்டு அங்கு நிலமெல்லாம் கிளறப்பட்டிருந்ததைக் கண்டு இது என்ன என்று கேட்டான். அதற்கு மனைவி "இது உன்னுடைய பைத்தியம் கூத்தாடியது" என்று கூறினாள். அதைக் கேட்ட மீனவன் உள்ளம் பூரித்து "என்னப்பன் அங்கே வள்ளம் வலித்தமாதிரி இருந்தது. இங்கேயும் இப்படியா?" என்று கண்ணீர் ததும்பினான்.

சுவாமிகள், அன்பர்கள் இல்லங்களில் அமுது செய்வது வழக்கம். அவர் செல்லுமிடமெல்லாம் அடியார்களும் பிறருமாகப் பலர் அவரைத் தொடர்ந்து செல்வார்கள். விருந்தளிப்போர் அவர் மனங்கோணாமல் வேண்டியபடியெல்லாம் ஆக்கிப் படைத்து அவர்களை மகிழ்விப்பார்கள். உணவுப் பிரியர்கள் சிலர் இதனைச் சாதகமாக்கிக் கொண்டு சிலநாள் தொடர்பாகச் சுவாமிகளைச் சூழ்ந்துகொண்டனர். ஒருநாள் சுவாமிகள் உணவு வேளைக்கு ஒரு வீட்டை நோக்கிச் செல்கையில் உணவுப் பிரியர்கள் பலர் அவரைத் தொடர்ந்து வந்தனர். வழியிலே மெழுகு உருக்கிக்கொண்டிருந்த ஒருவனிடம் சுவாமிகள் திடீரெனக் கையை நீட்டினார். அவன் தடுமாற்றம் அடைந்து உருக்கிக்கொண்டிருக்கும் மெழுகில் ஒரு அகப்பை அள்ளி அவர் கையில் ஊற்றிவிட்டான். பின்தொடர்ந்தவர்கள் மெல்லமெல்லப் பின்வாங்கினார்கள். சுவாமிகள் திரும்பி நின்று எல்லாருங் காண அதனைக் குடித்துவிட்டு 'வாருங்களேன், வாங்கிக் குடியுங்களேன்' என்றார்கள். பின்வாங்கியவர்கள் திரும்பி ஓட்டம் எடுத்தார்கள்.

கடையிற் சுவாமி உட்கொள்ளுகிறாரென்று மற்றவரும் மது, மாமிசம் புசித்தால் கடையிற் சுவாமி குடித்ததுபோல் உருக்கிய மெழுகையுமல்லவா உறிஞ்சிப் பருகவேண்டும். கண்ணப்ப நாயனார் கடவுளுக்கு இறைச்சியைப் படைத்தார் என்று இறைச்சி உணவைப் போற்றுபவர் கண்ணப்பரைப்போன்று கண்ணைக் கொடுப்பார்களா?

கடையிற் சுவாமிகள் பெரியகடைக்குள் அருள்நடனஞ் செய்யும் வேளையில் சிலவேளை சிலர் கடைக்குட் சென்று அங்குள்ள காசிற்



கையிடுவார். சுவாமிகளின் கைபட்டதிலிருந்து அக்கடைக்காரருக்குக் குருசந்திர யோகமாகிவிடும். இதுகண்டு சுவாமிகள் தம் ஒவ்வொருவருடைய காசிலுங் கையிடுதல்வேண்டுமென்று கடைக்காரர் தவங்கிடப்பர். ஆனால் எல்லார்க்கும் அவ்வருள் நிகழ்வதில்லை. சிலவேளைகளிற் கைநிறையக் காசுகொண்டு சுவாமிகள் பெரியகடைத் தெருவழியே விசரன்போக்கில் ஓடுவார்கள். பிள்ளைகள் பலர் அவரைத் தொடர்ந்தோடுவார்கள். திடீரென்று சுவாமிகள் திரும்பிநின்று கையிலுள்ள காசை வீசுவார்கள். சிறுவர்கள் விழுந்தடித்து அவற்றைப் பொறுக்குவதைப் பார்த்துநின்று ஆனந்த நடனம் செய்வார்கள். சுவாமிகளுடைய திருவடிப் பரிசம் பெற்று அவர்தம் நடன சுகத்தையும் அனுபவித்த பெரியகடை வீதியும் பெருந்தவப்பேறுடையது.

பெரியகடைச் சந்தி மூலையில் கந்தையாச் செட்டியார் மில் இருப்பதை யாரும் அறிவர். செட்டியாருடைய பாட்டியார் பொன்னம்மா அம்மையார். அம்மையார், சுவாமிகளிடம் அன்பு மிக்கவர். சுவாமிகளையும் அவருடன் வரும் அடியார்களையும் உபசரிப்பதில் எள்ளளவேனும் மனங் கோணாதவர். அவர்களுடைய வியாபாரத்தில் திடீரென நஷ்டம் ஏற்பட்டது. காணிபூமி எல்லாம் பறிபோனதோடு தாலியைத் தவிர மற்றைய நகைகள் எல்லாம் விற்பனையாகிவிட்டன. அன்றாடம் சாப்பாட்டிற்கே கஷ்டம் ஆக இருந்தது. ஒருநாள் சுவாமிகள் நூற்றுக்கணக்கான அடியார்கள் சூழ அம்மையாருடைய இல்லத்திற்கு எழுந்தருளினார். அம்மையார் அடியார்க்கு அன்னம் இடுவதையே பெருந்தொண்டாகக் கருதுபவர். தாலியைக் கழற்றிக் கணவனுடைய கையில் கொடுத்து வேண்டிய பொருட்கள் வாங்கிவருமாறு பணித்தார். அன்றைய தினம் நடைபெற்ற அடியார் உபசரணை மிகப் பிரமாதமாக இருந்தது. அடுத்தநாள் சுவாமிகள் தனியாக அங்கு எழுந்தருளினார்கள். அம்மையாரிடம் ஒரு இரும்புத்துண்டு கொண்டுவருமாறு கட்டளையிட்டார்கள். அம்மையார் பல இடங்களிலும் தேடி, கடைசியாக வளவின் அடிப்பக்கத்தில் மண்ணுள் மறைந்துகிடந்த கறள் பிடித்த இரும்புத்துண்டு ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். சுவாமிகள் அதன் கறளைஎல்லாம் போக்கி ஒரு பழைய துணியினால் சுற்றி அதனைப் பத்திரமாக ஒருபெட்டியில் வைக்குமாறு கூறினார்கள். அம்மையார் அதனைத் தமது பெட்டகத்துள் வைத்துப் பூட்டிவிட்டார்கள். நாலாவது நாள் ஒரு அவசிய தேவைக்காகப் பெட்டகத்தைத் திறந்தபோது அங்கே ஒரு ஆச்சரியம் காத்திருந்தது. இரும்பு பத்தரைமாற்றுச் சொக்கத்தங்கமாக மாறியிருப்பதைக் கணவனிடம் கூறினார். கணவனார் அதில் ஒரு துண்டை வெட்டி மாற்றுரைத்துப் பார்த்தார். உரைத்துப் பார்த்தவர்கள் ஏகோபித்த மனதுடன் பத்தரைமாற்றுச் சொக்கத்தங்கம்தான் என்று கூறினார்கள்.

இருவரும் சுவாமிகளுடைய கருணைத்திறனை வியந்து கண்ணீர் வடித்து நின்றார்கள்.

வல்வெட்டித்துறையை இருப்பிடமாகக் கொண்ட தண்டேல் என்பவர் சுவாமிகளுடைய சீடர்களுள் ஒருவராக விளங்கினார். ஒரு முறை சுவாமிகளைத் தேடி வண்ணார்பண்ணை சென்றார். சுவாமிகள் மண்டைதீவு சென்றதறிந்து அங்கு சென்றார். செல்லும் பாதை மணல் நிறைந்த வெளி. மத்தியான நேரம். காலும் உடம்பும் தலையும் வெப்பத்தினால் வெந்தன. வெப்பம் தாங்கமாட்டாது குருநாதா! என்று வாய்விட்டுக் கூவினார். அதேநேரத்தில் கொட்டிலில் படுத்திருந்த சுவாமிகள் எழுந்து, அகோரம்! அகோரம்! வெப்பந் தாங்க முடியவில்லை என்று கூறி குடை ஒன்றை விரித்துத் தமது கால் பக்கத்திற்குப் பிடிக்குமாறு அருகே இருந்த ஒரு அன்பரிடம் கூறினார். அவர் காரணம் அறியாது குடையைப் பிடித்தவண்ணமே இருந்தார். சுவாமிகள் சாய்ந்து படுத்துவிட்டார். யாரோ நடந்துவரும் சத்தம் கேட்டது. சுவாமிகள் உடனே, "குடை பிடித்ததுபோதும் சுருக்கிக்கொள்" என்றார். வந்த தண்டேல், சுவாமிகளுடைய பாதங்களில் பணிந்து சுவாமிகளுடைய கருணையை நினைந்து நினைந்து கண்ணீர் வடித்துநின்றார். குருவும் சீடனும் இருவரும் மாறிப்புக்கிதய மெய்திய இன்ப நிலையை அடைந்தனர்.

கடைசிக் காலத்திலே சுவாமிகள் வண்ணார்பண்ணையைச் சேர்ந்த நீராவியடியில் நிலையாக இருந்தார்கள். அவர்கள் வெளியே எங்கும் செல்வதில்லை. நீராவியடிப் பிள்ளையார் கோயிலின் தென்மேற்குத் திசையாகக் கோயில் எல்லையிலிருந்து சுமார் ஐம்பது யாருக்கப்பாலுள்ள ஒரு குடிசையில் சுவாமிகள் தங்கியிருந்தார்கள். அந்த இடத்திலே சமாதிநிலையும் கைகூடியது. சுவாமிகள் கர வருடம் புரட்டாதி மாசத்தில் பூரணையும் பூரட்டாதி நட்சத்திரமும் பொருந்திய புண்ணிய வேளையில் மகாசமாதி அடைந்தார். அந்திய காலத்திற் சுவாமிகளுடனிருந்த அன்பர்களுடைய பெருமுயற்சியால் சமாதிக் கோயில் ஒன்று எழுப்பப்பட்டுள்ளது.



## பரமகுரு சுவாமிகள்

சித்தானைக்குட்டி, பெரியானைக்குட்டி, நவநாதசித்தர் ஆகிய மூவரும் ஒரே காலத்தில் பாரத நாட்டிலிருந்து வந்ததுபோன்றதொரு செய்தியை வேறு மூன்று மகான்களும் பாரதத்திலிருந்து ஈழம் வந்ததாகக் கர்ண பரம்பரைச் செய்தி கூறுகின்றது. அவர்கள் சுவாமி சின்மயானந்தர், சுவாமி முத்தியானந்தர், சுவாமி நிரஞ்சனானந்தர் என்று அழைக்கப்பெற்றனர். அவருள் முத்தியானந்தரே கடையிற் சுவாமிகள் எனப் பெயர் பெற்றார். சுவாமி சின்மயானந்தர் பரம்பரையில் வந்தவர்கள் சார்ஜன் சுவாமி பரம்பரையினர். இப்பரம்பரையில் வந்தவர்களே கந்தர்மடத்து வேதாந்த மடத்தைச் சேர்ந்தவர்கள். சுவாமி நிரஞ்சனானந்தர் பரமகுரு சுவாமிகள் என்ற பெயரைத் தாங்கி நின்றவர்.

தேயிலைத் தோட்ட மக்கள் மத்தியில் யாராவது ஒரு மகான் தோன்றவில்லையா என்ற வினாவிற்கு விடையாகத்தான் பரமகுரு சுவாமிகள் வரலாறு விடை அளிக்கின்றது. சுவாமிகள் ஈழத்தின் மத்திய மலைநாட்டுப் பகுதியில் உள்ள ஒரு தோட்டத் தொழிலாளியின் மகனாக அவதரித்தார். இளமையிலேயே துறவு மனப்பான்மை வளர்ந்துவந்தது. இயல்பிலேயே தனிமையில் நாட்டம் கொண்டவர். மாத்தளையில் இருந்து திருக்கோணமலைக்குச் செல்லும் வீதியில் உள்ள காடுகளில் தனிமையை நாடி மூன்றாண்டுகள் தவம் செய்தார். தேயிலைத் தோட்டத்திற்குத் தொழிலாளராகக் கொண்டுவரப்பட்டவர்கள்

மாத்தளை வழியாகவே கொண்டுவரப்பட்டார்கள். மாத்தளை மலையகத்தின் நுழைவாயில் என்று கூறலாம். மாத்தளை மாரியம்மன் கோயிலின் தோற்றத்திற்கும் இப்பாதையாக வந்த தொழிலாளரே காரணராயினர்

சுவாமிகள் கண்டோரைக் காந்தமென இழுக்கும் கவர்ச்சியான தோற்றம் உடையவர். சுவாமிகளுடைய பூர்வாச்சிரம உறவினர்கள் சுவாமிகளைத் தம்மோடு சேர்த்துக்கொண்டு இலௌகிக வாழ்க்கையில் ஈடுபடுத்துவதற்குப் பெரும்பாடுபட்டனர். வறியவர், செல்வர், ஆடவர், பெண்டிர், பாலர், விருத்தர் என்ற பாகுபாடின்றி யாரும் வந்து எளிதிலே தரிசிக்கக்கூடிய தன்மை உள்ளவர். கோவண உடை தரித்துப் பச்சை நிறப் போர்வை ஒன்றைப் போர்த்திருப்பார். படிப்பறிவற்ற சூழ்நிலையிற் பிறந்தவரானாலும் மற்றவர்கள் மெச்சத் தகுந்த ஞான அறிவைப் பெற்றிருந்தார்.

சுவாமிகள் இந்தியாவிற்கும் அடிக்கடி சென்று வந்துள்ளார்கள். இந்தியாவில் கிடாரிப்பட்டி என்ற இடத்தில் சிலகாலம் தவஞ் செய்திருந்தார் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. இவரது உத்தம சீடரான குழந்தைவேற் சுவாமிகள் தாம் பாடிய குருதோத்திரப் பாடல்களில் "கிடாரிப் பருப்பதம் மேய பிரானே" என்று பரமகுரு சுவாமிகளைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். பெரியானைக்குட்டி சுவாமிகள் கண்டியிலே பிறந்து வளர்ந்து பின் பாரதநாடு சென்று ஞானநிலை அடைந்து மூவராக வந்ததுபோன்றே, இவரும் தேயிலைத் தோட்டத்திலே பிறந்து வளர்ந்து, பாரதநாடு சென்று ஞானியாகி நிரஞ்சனானந்தர் என்ற பெயரைப் பெற்று மூவராகி வந்துள்ளார்.

குழந்தைவேற் சுவாமிகளுக்கு உபதேசம் செய்விப்பதற்காகவே கடையிற் சுவாமிகள் தம்மருளால் பரமகுரு சுவாமிகளைக் கீரிமலைக்கு எழுந்தருளச் செய்திருந்தார். குழந்தைவேற் சுவாமிகள் ஒரு காலத்தில் கடையிற் சுவாமிகளுக்கும் பரமகுரு சுவாமிகளுக்கும் பணிவிடை புரிந்துவந்தார். பரமகுரு சுவாமிகள் மாத்தளை, கீரிமலை, கிடாரிப்பட்டி, மருதனைமடம் என்ற நான்கு பகுதிகளிலும் சஞ்சாரஞ் செய்துள்ளார் என்பதற்குத் தகுந்த சான்றுகள் இருக்கின்றன.

மருதனைமடத்தில் இப்பொழுது இராமநாதன் கல்லூரியிருக்குங் காணி அக்காலத்தில் வெறும்பனங்காடாக இருந்தது. சுவாமிகள் கௌபீனமும் பச்சைப் போர்வையுந் தரித்த கோலத்துடன் சில காலம் அப்பனங்காட்டில் தனிமையாக இருந்துவந்தார். பாசிப் பயற்றை அவித்துக் கஞ்சியாகப் பருகிவந்தார்.

தென்னிந்தியாவில் தஞ்சாவூரில் சிவஞானி ஒருவர் இருந்தார். அவரை இலக்கணம் இராமசாமிப்பிள்ளை என அழைப்பர். அவர்



சேர் அருணாசலம் அவர்களுடைய குருவாக விளங்கினார். சேர் அருணாசலம் அவர்கள் ஒருமுறை தமது குருநாதருக்கு எழுதிய கடிதத்தில், அப்போது கிடாரிப்பட்டியில் இருந்த பரமகுரு சுவாமிகளின் சுகம் பற்றி விசாரித்து எழுதியிருந்தார். இதிலிருந்து பரமகுரு சுவாமிகள் மீது சேர் அருணாசலம் அவர்கள் எத்தகைய மதிப்பும் அன்பும் வைத்திருந்தார்கள் என்பது புலப்படுகின்றது.

பரமகுரு சுவாமிகள் பேரால் காங்கேசன்துறையில் ஒன்றும் கீரிமலையில் ஒன்றுமாக இருமடங்கள் கட்டப்பட்டன. சேணிய தெருவில் சின்னத்தம்பி என்றொரு அன்பர் இருந்தார். இவர் சுவாமிகள் மீது மிக ஈடுபாடு கொண்டவர். தமது குருபக்தியை விளக்குமுகமாகவே இவ்விரு மடங்களையும் தாபித்தார். சுவாமிகள் கீரிமலையில் சமாதிஆக வேண்டும் என்ற பெருவிருப்பினாலேயே அன்பர் சின்னத்தம்பி அவர்கள் அம்மடத்தைத் தாபித்தார்கள்.

ஆனால் திருவுளச் சம்மதம் வேறாக இருந்துவிட்டது. சுவாமிகள் தமது சாதனைகளைப் பலப்படுத்துமுகமாகத் தேச சஞ்சாரம் அடிக்கடி செய்துள்ளார். சுவாமிகள் யாருடைய கட்டுப்பாட்டுக்குள்ளும் இருக்க விரும்பாதவர். காற்றைப்போலச் சுதந்திரமாக வாழ விருப்பங் கொண்டவர். காற்றும் மழையும் வெயிலும் யாருடைய கட்டுப்பாட்டுக்கும் அடங்கி இருப்பனவல்ல. அதுபோல அவரது சுதந்திர உள்ளமும் கட்டுப்பாட்டுக்குள் அடங்கிஇருக்க விரும்பவில்லை.

சுவாமிகள் தமது ஆத்மீக சாதனையை முன்னிட்டே இந்தியாவுக்கும் சென்றார். கிடாரிப்பட்டி என்பது மலைகள் சூழ்ந்த ஒரு அமைதியான இடம். சுவாமிகளை அங்குள்ளவர்களிற் பலர் அறியார்கள். ஈழத்தில் எங்கு சென்றாலும் சுவாமிகளை அறிந்தவர்கள் இருந்தார்கள். அறிமுகமானவர்கள் மத்தியில் சாதனைக்குப் பல விதத்தில் இடையூறுகள் நேரலாம். யாரும் அறியாத இடத்தில் இறைவன் ஒருவனை மாத்திரமே துணையாகக்கொண்டு சாதனை நிகழும். கிடாரிப்பட்டியில் பல மகான்கள் காலத்திற்குக்காலம் இருந்து தவம் செய்துள்ளார்கள். அவர்களுடைய தவசித்தியினால் அப்பகுதி ஆத்மீக அலை நிரம்பியதாகக் காணப்பட்டது.

சுவாமிகள் இளமையிலேயே தவராஜராக விளங்கியவரானபடியினால் அவரது தோற்றம் முருகப்பெருமானுடைய தோற்றப் பொலிவாக விளங்கியது. பல அன்பர்கள் அவரை முருகப்பெருமானாகப் பாவித்து பல குரு வணக்கப் பாடல்கள் பாடிஉள்ளனர்.

கூவிய சேவலி ஞலும் – குரு
வராகிய கோலத்திஞலும்
தூவிய மஞ்ஞை யிஞனுந் – துணை
யாகிய பாதத்திஞனு
மாவியை யாட்கொள்ளு வானு – மயி
லேறிய வந்தத்தி ஞனும்
பாவியை மீட்கவல் லானுங் – கிடாரிப்
பருப்பத மேயபி ரானே.

பரமகுரு சுவாமிகளின் சமாதி வைபவம் 1904ஆம் ஆண்டில் மாத்தளையில் நடைபெற்றது.

இது ஒருசிலருக்கு ஏமாற்றத்தையும் அளித்தது. என்றாலும் குழந்தைவேற் சுவாமிகள் தனது குருநாதனுடைய சமாதி மாத்தளையில்தான் நடைபெறஇருக்கிறது என்பதை உள்ளுணர்ந்து பன்னிரண்டு சீடர்களுடன் மாத்தளைக்குச் சென்று நாற்பது நாட்கள் தங்கியிருந்து பரமகுரு சுவாமிகளின் சமாதி வைபவத்திற் பங்குபற்றியுள்ளார். சேர். அருணுசலம் அவர்களே சுவாமிகளின் சமாதித் திருப்பணியை நிறைவேற்றியுள்ளார்கள்.



# குழந்தைவேற் சுவாமிகள்

கீரிமலையில் உள்ள ஊற்று நீரில் நகுல முனிவர் நீராடி கீரிமுகம் மாறப்பெற்றமையினுலும், மாருதப்புரவீகவல்லி என்னும் அரச குமாரி நீராடி அவளுடைய குதிரைமுகம் மாறப்பெற்றமையினுலும், கீரிமலைக்கு மிகப்பெரியதொரு தெய்வீகப் பெருமை ஏற்பட்டிருந்ததை யாரும் அறிவர். அதன் பின்பும் பலர் நீராடிப் பயன் பெற்றுள்ளனர். இன்றும் ஒருசிலர் அம்மகிமையை அநுபவித்துக்கொண்டே இருக்கின்றனர். இன்று இந்தப் பெருமையோடு இரண்டு பெரிய சமாதிகள் கீரிமலையின் பெருமையை மேலும் சிறப்புறச் செய்கின்றன. ஒன்று குழந்தைவேற் சுவாமிகளுடைய சமாதி. அடுத்தது சடையம்மா அவர்களுடைய சமாதி.

மிகப் பிரபல்யம் பெற்று விளங்கும் முருகன் திருக்கோயில்கள் எல்லாம் சமாதிக் கோயில்களாக அமைந்து விளங்குகின்றன என்று பெரியோர் கூறுவர். ஆதிசேடஞேடு போட்டியிட்டுக்கொண்டு வாயு பகவான் பிடுங்கிவிட்ட மேருமலைச் சிகரங்கள் மூன்றில் ஒன்று இந்து சமுத்திரத்தில் விழுந்தது. அச்சிகரத்தின் ஒரு பாகம் கடல்மேல் தோன்றிக் கீரிமலையாயிற்று என்பது புராண வரலாறு.

வேல் அணையாகப் பெற்றமையால் வேலணை என்னும் பெயருண்டானதெனக் கூறுவர். இத்தகைய வேலணை மேற்கில் சைவாசார அநுட்டானங்களிற் சிறந்த குடும்பங்கள் பல உண்டு. இக்குடும்பங்களில் சண்முகநாதன் தெய்வானைப்பிள்ளை குடும்பமும் ஒன்று. இக்குடும்பத்தினருக்கு அருமந்த பிள்ளையாக உதித்தவர்தான் குழந்தைவேற் சுவாமிகள். சிறிய வயதிலே பெற்ருர் "குழந்தைவேலா நடந்து வாடா" என்று இருபொருள்பட அழைப்பார்களாம். குழந்தை முருகப்பெருமானைப்போல அழகுள்ள குழந்தை. தந்தை சண்முகநாதன் முருகனுடைய பெயரைப் பெற்றவர். தாய் தெய்வானைப்பிள்ளை

முருகப்பெருமானுடைய இச்சா சக்தியின் பெயராகும். ஊரும் வேலணை. பேரும் குழந்தைவேல். எல்லாம் முருக மயமே. பிற்காலத்தில் பஜனைப் பாடல்களில் "குழந்தைவேலா நடந்து வாடா" என்ற அடி பாடப்பட்டு இன்றும் அவ்வரிகள் பக்தர்கள் நாவிலே தவழ்ந்து கொண்டிருக்கின்றது.

குழந்தைவேலரது பாலியப் பருவத்தில் அவரோடொத்த குழந்தைகள் தமது விளையாட்டுத் தலைவனாக அவரையே தெரிந்துஎடுத்து விளையாடினவாம். பிற்காலத்தில் அவர் ஒரு மகான் ஆகிப் பல அடியார்களுக்குத் தலைவனாக விளங்கப்போகிறார் என்பதற்கு அறிகுறி என்றே பெரியோர் கூறினர். உரிய காலத்தில் வித்தியாரம்பஞ் செய்யப்பெற்று, சமய தீட்சையும் பெற்று, சைவாசார அனுட்டான சீலராய் விளங்கினார். தமிழ் இலக்கிய இலக்கணத்திலும் ஆங்கிலத்திலும் சிறந்த புலமை உடையவராய் விளங்கினார். இக்காலக் குழந்தைகளுக்குத் தீட்சை பெற வாய்ப்பும் இல்லை; அனுட்டானம் செய்ய நேரமும் இல்லை. ஐந்து மணிக்கு எழுந்து கண்ணைத் துடைத்துக் கொண்டு ரியூசனுக்கு ஓடிச் செல்லவே அவர்களுக்குப் பொழுது சரியாகிவிடுகின்றது.

இவருடைய பரம்பரையில் உள்ள முன்னோர் அரசாங்க சேவையி வீடுபட்டு நேர்மையாக உழைத்தவர்கள். அந்தக் காலத்தில் பரம்பரையைப் பார்த்தே விதானை, மணியம், உடையார் போன்ற உத்தியோகங்களை அளித்துவந்தார்கள். அதனால் லஞ்சம் என்று சொன்னாலே நாக்கூசுபவர்களாக இருந்தார்கள். நேர்மைக்கும் நீதிக்கும் முக்கியத்துவம் கொடுத்தார்கள். மணிவாசகப்பெருமான் சிவபெருமானை "பங்கயத் தயனுமாலு மறியா நீதியே" என்று அழைக்கின்றார். நீதி உருவத்திலே இறைவனைக் காணலாம் என்பது அவர்களுடைய நம்பிக்கை.

டச்சுக்காரர் ஆட்சிக் காலத்திலே தீவேழு கோயிற்பற்றுக்கும் ஏக முதலியாராகத் திகழ்ந்தவர் வேலணையைச் சேர்ந்த இராசசேகர முதலியார் என்பவர். அவருடைய சந்ததியில் நான்காந் தலைமுறையில் உள்ளவர் குழந்தைவேலர். அத்தொடர்பிலே குழந்தைவேலருக்கும் அரசாங்க உத்தியோகம் ஒன்று காத்திருந்தது. அவருடைய தகுதிகேற்ற முதலியார் உத்தியோகந்தான் கிடைத்தது. உத்தியோகப் பொறுப்பேற்று முதலியாராகிக் குழந்தைவேலர் இலங்கையின் பல பாகங்களிலும் கடமை ஆற்றிவந்தார். வெளித் தோற்றத்திலேதான் அவர் பெயருக்கு முதலியாராக இருந்தார். உள்ளத்திலோ இறை சிந்தனை நிரம்பப்பெற்றவராக விளங்கினார். தாமரையிலைத் தண்ணீர் போலவும். ஓடும் புளியம்பழமும் போலவும் அவரது வாழ்க்கை அமைந்திருந்தது. என்றாலும் தன்மானம் உடையவராகத் திகழ்ந்தார்.



அநுராதபுரத்தில் முதலியாராக இருந்தபோது கதிரேசன் கோயில் ஒன்று கட்டித் தெய்வத் திருப்பணி செய்தார். ஒருமுறை இவருக்கு மேலே நீதவானாக இருந்த வெள்ளையர் ஒருவர் காரணம் இன்றி இவர்மீது கோபித்தார். அது காரணமாக இருவருக்கும் பலத்த வாக்குவாதம் நிகழ்ந்தது. வெள்ளையர் பொதுவாக யாழ்ப்பாணத் தமிழர் அத்தனை பேரையும் குறித்து இழிவாகப் பேசினார். தன்மான உணர்வும் சுதந்திர உணர்வும் கொண்ட குழந்தைவேலர், வெள்ளையரின் ஆதிக்க வெறியையும் குடியேற்ற நாட்டுச் சுதேசிகள் விஷயத்தில் அவர்கள் கொண்டிருக்கும் அலட்சிய மனப்பான்மையையும் மிகக் கண்டித்துப் பேசினார். உடனேயே உத்தியோகத்தை உதறித்தள்ளி விட்டு வேலணை வந்துசேர்ந்து மனைவி வள்ளியம்மையோடு இருந்து வருவாராயினர்.

இவருடைய உற்றார் உறவினர் இவரிலும்பார்க்கக் கல்வியறிவிற் குறைந்தவர்கள் ஊர்காவற்றுறைச் சுங்க இலாகாவில் உத்தியோகம் பார்த்தனர். இவர் உத்தியோகம் இல்லாமல் இருப்பது அவர்கள் உள்ளத்தை உறுத்தியது. சுங்க இலாகாவில் தகுந்த உத்தியோகம் ஒன்று தேடிக்கொடுத்தனர். உற்றார் உறவினருக்காக – அவர்களுடைய வற்புறுத்தலுக்காக உத்தியோகம் பார்த்தாரே தவிர உள்ளமெல்லாம் வேறெங்கோ சஞ்சரித்துக்கொண்டிருந்தது.

ஒருநாள் கடையிற் சுவாமிகள் இவர் வேலைபார்த்துக்கொண்டிருந்த கட்டிடத்தின் முன்வந்து நின்றார். இவரையே உற்று நோக்கினார். குழந்தைவேலர் சுவாமிகளுடைய பார்வையால் கவரப்பட்டார். காந்தம் இழுக்கின்ற சுத்த இரும்புபோலானார். எழுதிய பேனையோடு வெளியேவந்து சுவாமிகளைப் பார்த்துக்கொண்டு நின்றார். சுவாமிகள் வாய் திறந்து எதுவும் பேசவில்லை. குழந்தைவேலரும் வாய் திறக்கவில்லை. சுவாமிகள் குழந்தைவேலருடைய கையிலிருந்த பேனாவைப் பிடித்து இழுத்தார். அவ்வளவுதான் நிகழ்ந்தது. சுவாமிகள் முன்னாகவும் குழந்தைவேலர் பின்னாகவும் செல்வதைக் கந்தோரில் உள்ளவர்கள் பார்த்தனர். யாரோடோ குழந்தைவேலர் போகிறார்; சிறிது நேரத்தில் திரும்பி வந்துவிடுவார்; என்றுதான் கந்தோரில் உள்ளவர்கள் கருதினர்.

மந்திரத்தாற் கட்டுண்டவர்போல் குருநாதனைச் சீடர் தொடர்ந்தார். சீடர் உடல், பொருள், ஆவி மூன்றையும் குருநாதனுக்கே அர்ப்பணித்தார். இதன்மேல் நான் என்பதும் எனது என்பதும் இல்லை. எல்லாம் நீயாகவும் உனது ஆகவும் மாறின.

''அன்றாற னாவியும் பொருளுமாக் கையும்
ஐய யாவுங்கொண் டடிமை யாக்கினாய்''

என்று சீடர் ஒருவரிடத்தில் கூறுகின்றார். சீடரின் பக்குவ நிலையறிந்து குருநாதர் ஆட்கொண்டதோடமையாது திட்சையும் உபதேசமும் செய்தருளினார்.

குருவும் சீடரும் ஒருவர்பின்னொருவர் போகும்போது அவர்களுடைய திருக்காட்சி சிவனையும் மூத்த பிள்ளையாரையும் நினைப்பித்ததாம்.

''அண்டர்போற்றவே கயிலைநின் றெழுந்தாடித் தாண்டவம்''

என்று சீடர் குருவைச் சிவனாகக் காண்கின்றார். சீடரின் சீடர் ஒருவர் தனது குருநாதனை,

''அந்தி வண்ணன் தந்த முதற் பிள்ளையான
ஆனைமுக னம்சமெலா மமையப் பெற்ற
சுந்தரனே ஒங்கார சொருபத் தானே''

என்று மூத்தபிள்ளையாராகவே காண்கின்றார்.

அநுராதபுரக் கோட்டிலிருந்து கட்டளை ஒன்று குழந்தைவேலுக்கு வந்தது. அதைப் பார்த்துவிட்டு யாதொன்றும் நிகழாததுபோல அதனை வைத்துவிட்டார் குழந்தைவேலர். கோட்டுக்குச் செல்லவேண்டிய தினத்திற்கு இரண்டு தினங்களுக்கு முன் குருநாதர் சீடனிடம் ''என்னடா குழந்தைவேல் என்ன வியாச்சியம்'' என்று கேட்டார். குழந்தைவேலர் நடுக்கத்தோடு எழுந்து நின்று வணங்கி வழக்குச் செய்தியைத் தெரிவித்தார். விடயத்தைக் கேட்ட குருநாதர் வெடிபடச் சிரித்தார். ''போகத்தானே வேண்டும்'' என்று அழுத்தமாகக் கூறினார் குருநாதர். யாதும் பேசாது நின்றார் சீடர். குருவார்த்தைக்கு எதிர் வார்த்தை ஏது? குருநாதர் அவரைப் பார்த்து ''நீ அநுராதபுரம் போ. நான் அங்கு வருகிறேன்'' என்றார். குருநாதருடைய வாக்கைத் தலைமேற்கொண்டு சீடர் அநுராதபுரம் போய்ச்சேர்ந்தார்.

அநுராதபுரக் கோட்டில் வழக்கு விசாரணைக்கு எடுக்கப்பட்டது. குழந்தைவேற் சுவாமிகள் குருநாதனையே நினைந்தவராய் எதிரிகளுக்குரிய பக்கத்தில் போய் நின்றுகொண்டார். நீதவான் முதலாவது கேள்வியாக குற்றவாளியோ, சுத்தவாளியோ என்று கேட்டார். சுத்தவாளி என்று பதில் இறுத்தார் சுவாமிகள். வழக்காளியாகிய நீதவானின் சாட்சிகள் எல்லாம் விசாரிக்கப்பட்டது.

அவர்பக்கத்து நியாயவாதி வழக்கை உற்சாகமாகவே நடத்திக் கொண்டிருந்தார். வழக்கு விசாரணை போய்க்கொண்டிருந்த போக்



கைப் பார்த்தவர்கள் எல்லாம் எதிரி குற்றவாளியாகவே காணப்படுவார் என்றே நம்பினர். வழக்காளியின் விசாரணை முடிந்ததும் நீதிபதி, உமது கட்சியை விவாதிக்க யாரேனும் வழக்கறிஞர் உளரா? என்று கேட்டார். இல்லை என்றே பதில் வந்தது. வழக்காளியின் சாட்சிகளைக் குறுக்குவிசாரணை செய்யும் முறையில் நீர் ஏதாவது கேள்வி கேட்க விரும்புகிறீரா? என்று நீதவான் கேட்டபோது சுவாமிகள் மேலே ஒரு கணப்பொழுது அண்ணாந்து பார்த்தார். மயில் ஒன்று உலாவுவதைக் கண்டார். உடனே குருநாதனுடைய திருவருள் அவருள்ளே பாயப்பெற்றதாக உணர்ந்தார். உடனே நீதவானுடைய கேள்விக்கு விடையாக 'ஆம்' என்று பதிலளித்தார்.

சுவாமிகளுடைய கேள்விகள் பொய்ச்சாட்சி கூறியவர்கள்மேல் அம்புபோல் பாய்ந்தன. சொல்வதறியாது திகைத்தனர். நியாயவாதியும் வாயடைத்து நின்றார். வழக்காளியின் வெள்ளைமுகம் இருளத் தொடங்கியது. இவர்களுடைய பரபரப்பையும் சுவாமிகளுடைய வினாக்களுக்கு விடை காணாது திணறுவதையுங் கண்ட நீதிபதி தனது தீர்ப்பை எழுதி முடித்தார். ''இவ்வழக்கில் எதிரியாகக் கொணரப் பெற்ற திரு. குழந்தைவேல் நிரபராதியாகக் காணப்பட்டு விடுதலை செய்யப்பட்டார்'' என்று தீர்ப்பளித்தார். வெள்ளைக்காரராகிய நீதிபதியுடன் விவாதமிட்டபோது குழந்தைவேலர் உள்ளத்தால்மாத்திரம் துறவு நிலை எய்தியிருந்தார். வழக்கு விசாரிக்கப்படும் தருணத்தில் குருநாதரால் ஆட்கொள்ளப்பட்டு குழந்தைவேற் சுவாமிகள் உள்ளும் புறமும் துறவியாகிக் காட்சிஅளித்தார்.

பரமகுரு சுவாமிகள் கீரிமலையில் வந்திருப்பதை உணர்ந்த கடையிற் சுவாமிகள் தமது சீடர் குழாத்துடன் சென்று சுவாமிகளைத் தமது சீடருக்கு அறிமுகம் செய்துவைத்தார். குழந்தைவேற் சுவாமிகளின் பக்குவநிலை அறிந்து பரமகுரு சுவாமிகள் தமது திருவருட் கடாட்சத்தை அவர்மேல் பாலித்தருளினார். ஒரு சீடருக்கு குருமார் இருவராயினர். ஒருவர் வண்ணார்பண்ணையில்; மற்றவர் கீரிமலையில். இருவருக்கும் மாறிமாறித் தொண்டு புரிந்தார் குழந்தைவேற் சுவாமிகள்; இத்தகைய வாய்ப்பு யாருக்குத்தான் கிடைக்கும்.

அடியார்கள் கடையிற் சுவாமிகளை அடிக்கடி தமது இல்லங்களுக்கு அழைத்துக் குருபூசை நடத்துவதுண்டு. குருநாதனுக்கு முறையாகப் பாதபூசை முதலாக எல்லாம் நிகழும். ஒருநாள் மண்டைதீவில் ஒரு அன்பருடைய வீட்டில் நடந்த குருபூசையில் கடையிற் சுவாமிகள் அருளம்பல சுவாமிகளைத் தமக்குப் பக்கத்திலே இருத்தி இருவருக்கும் சமமாகக் குருபூசை நடக்கட்டும் என்று கட்டளையிட்டருளினார்கள். அக்காட்சியைக் கண்ணுற்ற அடியவர் எல்லாம் அரஹர என்று ஆனந்தம் கொண்டனர்.

குழந்தைவேற் சுவாமிகளுக்குக் குருத்துவமளித்துச் சுமார் இரண்டு வருடங்களாயின. அவ்வேளையிற் கடையிற் சுவாமிகள் சமாதி கூடுங் காலமாயிற்று. அந்த நாட்களிற் கடையிற் சுவாமிகள் நீராவியடியிலே அதிகமாகத் தங்கி இருந்தார்கள். குழந்தைவேற் சுவாமிகள் கடைசிக் காலத்திலே தமது குருநாதனைக் கணமேனும் பிரியாது ஆராமையோடு பணிபுரிந்து வந்தார். குருநாதரின் ஆணைப்படியே சீடர் குருநாதரின் சமாதிக்குரிய முன்னேற்பாடுகளையுங் கவனித்துவந்தார். கடையிற் குருநாதனுடைய சமாதிக்குப்பின் மெய்யடியார் எல்லாம் குழந்தைவேற் சுவாமிகளையே குருவாகக் கொண்டனர்.

''குழந்தைவேலா தஞ்சம் வேறிலையுனது சரணந்தானே''

என்று அருளம்பல சுவாமிகளுடைய வாக்கு நினைவுகூரத் தக்கது.

பாவிலுப்பிள்ளை என்ற கிறிஸ்தவர் குழந்தைவேல் சுவாமிகளுக்கடியணுகி உத்தம சீடர்களுள் ஒருவரானார். ஆத்மீகத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்களுக்கு சாதி மத பேதம் ஏதுவுமே இல்லை என்று கூறலாம். சுவாமிகள் பாவிலுப்பிள்ளைக்கு முறைப்படி தீட்சையும் செய்தருளினார்.

சுவாமிகளது பூர்வாச்சிரம ஒன்றுவிட்ட சகோதரி ஒருவர் வண்ணார்பண்ணையில் வசித்துவந்தார். அவர் அடியார் பக்தியிற் சிறந்தவர். அதனால் சுவாமிகள் வண்ணார்பண்ணையில் அம்மையாரின் இல்லத்தையே அமைதியான இடமாகக் கருதி அங்கு வசித்தார். நாலா பக்கத்திலிருந்தும் அடியார்கள் அங்கு வந்து அவ்வில்லத்தை ஒரு சாதனா நிலையமாக்கினர். குழந்தைவேற் சுவாமிகளுடைய தலைமையில் நடைபெற்றுவந்த பூசை, பிரார்த்தனை, உபதேசம் ஆகியவற்றில் ஈடுபட்ட அடியார்கள் தம்மையும் மறந்து பேரின்பந் துய்த்தனர்.

இத்தெருவில் வசித்துவந்தவர் இராமநாதர் அருளம்பலம் என்பவர். மனிதன் மனிதனை வணங்கலாமா? என்பது அவருடைய நெடுநாளைய சந்தேகம். அதனால் குழந்தைவேல் சுவாமிகளையும் அவருடைய அடியார்களையும் அவர் அணுகுவதில்லை. கேலியும் செய்வார். ஆனால் அவருடைய உள்ளம் அவரையும் அறியாமல் குழந்தைவேல் சுவாமிகளையே நாடியது. தாமும் அவர்களோடு போய்ச் சேர்ந்துகொள்ள வேண்டும் என்ற நினைவு எழும். ஆனால் வரட்டுக் கௌரவம் அதனைத் தடுத்துவிடும். என்றாலும் பூசைகளையும், அங்கு நடைபெறுங் காரியங்களையும் சற்றுத் தூரத்திலே நின்று கவனிக்கத் தவறுவதில்லை.

ஒருநாள் இரவு சபாபதி என்ற அன்பர் சுவாமிகள் முன்னிலையில் மனமுருகத் திருவாசகம் பாடினார். கேட்டவர்கள் உள்ளம் எல்லாம் பாகாயுருகிவிட்டன. இத்திருவாசக இசையால் கவரப்பட்டார்



அருளம்பலத்தார். ''உடையாளுன்றன் நடுவிருக்கும்'' என்ற திருவாசகத்தைக் கல்லும் கனிந்துருகப் பாடினார். ''அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்'' என்ற அடி அருளம்பலவனாரின் உள்ளத்தைத் தொட்டுவிட்டது. ஓடிவந்து அடியற்ற மரம்போல சுவாமிகள் பாதத்தில் வீழ்ந்து தம்மைப் புனிதப்படுத்திக் கொண்டார். அவரது சந்தேகம் எல்லாம் சுவாமிகளுடைய சந்நிதிப் பெருமையாலே தீர்ந்துபோய் விட்டது.

கோடையிலே இளைப்பாறிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருப்போலக் குழந்தைவேற் சுவாமிகள் அருளம்பலம் அவர்களுக்கு ஆறுதல் நிலையமாக அமைந்துவிட்டார். சுவாமிகளுடைய அருட் குணங்களைத் தமது உள்ளத்தில் ஏற்றுக்கொண்டு சாதனையில் வெகு வேகமாக முன்னேறினார். அவரது பரிபக்குவ நிலையறிந்த சுவாமிகள் அருளம்பலத்திற்குத் தீட்சையும் உபதேசமும் அளித்து அருளம்பல சுவாமிகள் ஆக்கினார். அருளம்பல சுவாமிகளுடைய உள்ளத்திலிருந்து தனது குருநாதனைப்பற்றி முகிழ்த்த பாடல் ஒன்று வருமாறு:-

''அன்றொரு நாள் ஆச்சிரமத் தடைந்த உன்மெய்
யடியவர்முன் னடிநாயேன் தன்னை முன்னா
நின்றிடவைத் தருள்விழிநோக் குறுத்தி யோர்சொல்
நெஞ்ஞிசினிடை வைத்தியெனப் பணிந்திந் திட்டாய்
கன்றிடிக்கத் தாய்சுரக்கும் வழக்கைத் தள்ளிக்
கன்னெஞ்சற் கமுதமழை காட்டி விட்ட
தன்றிறமிங் காரறிவார் குழந்தை வேலா
தஞ்சம்வே றிலையுனது சரணந் தானே''

சில நாட்களில் குருபூஜை நடத்துவதற்கு வேண்டிய பொருட்களை வாங்குவதற்குப் பொருள் தட்டுப்பாடு நேரும். அப்பொழுதெல்லாம் அடியார்கள் படாத பாடுபடுவர். அவர்கள் நிலையறிந்த சுவாமிகள். உள்ளே இருக்கும் பெட்டியைத் தூக்கி வா என்பார். சீடர் ஒருவர் தூக்கி வருவார். அதனுள் என்ன இருக்கிறது என்பார். இரும்புத் துண்டு ஒன்றைச் சீடன் எடுத்துக் கொடுப்பான். அதனை வாங்கிய சுவாமிகள் கையால் தடவிச் சீலையால் சுற்றிக் கொடுப்பார். இதனைக் கொண்டுசென்று விற்று குருபூஜைக்குரிய பொருளை வாங்கிவாருங்கள் என்பார். அங்கு போய்ப் பார்க்கும்போது அது தங்கக் கட்டியாக மாறிஇருக்கும். அதனை விற்ற பணமும் பொருட்களை வாங்கும் பணமும் சரியாகத்தான் இருக்கும். ஒரு சதமேனும் மிஞ்சாது.

ஒரு முறை அன்பர் ஒருவர் இப்பணத்தில் ஐந்து சதத்தை எடுத்துத் தனது வேட்டியில் முடித்து வைத்திருந்தார். குருபூஜை முடிந்ததும் வேட்டியில் முடிந்த முடிச்சை அவிழ்த்தார். முடிச்சு முடிச்சாகவே இருந்தது. ஆனால் காசைக் காணவில்லை.

ஒருநாள் நடைபெற்ற குருபூஜையின்போது சுவாமிகள் அருளம்பல சுவாமிகளைத் தமது பக்கத்திலே இருத்தி இருவருக்கும் பூஜை நிகழ்த்துமாறு கூறினார். கடையிற் சுவாமிகள் இவருக்கு எப்படிச் செய்வித்தரோ அதேபோன்று அருளம்பல சுவாமிகளையும் தமக்குப்பின் தலைவராக இருக்கும் நிலையை அடியார்களுக்கு உணர்த்தினார்.

சுவாமிகள் தமது இறுதிக் காலத்தில் வண்ணார்பண்ணையில் தமது ஒன்றுவிட்ட சகோதரியார் இல்லத்திலேயே தங்கியிருந்தார்கள். 1909ஆம் ஆண்டுக்குச் சரியான கீலக வருடம் பங்குனி மாசம் 8ஆம் திகதி ஞாயிற்றுக்கிழமை இரவு உத்தரட்டாதி நக்ஷத்திர வேளையிலே சுவாமிகள் சமாதி கூடும் பெருவாழ்வு பெற்றார்கள். சுவாமிகள் சமாதிகூடிய தினத்தின் மறுநாள் அவர்தம் திருமேனி வண்ணார் பண்ணையிலிருந்து ஊர்வலமாகத் தாங்கிச் செல்லப்பட்டு கீரிமலையில் சமாதி வைக்கப்பட்டது. சுவாமிகளுடைய அடியார்கள், சமாதி வைக்கப்பெற்ற இடத்திலே ஆலயமொன்று அமைத்து அதேயாண்டு வைகாசி மாதம் மூன்றாந் திகதி ஞாயிற்றுக்கிழமை உத்தரட்டாதி நட்சத்திரத்தில் முறைப்படி பாணலிங்கப் பிரதிஷ்டை செய்துள்ளனர்.



# அருளம்பல சுவாமிகள்

கீரிமலையில் குழந்தைவேற் சுவாமிகளின் சமாதிக்குப் பக்கத்தில் இன்னொரு சமாதி இருப்பதை யாரும் அறிவர். அதுதான் குழந்தைவேற் சுவாமிகளின் பிரதம சீடராகிய அருளம்பல சுவாமிகளுடைய சமாதியாகும்.

அருளம்பல சுவாமிகள் வண்ணார்பண்ணையைப் பிறப்பிடமாகக் கொண்டவர். கடையிற் குருநாதனும் குழந்தைவேற் சுவாமிகளும் அதிக காலம் தங்கிய இடம் வண்ணார்பண்ணை ஆதலினால் வண்ணார் பண்ணை ஒரு புண்ணிய பூமியாகக் கருதப்படுகிறது. இவரது தந்தையார் இராமநாதர், தாயார் சின்னாச்சிப்பிள்ளை. இருவரும் சிவபக்தி, அடியார் பக்தியிற் சிறந்து விளங்கினர். வீட்டிற்கு வரும் சிவனடியார் எவரையும் அம்மையார் மனமுவந்து உபசரித்து அனுப்புவர். இவர்களுடைய குடும்பச் சொத்து இந்த அடியார் பக்தி ஒன்றுதான்.

"மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்" என்பதனை நன்குணர்ந்தவர்கள்.

கடையிற் சுவாமிகளும் இந்த இல்லத்திற்கு அடிக்கடி எழுந்தருளுவதுண்டு. ஒரு நாள் அம்மையார் சுவாமிகளை இருத்தி சோறு குழைத்து சுவாமிகளுக்கு ஊட்டிக் கொண்டிருந்தார். சிறுவனான அருளம்பலமும் பக்கத்திலே இருந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். சுவாமிகள் தமது கையினால் உடலைத் தடவி அருளம்பலத்திற்கு உணவும் ஊட்டினார். சுவாமிகளுடைய பிறப்பு 1865இல் நிகழ்ந்தது. குடும்பத்தில் இவரே கடைக்குட்டி என்று மிக அருமையாக வளர்க்கப் பெற்றார்.

இயற்கை விவேகமும் முயற்சித் திறனும் பொருந்திய அருளம்பல சுவாமிகள் "மற்றிக்குலேஷன்" பரீட்சையிற் சித்தி அடைந்து

இளம் வயதிலேயே ஒரு அரசாங்க உத்தியோகத்தரானார். ஆங்கில மோகம் அதிகரித்திருந்த அந்தக் காலத்தில் இவர் ஆங்கில நாகரிகத்திற்கு அடிமையாகாமல் தூயதமிழனாகவே வாழ்க்கை நடத்தி வந்தார். இளமையிலே சுவாமி விவேகானந்தர் தமது வீட்டிற்கு வரும் சந்நியாசிகளிடம் நீர் கடவுளைக் கண்டீரா? எனக்கும் காட்டுவீரா? என்று கேட்டது போலஅருளம்பலவனாரும் கடவுளைப்பற்றிக் கேள்விகள் கேட்டு எல்லோரையும் முக்காட வைத்துவிடுவார். இவரது கேள்விகளைக் கேட்போர், இவர் ஒரு நாஸ்திகனோ என்று ஐயுறுவர்.

அக்காலத்திலே பகுத்தறிவுவாதிகள் சங்கம் என்றொரு சங்கம் இருந்தது. அதிலே இவர் அங்கத்தவராகி அவர்களுடைய நூல்களை நன்கு கற்றார். அப்பர் சுவாமிகள் சமண சமயத்திலே சேர்ந்து சமண நூல்களைக் கற்று பாண்டித்தியம் அடைந்ததுபோல பகுத்தறிவு வாதிகளுடைய நூல்களை நன்கு கற்று அவர்களுடைய வாதத்தில் திறமை பெற்றவராக விளங்கினார்.

இவர் வாதிக்கும்போது ஆழ்ந்து உள்ளுணர்ந்து வாதத்தை நடத்துவார். அதனால் இவரது போலித்தன்மை மறைந்து உண்மை நிலை வெளிப்படலாயிற்று. தன்னைத்தானே ஆராய்பவர்களுக்கு மிகக் கெதியிலே ஆத்மஞானங் கைகூடிவிடுகின்றது. கடவுள், உயிர், உலகம் என்பனபற்றி ஆராயத் தலைப்பட்டார். கடவுள் அருளைப் பெறுவதற்கு உபாயம் யாது? என்ற விசாரணை மிக மும்முரமாக நடைபெற்று வந்தது.

இக்காலப் பகுதியில் இந்தியாவில் ஒரு மகான் இருந்தார். இவர் தாம் இருந்த இடத்திலிருந்தே முன்னேற்பாட்டின்படி, குறிக்கப் பட்டுள்ள ஒரு நேரத்தில் தீட்சை செய்து வைப்பார். இத்தருணத்தில் அவரோடு தொடர்பு உடைய உலகின் பல பாகங்களிலுள்ளாருக்கும் தீட்சை கிடைத்து வந்தது. கடவுள் அருளைப் பெறுவதற்கு இது தகுந்த உபாயமாகும் என்று கூறினார் அருளம்பலவனார். அச்சங்கத்தில் தாமும் ஒரு அங்கத்தவராகச் சேர்ந்தார். அதற்குச் "சுத்த தர்ம மண்டலம்" என்பது பெயர். இவரது தீவிர முயற்சியினால் இலங்கைச் சபையின் பிரதிநிதி ஆனார்.

இவர் யாழ்ப்பாணக் கச்சேரியில் மாகாணப் பதிவுப் பகுதி பிரதம லிகிதராகக் கடமையாற்றினார். இவர் வண்ணார்பண்ணையில் இருந்த கச்சேரிக்குத் தினமும் சென்று வருவது வழக்கம். இக்காலப் பகுதியில் குழந்தைவேற் சுவாமிகளும் வண்ணார்பண்ணையில் தமது பூர்வாசிரம ஒன்றுவிட்ட சகோதரியார் வீட்டுக்கும் போகவர இருந்தார். இதனால் குழந்தைவேற் சுவாமிகளுடைய அடியார்களைத் தரிசிக்கவும் அவர்களோடு அளவளாவவும் சந்தர்ப்பம் கிடைத்தது. இதனால்



ஒரு ஆத்மீக தாகம் ஏற்பட்டிருந்தது. சுவாமிகளைத் தரிசிக்கவேண்டுமென்ற எண்ணம் இவரிடம் வலுப்பெற்றிருந்தாலும், மனிதனை மனிதன் வணங்கும் வழக்கம் என்பது இவரது உள்ளத்திற்கு ஒத்துக் கொள்ளவில்லை. அதற்குக் காரணம் இவரது அறியாமையேயாகும். குரு வேறு, தெய்வம் வேறு அல்ல. தெய்வமேதான் குரு உருவில் நின்று அருளைக் கொடுக்கிறது. குருவைச் சாதாரண மனிதர் என்று கொண்டால் அவர் குருவாக இருக்க முடியாது.

குழந்தைவேற் சுவாமிகளுடைய அணுக்கமான பக்தர்களுள் சபாபதி என்பவரும் ஒருவர். இவரும் வண்ணார்பண்ணையைச் சேர்ந்தவரே. இவர் திருவாசகம் பாடினால் கண்ணீர் மல்காதவர்கள் இலர் என்றே கூறலாம். இந்தச் சபாபதியார் தனது குருநாதரிடம் போவதும் வருவதும் அருளம்பலம் அவர்களுடைய வீட்டைத் தாண்டியேதான்.

அடிக்கடி அருளம்பலவனார் சபாபதியாரைத் தனது வீட்டிற்கு அழைத்து மனிதனை மனிதன் வணங்கலாமா என்பதுபற்றித் தீவிர வாதம் புரிந்து வந்தார்.

ஒருநாள் குழந்தைவேற் சுவாமிகள் முன்னிலையில் சபாபதியார் பாடிக்கொண்டிருந்தபோது நேரமே தெரியாது சுவாமிகள் அனுபவித்துக்கொண்டிருந்தார்கள். நேரம் பதினொன்றுக்கு மேலாகிவிட்டது. சபாபதியர் வீட்டுக்குச் செல்லப் புறப்பட்டார். நீ இன்றைக்கு இந்த நேரத்தில் செல்ல வேண்டாம் எனச் சுவாமிகள் தடுத்தார்கள். சுவாமிகள் தடுத்தும் சபாபதியர் வீட்டுக்குப் புறப்பட்டுவிட்டார்.

சபாபதியர் இன்று இரவு பதினொன்றாகியும் வீடு திரும்பவில்லையே என்று அருளம்பலவனார் சபாபதியரை வீட்டுப் படலையில் எதிர் பார்த்துக்கொண்டிருந்தார். அந்த அகாலமான நேரத்தில் சபாபதியரை மடியைப் பிடித்து இழுத்துக்கொண்டு அருளம்பலவனார் தனது வீட்டுக்குள்ளே புகுந்து வீட்டுக் கதவைப் பூட்டிக்கொண்டார். அருளம்பலவனாருடைய கையில் ஒரு கூரிய கத்தி; அருளம்பலவனார் ஆவேசம் கொண்டவராய்க் கத்தியை உயர்த்தி இன்று இரவு பன்னிரண்டு மணிக்குச் சரியாக உன்னைக் கண்டதுண்டமாக வெட்டப்போகின்றேன். அதற்கிடையில் உனது சாமி காப்பாற்ற முடியுமென்றால் காப்பாற்றட்டும்.

சபாபதியர் நடுங்கினார். குருநாதனை உள்ளத்தில் இருத்தினார். அப்படியே தியானத்தமர்ந்து தன்னிலை மறந்தார். மணி பன்னிரண்டு அடித்து முடிவதற்கிடையில் வீட்டு முற்றத்தில் ஒரு ஆரவம்

கேட்டது. கூடவே 'அருளம்பலம்', 'அருளம்ப்லம்' என்ற வார்த்தைகளும் வெளிவந்தன. கத்தியுடன் ஓடிச்சென்று அருளம்பலவனார் கதவைத் திறந்தார் குழந்தைவேற் சுவாமிகளுடைய சாந்தமான தோற்றத்தைக் கண்டார் கத்தி போன இடம் தெரியவில்லை; ஆவேசம் போன இடம் தெரியவில்லை. முற்றத்திலே சுவாமிகளுடைய பாதாரவிந்தங்களில் அடியற்ற மரம்போல் வீழ்ந்து நெடுஞ்சாணையாகக் கிடந்தார். அருளம்பலவனார் முகத்தில் வழிந்தோடிய கண்ணீரால் சுவாமிகளுடைய திருப்பாதங்களைக் கழுவினார். சுவாமிகள் அருளம்பலவனாரைத் தூக்கி எடுத்து ஆசீர்வதித்தார். அருளம்பலவனார் தன்னை மன்னிக்குமாறு பலமுறை வேண்டினார். சுவாமிகளுடைய சாந்த சொரூபம் அருளம்பலவனாரை முற்றாக மாற்றிவிட்டது.

இதன் பின்னர் குழந்தைவேற் சுவாமிகளும், அருளம்பலவனாரும் தாயும் சேயும் போலாயினர். சேயினால் தாயைக் கணமேனும் பிரிந்திருக்க முடியாத நிலை ஒன்று ஏற்பட்டது.

அருளம்பலவனாருக்கு மட்டக்களப்புக்கு இடமாற்றம் கிடைத்தது. அப்பொழுது இவருடைய மேலதிகாரியாக சேர். பொன். அருணாசலம் அவர்கள் விளங்கினார்கள். இருவரும் நேர்மையும் கடமையுணர்வும் கடவுள் பக்தியும் அடியார் பக்தியும் உடையவர்கள். இவர் மட்டக்களப்பில் உத்தியோகம் பார்க்கும்போது குழந்தைவேல் சுவாமிகளுடைய சுகவீனம் பற்றிக் கேள்வியுற்றார்கள். தமது மேலதிகாரியாகிய சேர். பொன். அருணாசலம் அவர்கள் லீவு மனுப் பண்ணினார்கள். லீவு மறுக்கப்பட்டபோதிலும் தந்திமூலம் அறிவித்துவிட்டு அருளம்பலவனார் புறப்பட்டுவிட்டார்.

இந்நிகழ்ச்சியின் பின் இருவருடைய மனோநிலையிலும் சிறிது வேற்றுமை ஏற்பட்டது. ஒருநாள் அருணாசலம் அவர்கள் திடீரென அருளம்பலவனாரின் கந்தோருக்குள் புகுந்து சோதனை புரிந்தார். இதனால் இருவருக்குமிடையே வாக்குவாதம் நிகழ்ந்தது: அருளம்பலலனார் திடீரென எழுந்து கந்தோர்ச் சாவிகளை எல்லாம் அருணாசலம் அவர்கள் முன்னிலையில் வைத்து, தான் உத்தியோகத்தினின்று விலகுவதாகக் கூறிப் புறப்பட்டுவிட்டார். வாடிவீட்டில் தங்கியிருந்த அருணாசலம் அவர்கள் அன்று மாலை அருளம்பலவனாரை அழைத்து மறுபடியும் திறப்பை ஏற்குமாறு சொல்லி இருவரும் சமாதானமாயினர்.

அக்காலத்தில் மட்டக்களப்பு மக்களின் கல்விநிலை மிகமோசமாக இருந்தது. போதிய பாடசாலைகள் இல்லை. இருந்த இரண்டு மூன்று பாடசாலைகளும் கிறிஸ்தவ சமயப் பாடசாலைகளாகவே இருந்தன. இதனால் கிறிஸ்தவ சமயப் பிரச்சாரமும் மதமாற்றமும் வெகுவேகமாக நிகழ்ந்தன. இதனைக் கண்ணுற்ற அருளம்பலவனார் அக்காலத்தில் மிகப் பெரிய செல்வந்தராக இருந்த மார்க்கண்டு முதலாளி அவர்களுடைய பண உதவிகொண்டு பல பாடசாலைகளைத்



திறந்து கிறிஸ்து சமய மாற்றத்தைத் தடுத்தார். இதனால் கிறிஸ்து சமயத்தவர் சிலர், மேலிடத்திற்கு இல்லாதது பொல்லாதது எல்லாம் கூறி இவரை இடமாற்றம் பெறச் செய்தனர். இதனைக் கேள்வியுற்ற அருணாசலம் அவர்கள் தன்னை அறியாமல் தனக்குக் கீழ் இருந்த ஒருவரை எப்படி இடமாற்றம் செய்ய முடியும் என்று தீவிரமாக வாதாடி இடமாற்றத்தை முறியடித்தார்.

அருளம்பலவனார் உத்தியோகத்திலிருக்கும்போதே குருவிடமிருந்து தீக்ஷையும் உபதேசமும் பெற்று அருளம்பல சுவாமிகள் ஆனார். இதன்பின் ஆத்மீக சாதனையில் தீவிரமாக ஈடுபடலானார். இதனால் உத்தியோகம் பார்க்கும் மனோநிலையை இழந்தார். தாமாகவே தமது 49ஆவது வயதில் உத்தியோகத்தினின்று ஓய்வு பெற்றுக்கொண்டார். யாழ்ப்பாணம் வந்தார். தீவிர சாதனையில் சித்தியும் அடைந்தார். தனது குருநாதருடைய சமாதித் திருப்பணியிலேயே முழுநேரத்தையும் செலவிட்டார். இடையிடையே மட்டக்களப்புக்கும் சென்று தாம் தொடக்கி வைத்த கல்விப்பணி, ஆத்மீகப்பணிகளையும் கவனித்துவந்தார்.

சமயப்பணிக்கும் கல்விப்பணிக்கும் அச்சுயந்திரம் ஒன்று அவசியம் என்பதை உணர்ந்தார். 'சுத்தாத்வைத அச்சியந்திரசாலை' என்ற பெயரால் ஒரு அச்சகத்தை நிறுவிப் பெரும்பணியாற்றினார். குழந்தைவேற் சுவாமிகளுடைய சமாதிக்குப்பின் அருளம்பல சுவாமிகளைப் பலர் குருவாக அடைந்து ஆறுதல் பெற்றனர். இங்ஙனம் சீவன்முத்தராய்த் திகழ்ந்த அருளம்பல சுவாமிகள் 1925ஆம் ஆண்டு ஆனி மாசத்து அத்த நட்சத்திர நாளிலே சமாதிகூடும் பெரும்பேறு பெற்றார். அருளம்பல சுவாமிகள் பேரில் அவருடைய சீடர் ஒருவர் பாடிய பாடல்,

''ஆரண மாகம மாய கலைகளு மம்புயனும்
நாரண வானவர் நாடரி யானம் பவமொழிதற்
காரண மேனிய னாயெழு கண்ணுத லான்கட்வுட்
பூரண னாமரு ளம்பல வெந்தையைப் போற்றுவமே.''



# யோகர் சுவாமிகள்

எமது காலத்திலே வாழ்ந்து மறைந்த சித்த புருஷர்களில் யோகர் சுவாமிகள் மிகமிக முக்கியமானவர். செல்லாச்சியம்மையாரின் ஈமக் கிரியைகளுக்கும் சடையம்மாவின் சமாதிக் கிரியைகளுக்கும் யோகர் சுவாமிகள் பொறுப்பாக முன்னின்று நடாத்திவைத்தார்கள்.

கடையிற் சுவாமிகளின் சீடர்களில் ஒருவர் செல்லப்பா சுவாமிகள். செல்லப்பா சுவாமிகளின் ஒரேஒரு சீடர் யோகர் சுவாமிகளாகும். செல்லப்பா சுவாமிகள் உலகத்திற்குத் தன்னைக் காட்டிக்கொள்ளாது வாழ்ந்து மறைந்துபோன மகான். உலகத்தோர் கண்ணுக்குப் பைத்தியகாரன்போன்றே காட்சி அளித்தார். அதனால் உலகம் அவரை விசர்ச் செல்லப்பா என்றே பெயர் சூட்டி அழைத்தது. செல்லப்பா சுவாமிகள் யோகர் சுவாமிகளுக்கு நான்கு மகா வாக்கியங்களை உபதேசித்தார்: இந்த நான்கு மகா வாக்கியங்களும் சகல சாஸ்திரங்களினதும் சாரம் கொண்டவை. ஆதலின் இவை மகா வாக்கியங்கள் என்று அழைக்கப்பட்டன.

அவை பின்வருமாறு:-

ஒரு பொல்லாப்பு மில்லை;
எப்பவோ முடிந்த காரியம்;
நாம் அறியோம்;
முழுதும் உண்மை.

மாவிட்டபுரம் சரித்திரப் பிரசித்தி பெற்றதோர் தலம். மாருதப் புரவீகவல்லி என்னும் சோழ அரசகுமாரி குதிரைமுகம் உடையவளாகவே பிறந்து வளர்ந்தாள். தன்னுடைய குதிரை முகம் நீங்கி மனித முகம் அமையவேண்டும் என்று கருதி க்ஷேத்திராடனம் செய்தாள். கீரிமலை நீரூற்றில் ஸ்நானம் செய்தபோது குதிரை முகம் நீங்கி மனித முகம் பெற்றாள். அச்செய்தியை நினைவூட்டுவதே மாவிட்டபுரம் என்ற பெயர்.



இவ்வூரில் சைவ வேளாண் குலத்தில் அம்பலவாணர் என்னும் சைவப் பெரியார் ஒருவர் வாழ்ந்தார். இவரது தர்மபத்தினி சின்னாச்சி அம்மையார் என்று அழைக்கப்பட்டார். இவர்களது பூர்வ புண்ணிய விசேடத்தினால் 29-5-1872இல் அவிட்ட நட்சத்திரத்தில் ஓர் ஆண் மகவு பிறந்தது. பெற்றோர் இக்குழந்தைக்கு யோகநாதன் என்று நாமகரணம் சூட்டினர். அம்பலவாணரின் சகோதரர் சின்னையா என்பவர் கொழும்புத்துறையைச் சேர்ந்த கத்தோலிக்கப் பெண் ஒருத்தியைத் திருமணம் செய்து தமது பெயரை யோசேப்பு என்றும் மாற்றிக்கொண்டார்.

அம்பலவாணர் மஸ்கெலியா என்ற மலைப் பிரதேசத்தில் கடை ஒன்று நடத்திவந்தார். யோகநாதனுடைய கல்வி விஷயத்தை யோசேப்பு கவனித்துவந்தார். அதனால் யோகநாதன் மாவிட்டபுரத்தைவிட்டுக் கொழும்புத்துறையில் வாழவேண்டிய சூழ்நிலை உருவானது. அக்காலத்தில் சைவப் பாடசாலைகள் மிகமிகக் குறைவு. அதனால் யோகநாதனின் கல்வி கத்தோலிக்க பாடசாலையிலேயே ஆரம்பமானது. இளமையில் துடுக்குடையவராகவும் புத்தி யுக்தி உள்ளவராகவும் வாழ்ந்துவந்தார். யோகநாதனுக்கு வயது எட்டாயிருக்கும்போது தாயார் இறந்துவிட்டார்.

சிறியதந்தையார் யோகநாதனுடைய கல்வியில் மிகுந்த ஊக்கம் காட்டினார். ஆங்கிலக் கல்வி கற்கும்பொருட்டு செம்பத்திரிசியார் கல்லூரியில் சேர்க்கப்பட்டார். கல்லூரிப் பதிவேட்டில் ''ஜோன்'' என்ற பெயர் யோகநாதனுக்கு எழுதப்பட்டது. பகலில் சிறியதகப்பனார் வீட்டிலும் மாலையில் யாழ்ப்பாணம் கச்சேரிக்கு அருகாமையில் உள்ள தந்தைவழி மாமியாராகிய முத்துப்பிள்ளை அவர்களுடைய இல்லத்துக்கும் போய்விடுவார்கள். மாமியார் வீட்டில் 'மோகன்' என்று அழைப்பார்கள். பாடசாலையில் 'ஜோன்' என்று அழைப்பார்கள். பாட்சாலையில் கிறிஸ்து சமயத்தையும் மாமியார் வீட்டில் சைவ சமயத்தையும் படித்து வந்தார். யேசுநாதரின் மலைப்பிரசங்கம் இவரது மனத்தைக் கவர்ந்தது.

எட்டாம் வகுப்புவரை ஆங்கிலம் கற்றார். மேற்படிப்புக்குப் போகாத காரணம் தாயில்லாப் பிள்ளை. தகப்பன் மஸ்கெலியாவில் வியாபாரம். மாமியாருக்கு யோகன் கிறிஸ்தவ பாடசாலையில் படிப்பது விருப்பம் இல்லை. ஆகையால் படிப்புக் குழம்பியது. அம்பலவாணர் யோகனை அழைப்பித்து தேயிலைத் தோட்டம் ஒன்றின் வேலைக்கு அமர்த்தினார். மலையகத்தின் இயற்கைச் சூழ்நிலை யோகனின் மனதைக் கவர்ந்தது. ஒருநாள் யோகநாதன் சிவனொளிபாதம் சென்று சூரியன் உதிக்கும் காட்சியினைக் கண்டு மகிழ்ந்துவந்தார். சிவனொளிபாதம் சென்று வந்த யோகநாதன் இயற்கையின் சூழலிலே

தமது மனதைப் பறிகொடுத்துவிட்டார். அதனால் தன்பாட்டிலேயே பேசத் தொடங்கினார். இது எல்லாம் உண்மை. எனது உடம்பு சிவன் சொத்து. சிவனுக்கே அது சொந்தம். அவனையே தேடிப் போனேன். இந்த விபரீத எண்ணங்களைக் கண்ட தந்தையார் இவரை யாழ்ப்பாணத்திற்கே அனுப்பிவைத்தார்.

யோகர் சும்மா இருக்க மாட்டார். உத்தியோகம் தேடித் திரி வார். "உத்தியோகம் புருஷ லட்சணம்" என்று சொல்லும் சுவாமி கள், உத்தியோகம் பார்க்க எண்ணினார் என்பது சாலவும் பொருத்த மானதே. இரணைமடுக் குளக் கட்டிட வேலை நடைபெற்ற காலம். அங்கு சென்றபோது 'பிறவுன்' என்ற பொறியியலாளர் பண்டக சாலைப் பாதுகாவலர் என்ற உத்தியோகத்தை இவருக்கு அளித்தார். "உங்கள் கடமையை மறவாதீர்கள்" என்று எல்லோருக்கும் உப தேசித்த சுவாமிகள் தமது கடமையை மறப்பாரா? நேர்மையாகவும் உண்மையாகவும் வேலை பார்த்தார். பொறியியலாளரிடம் ஒரு நன் மதிப்பைப் பெற்றுக்கொண்டார்.

யோகநாதன் கிளிநொச்சியை விட்டு மாவிட்டபுரம் திரும்பினார். அவருக்கு அப்போது வயது 32. தந்தையும் இறந்துவிட்டார். தாயை எட்டு வயதில் இழந்தார்; தந்தையை வாலிப வயதில் இழந்தார். ஆனால் மாவிட்டபுரம் கந்தன் கருணையை இழக்கவில்லை. கீரிமலையிலும் மாவிட்டபுரத்திலும் மாறி மாறி வசித்தார். கீரிமலையிலிருந்து நடையி லேயே நல்லூருக்கு வருவார். ஆத்மிகதாகம் மேலிட்ட காலம்; குரு ஒருவரைத் தேடி அலைந்த காலம்; பற்றுக்கோடாக இருந்த இரு முதுகுரவரையும் இழந்தபோது பற்றுக்கோடு ஒன்றை நாடினார். நல்லூர்த் தேரடியில் செல்லப்பா சுவாமிகளைச் சந்தித்தார். செல் லப்பா சுவாமிகளின் பார்வை இவரைக் காந்தமெனக் கவர்ந்தது. குருநாதனைத் தரிசித்த அநுபவத்தை அவரே கூறுகின்றார்.

"கருத்தில் நினைந்துருகிக் கைகூப்புந் தொண்டர்
வருத்தமெலாந் தீர்க்கும் வடிவேல் — திருத்தலத்தில்
தேரடியில் தேசிகனைக் கண்டு தெரிசித்தேன்
ஆரடாநீ என்றான் அவன்."

விசர்ச் செல்லப்பா என்று மக்களால் ஏசப்பட்ட செல்லப்பா சுவாமிகளைச் சூழ ஒரு கூட்டம் கூடத் தொடங்கி இருந்த காலம். செல்லப்பா சுவாமியின் அரிய சீடர்கள் கதிரவேலுச்சாமியும் யோக நாதனும் ஆவர். பெரும்பாலும் மூவரும் ஒன்றுகூடித் திரிவர்; சண்டை போடுவர்; சமையல் செய்வர். சமையல் முடியும் சமயத்தில் சட்டி பானையை உடைப்பர். இச்செயலைக் கண்டால் யார்தான் இவர் களைப் பைத்தியம் என்று கூறமாட்டார்கள்?



கொழும்புத்துறையில் சிற்றம்பலம் சம்பந்தர் என்னும் ஒரு சைவப்பெரியார் வளவில் றோட்டுப் பக்கமாக ஒரு இலுப்பை மரம். இந்த இலுப்பை மரத்தின் கீழேதான் யோகர் சுவாமிகளுடைய அருந்தவம் நடைபெற்றது. இந்த இலுப்பை மரத்திற்கு அருகில் அரியாலை—நன்னியர் என்பவர் ஒரு கடை கட்டி, வியாபாரம் செய்து வந்தார். நன்னியருக்கு இந்தச் சுவாமிமாரைக் கண்டால் பிடிக்கா தாம். நன்னியர் நல்லூர் செல்லப்பா சுவாமியை ஒரு நாள் நிந்தித் தாராம். அவர் ஒன்றுமே பேசாமல் சென்றதற்காகக் கடைக்குள் அவரைக் கட்டியும் வைத்தாராம். அயலவர்கள் அடுத்த நாளே நன்னியரைக் கடையைவிட்டுத் துரத்திவிட்டார்கள். இந்தக் கடை வெறுமனே கிடந்தபடியினால் யோகர் சுவாமிகள், தமது குருநாதனைக் கட்டிவைத்த அதே கடைக்குள் நித்திரை செய்வாராம். விடியுமுன் எழுந்து நல்லூர்ப்பக்கமாகச் சென்றுவிடுவாராம்.

கொழும்புத்துறை வளவில் இருந்த கடையைத் திருநாவுக்கரசு என்பவர் திருத்தி அமைத்துக் குடிசை ஒன்று கட்டிக்கொடுத்து, சுவாமிகளை அதில் தங்குமாறு அவரும் அவரது தாயாரும் அன்புடன் வேண்டிக்கொண்டார்கள். அவர்களுடைய அன்புக்குக் கட்டுப்பட்ட சுவாமிகள் பூதவுடலைவிட்டு உயிர் பிரியும்வரை அக்குடிசையிலேயே வாழ்ந்து வந்தார்கள். சுவாமிகளை நாடி நாள்தோறும் கூட்டம் கூடத் தொடங்கியது. செவ்வாய் வெள்ளிக்கிழமைகளில் பெருங்கூட் டம். திருமுறைகள் பாராயணம் நடைபெறும். எல்லாத் தரங்களி லும் உள்ள மக்களும் ஒன்று கூடுவார்கள். ஆன்மீக தாகம் கொண் டவர்களும் வருவார்கள். தங்கள் இட்டல் இடைஞ்சல்களைத் தீர்த் துக் கொள்வதற்காகவும் வருவார்கள். சுவாமிகளைச் சோதித்துப் பார்ப்பவர்களும் வருவார்கள்.

சுவாமிகளும் தம்மை நாடி வந்தவர்களுடைய உள்ளப்பாங்கை அறிந்து அவர்களுக்கேற்ற வகையில் புத்திமதிகள் கூறுவார்கள். சிலரை ஏசியும் துரத்துவார். அதைப் பொருட்படுத்தாமல் தம்மை மேலும் மேலும் நாடி வந்தவர்களை அன்புடன் அணைத்து அருளுரை வழங்குவார்கள். அவர்களை ஏசுவதன்மூலம் அவர்கள் வினைகளைச் சுவாமிகள் தொலைத்துவிடுகிறார். இவ்வுண்மையை உணர்ந்த அடி யார்கள் சுவாமிகளின் மறமயக் கருணையை நினைந்து நினைந்து ஆனந்த பாஷ்பம் சொரிவார்கள்.

"எல்லாரும் ஒருகுலம்; எல்லாரும் ஒருஇனம்" என்பது சுவாமி கள் தம்மை நாடி வருபவர்களுக்கு அடிக்கடி கூறும் உபதேசமாகும். "எனக்கும் உனக்கும் என்ன வித்தியாசம்; எல்லாரும் சமம்" என்றும் கூறுவார்கள். "நீயும் மனிதன்; நானும் மனிதன். உங்கள் கடமை

யைப் போய்ச் செய்யுங்கள். இங்கே ஏன் வருகிறீர்கள்? நாங்கள் பிச்சைக்காரர்கள். நாங்கள் சும்மா இருக்கிறோம். எங்களைத் தொந்தரவு செய்யாதீர்கள்!'' என்று ஏசிக் கலைப்பதும் உண்டு.

''கர்மவினையால் எங்களுக்கு இப்பிறவி வந்தது. நாம் ஒன்றும் அறியோம், நாம் ஏன் இங்கு பிறந்தோம்? இப்பிறவியால் ஒரு பொல்லாப்பும் இல்லை; அதனால் பாதகமும் இல்லை. பிறப்பு வர இருந்தது; வந்துவிட்டது. நாங்கள் ஆத்மலாபத்தை நல்லாய்த் தேடிக்கொள்ளலாம்.'' என்று உபதேசம் செய்தார்கள்.

சுவாமிகள் எல்லா மத உண்மைகளையும் அறிந்தவர்கள். அவர் ஒரு சமரச ஞானி.

அதனால் எல்லாச் சமயத்தவர்களும் அவரை நாடி வந்தார்கள். அவரவருக்கேற்ற உபதேசம் கிடைத்து வந்தது. ஆனால் சுவாமிகள் தன்னை ஒரு சிவதொண்டன் என்றே கூறிக்கொள்வார்கள். சுவாமிகளுடைய சந்நிதியில் ஒரு சில நிமிடங்கள் இருந்தாலும் மனச் சாந்தி ஏற்படுவதை யாரும் உணரலாம். எந்த நேரமும் சுவாமிகள் சாந்தி அலைகளையே வீசிக்கொண்டிருந்தார்கள். சுவாமிகளைச் சூழ எந்த நேரத்திலும் ஒரு ஆத்மீக அலை வீசிக்கொண்டே இருக்கும். அந்த ஆத்மீக அலைக்குள் இருந்து ஆனந்தம் பெறத் தம்மைத் தகுதியாக்கிக் கொண்டவர்கள் நாட்கணக்காக உணவையும் நேரத்தையும் தாகத்தையும் மறந்து தியானத்தில் ஈடுபட்டிருப்பர். அப்படிப்பட்டவர்களுக்குச் சுவாமிகள்தான் உணவைப்பற்றி நினைவூட்டுவார்கள். மனோ பக்குவம் அற்றவர்களால் ஐந்து நிமிஷ நேரந்தானும் அங்கு இருக்க முடிவதில்லை. அத்தகையோரின் பரபரப்பை உணர்ந்த சுவாமிகள் ''வந்து வெகுநேரமாகிவிட்டது. ஓடிப்போய் உங்கள் கடமைகளைக் கவனியுங்கள்.'' என்று கூறி அவர்களைப் போகச் செய்துவிடுவார்கள். ''மனிதன் ஓடிக்கொண்டிருக்கிறான். எப்போதான் இவனுடைய ஓட்டம் ஓயுமோ'' என்று கூறுவார்கள்.

''உலகமெல்லாம் இறைவன் சந்நிதானம்; உலகெல்லாம் இறைவன் சந்நிதானம்'' என்று அடிக்கடி கூறுவார்கள். இதனை உணராதவர்கள் கடவுளைத் தேடித்தேடி அலைகிறார்கள். கடவுளை அறிய வேண்டும் என்று கவலைப்படுபவர்கள் இல்லை. அவர்களுடைய கவலை எல்லாம் நிலையில்லாத பொருள்களைப் பற்றியனவாகவே இருக்கிறது.'' ''கடவுள் உங்களை வளர்க்கிறார்; நீங்கள் கடவுளை வளருங்கள்'' என்று சொல்லிவிட்டுப் பெரிதாகச் சிரிப்பார்கள்.

சுவாமிகள் ஒரு சமரச ஞானி. சைவசித்தாந்த வேதாந்த சண்டைகள், சைவ வைஷ்ணவ சண்டைகள், சைவ கிறிஸ்தவ பௌத்த



இஸ்லாமிய சண்டைகள் சுவாமிகளுக்குப் பிடிக்காதவைகள். சுவாமிகள் இவைகள் எல்லாவற்றுக்கும் அப்பாற்பட்டவர்.

''சிவபோதம் நீ என்றும், அவ்வறிவுக்கு அறிவு செய்பவன் சச்சிதானந்த சொரூபியாகிய சிவம் என்றும், அந்தச் சிவ சொரூபத்தைச் சிந்தித்துச் சிந்தித்துச் சிந்தனாதீதத்தை அடைந்து, சிவபோத மற்றுச் சிவமாதலே முத்தி'' என்றும் கூறும் சைவ சித்தாந்தம். வேதாந்தமோ என்னில் ''சிவபோதம் நீ அன்றெனத் தள்ளிச் சிவபோத சாட்சி நீ என்றும், அச்சிவ சாட்சியே சச்சிதானந்த பிரமம் என்றும், அப்பிரமமே நீ என்றும் அறிந்து நின் நிச சொரூபமாகிய பிரம சொரூபமாயிருத்தலே முத்தி என்றும் கூறும்.''

''சிவபோத ஒழிவிலேயே இன்பம் உதிப்பது என்பதும், இன்பாதீத முத்தி என்பதும் இரு சாரருக்கும் ஒத்த முடிபு. வேதாந்த சித்தாந்த சமரசம் இதுவேயாகும்.''

''சர்வம் பிரமமயம்'' என்பது வேதாந்தம். ''சர்வம் பிரமமயம்'' என்னில் இங்கு என்ன பொல்லாப்பு நிகழக்கூடும். ஆதலால் ஒரு பொல்லாப்பும் இல்லை. நீ அன்றும் இன்றும் பரிபூரண சச்சிதானந்த சொரூபியாய் இருநதிருக்கின்றாய், ஆதலால் நீ புதிதாகப் பூரணத்துவத்தை அடையப்போவதில்லை நீ என்றும் பூரணன். உன் பூரணத்துவம் எப்பவோ முடிந்த காரியம். அப்படி உள்ள காரியம், பிரமம் சிந்தனை இறந்தது-சிந்தனாதீபம்-நாம் அறியோம். அனைத்தும் சத்தாய் இருப்பதனால் முழுதும் உண்மை. அனைத்தும் ஆனந்தமயமாதலின் எங்கும் பரிபூரண ஆனந்தம்.

சுவாமிகளுடைய உபதேசங்களை எல்லாருக்கும் பரப்பவேண்டும் என்று அடியார் கூட்டம் விரும்பியது. சுவாமிகளிடம் மாத வெளியீடு ஒன்று வெளியிடுவதுபற்றி அடியார்கள் விண்ணப்பித்தார்கள். சுவாமிகளும் அதற்கிசைந்து நாம் எல்லோரும் சிவதொண்டர்கள்; நாம் செய்வது சிவதொண்டு; ஆகவே எமது வெளியீடும் ''சிவதொண்டன்'' ஆக இருக்கட்டும் என்றார்கள். 1935ஆம் ஆண்டு மார்கழி மாதம் முதலாவது இதழாகிய சிவதொண்டன் திரு. க. கி. நடராசன் அவர்களை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது. சிவதொண்டனுக்கு நிலையம் ஒன்று காங்கேசன்துறை வீதியில் 4-11-53இல் உருவானது. அந்த நிலையத்தின் மேல்மாடியில் இருக்கும் தியான மண்டபத்தில் சுவாமிகளுடைய ஆத்மீக அலையை இன்றும் அனுபவிக்கலாம்.

விவேகானந்த சுவாமிகள் அமெரிக்காவில் ஆற்றிய சொற்பொழிவில் மதம் என்பதுபற்றி இரத்தினச் சுருக்கமாகக் கூறியுள்ளார்,

அந்த இலக்கணம் சுவாமிகளுக்கு மிகப் பிடித்தமான பகுதியாகும். அதன் மொழிபெயர்ப்புப் பின்வருமாறு:-

"உலகத்திலுள்ள மற்றெந்த வஸ்துவிலும் மதம் என்பது உண்மையாகவும் தெளிவாகவும் உறுதியாகவும் பிறர்க்குக் கொடுத்தலும் கூடும்; பெறுதலும் கூடும். ஆகவே முதலில் ஆத்மஞானியாக வேண்டும். கோயில் கட்டுவது, தொழுகை இடங்கள் நிர்மாணிப்பது, பொது வழிபாடு என்று இன்னவைகளிலே மதம் தங்கியிருக்கவில்லை. அது புத்தகங்களிலும் காணப்படமாட்டாது. மதம் என்பது ஆத்மானுபூதியே ஆகும்."

சுவாமிகள் தமது அடியார்கள் எங்கெங்கு இருந்தார்களோ அங்கங்கெல்லாம் செல்லுவார். யாருக்கும் அறிவித்தல் கொடுக்க மாட்டார். இருந்தாற்போல் ஒரு அடியவருடைய வீட்டில் தோன்றுவார். கேள்வியுற்ற அடியவர்கள் எல்லாரும் அங்கு வந்து கூடுவர். அவர்களுக்கெல்லாம் நல்லுபதேசம் கிடைக்கும். சில சமயம் கண் மூடிச் சிவயோகத்திலே ஆழ்ந்துவிடுவார். அன்பர்களும் தியானத்தில் மூழ்கி ஆனந்தம் பெறுவர். இரண்டு வருட காலம் சுவாமிகள் கொழும்புத்துறை ஆச்சிரமத்தைவிட்டு எங்கும் சென்றதில்லை. சுவாமிகள் பூதவுடலை எந்த நேரத்திலும் உதறித்தள்ளலாம் என்று அடியார்கள் எதிர்பார்த்தனர். அதற்குரிய காலமும் நெருங்கியது. 24-03-1964 செவ்வாய்க்கிழமை அதிகாலை ஆயிலிய நட்சத்திரத்தில் சுவாமிகள் மகாசமாதி அடைந்தார்கள். சுவாமிகளுடைய குருபூசை ஆயிலிய நட்சத்திரத்தில் வெகுசிறப்பாகக் கொண்டாடப்பட்டுவருகின்றது.

"எவ்வுயிரும் பெருமான் முன்னிலையென்று கருணைசெய்
கடவுள் உள்ளும் புறம்பும் உள்ளார்."

— யோகர் சுவாமிகள்



# நவநாதசித்தர்

சொல்லரிய சித்தர்குழாம் நிறைகொல்லிச் சிகரமதிற்
கருதிமுடி வானஒளி வெளியை நாடி
அல்லலறுத் தானந்தப் பேரமுதம் அநுதினமும்
அருந்தியடி பணிந்தவரை அன்பாற் போற்றி
வெல்லரிய சித்திகளோ ரெட்டினையும் சிறுமகவு
போலியற்றிப் பித்தரைப்போல் வெளிவந் திந்நாள்
மல்லல்வளம் கரிகாலி நாகன்மனைக் கான்முளைகள்
வழுத்துநவ நாதனடி வணக்கஞ் செய்வாம்.

நாவலப்பிட்டிப் பட்டினத்திலிருந்து நுவரெலியா செல்லும் கொத்மலை வீதியில் பதின்மூன்றுவது மைல் தூரத்தில் உள்ளது குயின்ஸ்பரி என்ற தேயிலைத்தோட்டம். அத்தோட்டத்தில் கரிகாலியிலிருந்து வந்து குடியேறிய நாகன் குடும்பத்தினர் பெரியகங்காணியாக இருந்துவந்தனர். நாகனுடைய அன்புமனைவியார் பெருமாள் அம்மையார். இந்த அம்மையார் அடியார் பக்தியிற் சிறந்தவர். வீட்டிற்கு வரும் அடியார்கள் அனைவரையும் சிவமாகவே பாவிப்பவர். பெருமாள் அம்மையார் அடியார் பக்தியிற் சிறந்து விளங்கியதோடு நிர்வாகத் திறமையிலும் வல்லவர். அம்மையார் வருடத்தில் பாதி நாட்கள் கரிகாலியிலும் பாதி நாட்கள் குயின்ஸ்பரியிலும் காலம் கழித்துவந்தார்.

கொல்லிமலை தமிழ் நாட்டில் சேலம் மாவட்டத்தில் நாமக்கல், ஆத்தூர்த் தாலுக்காக்களில் உள்ள குன்றுத்தொடர். இதற்குக் கொல்லி அறப்பள்ளி என்ற பெயரும் உண்டு. அம்மலை உச்சியில் உயிர்களுக்கு ஆன்ம ஞானமாகிய அஹிம்சா தர்மத்தை அருள்செய்து அஞ்ஞானத்தைப் போக்கும் ஞானவல்லியும் அறக்கடவுளும் விளங்கும் அறப்பள்ளிநாதர் சந்நிதி ஒன்று விளங்குகிறது. அறப்பள்ளிநாதர் சந்நிதானத்திற்கு ஆதிசங்கராச்சாரிய சுவாமிகள் சென்று அம்மையாரின் திருவருட் பொலிவைக் கண்டு அம்மையார் சந்நிதிமுன் முருகக் கடவுளை ஸ்தாபித்திருக்கின்றனர். அம்மலையில் பல பெரிய குகைகள் இருக்கின்றன. அவற்றில் பல சித்தர் குழாங்கள் வசிக்கின்றனர்.

இவர்களில் ஒருவரே நவநாதசித்தர் என்ற பெயருடையவரும்: நீண்டகாலத் தவத்தினால் சித்தி பெற்றவர். ஒரே நேரத்தில் பல இடங்களில் தோற்றம் அளித்தவர். கொல்லிமலைச் சித்தர்களுள் மிகச் சிறந்தவராகப் போற்றப்பட்டவர். அயல் கிராமங்களிலுள்ள மக்கள் இவரை மானம்பாக்கி சுவாமிகள் என அழைத்துவந்தார்கள். சுவாமிகள குகையில் மோனத்தவம் புரிந்த காலங்களில் பசித்தால் அடி

வாரத்திலுள்ள கிராமங்களுக்கு வருவார்கள். அத்தகைய கிராமங்களில் கரிகாலியும் ஒன்று. பெருமாள் அம்மையாரின் அடியார் பக்தியால் கவரப்பட்ட நவநாதசித்தர் அடிக்கடி அம்மையாரிடம் வந்து உணவு பெற்றுச் செல்வார். சித்தர் அம்மையாரைச் செல்லமாக 'ஆயா' என்று அழைப்பார். கௌபீன உடையோடு மலையிலிருந்து வரும் சித்தர் நேராக அம்மையாரின் வீட்டு முற்றத்திற்குச் சென்று 'ஆயா' என்று குரல் கொடுப்பார். அம்மையார் எங்கிருந்தாலும் எத்தொழிலில் ஈடுபட்டிருந்தாலும் ஓடோடியும் வந்து சுவாமிகளுடைய திருப்பாதங்களை விளக்கி பூப்போட்டு வணங்கியபின் தயாராக இருக்கும் உணவினைக் கொண்டுவந்து இருகைகளையும் ஏந்தி நிற்கும் சுவாமிகளின் கைகளில் இடுவார்கள். சுவாமிகள் நின்ற நிலையிலேயே உணவை உண்டு, கையில் நீருற்ற அதனையும் வாங்கி அருந்தியவுடன் தவத்தை நோக்கிச் சென்றுவிடுவார்கள்.

அம்மையார் ஒருநாள் சுவாமிகளுக்கு உணவு ஊட்டும்போது, "சுவாமி, சிலோனில் நாங்கள் ஒரு சுப்பிரமணியர் கோயில் கட்டுகின்றோம்; கெதியில் கும்பாபிஷேகம் நடத்த இருக்கின்றோம்; சுவாமிகள் தவறாது அதற்கு வரவேண்டும்" என்று மனம் உருகிக் கேட்டார்கள். சுவாமிகள் புன்முறுவல் பூத்தவராய், "ஆயா நினைச்சா அடிமை வரும்" என்று கூறினார்கள். அம்மையார் குயின்ஸ்பரி வந்து மாதக்கணக்காகிவிட்டன. கோயில் கட்டும் வேலை முடிவடைந்து கும்பாபிஷேகத்திற்கு நாளும் குறித்தாகிவிட்டது. கும்பாபிஷேகத்திற்கான ஆயத்தங்கள் எல்லாம் மிக விரைவாக நடைபெற்றுக்கொண்டிருந்தன.

## நவநாதசித்தர் குயின்ஸ்பரி வருகை

கும்பாபிஷேகத்திற்கு முதல்நாள்தான் அம்மையார், தான் சுவாமிகளுக்குச் சொன்னவற்றை நினைவுகூர்ந்தார். மூத்த மகனை அழைத்துத் தான் சுவாமிகளிடம் கூறியதையும் சுவாமிகள் அதற்குக் கொடுத்த விடையையுங் கூறிச் சுவாமிக்கு ஒரு கடிதம் எழுதுமாறு பணித்தார். "இன்று தந்தி அடித்தாலும் சுவாமிகள் வந்துசேர வாரம் ஒன்றாகும். நாளைக்குத்தான் கும்பாபிஷேகம் முடிந்துவிடுமே. இன்று சுவாமிக்கு அறிவித்து என்ன பயன்?' என்று மகனார் கூறினார். நினைவுக்கு வந்த உடனே அறிவிக்கவேண்டியது எங்கள் கடமை என்றார் அம்மையார். அன்றே தபால் எழுதித் தபாற்கந்தோரில் சேர்க்கப்பட்டது. தனது கடமை ஒன்று நிறைவேறிவிட்டதாக அம்மையாரின் மனதில் ஒரு நிறைவு; சுவாமிகளின் அருட்சக்தியை நன்கு உணர்ந்தவராகையினால் சுவாமிகள் வரக்கூடும் என்றொரு நம்பிக்கை.



மறுநாள் அதிகாலை, வீட்டிலிருந்து கும்பாபிஷேகத்திற்கு வேண்டிய பொருட்களுடன் கோயிலுக்கு வந்தார் அம்மையார். அந்த நேரம் சுவாமிகள் எதிரே வந்து கொண்டிருந்தார். அம்மையாருக்கு ஆனந்தம் தாங்கவில்லை. ஓடிச்சென்று சுவாமிகளுடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கி ஆனந்த பாஷ்பம் சொரிந்தார். சுவாமிகளும் அம்மையாரைத் தழுவி எடுத்துக்கொண்டார். "சுவாமி நேற்றைக்குத்தானே கடிதம் எழுதினேன். எப்படிச் சுவாமி வந்தீர்கள்?" என்று அதிசயம்மிகக் கேட்டார் அம்மையார். "ஆயா நினைச்சுது அடிமை வந்திட்டுது", என்று சுவாமிகள் கூறினார்கள்.

கோயிலுக்கு முன்னாக வலது பக்கத்தில் கோணத் திசையாக உள்ள ஒரு இடத்தைச் சுட்டிக்காட்டி: 'ஆயா இந்த இடத்தில்தான் அடிமையைச் சமாதி வைக்கவேண்டும்' எனச் சுவாமிகள் கூறினார்கள். அதைப்பற்றி எல்லாம் எதற்காகச் சுவாமிகள் இப்பொழுதே கூறிக்கொண்டிருக்கிறீர்கள்? என்று செல்லமாகக் கடிந்தார் அம்மையார்.

நாட்கள் சில உருண்டோடின. குயின்ஸ்பரிக்கு வந்திருக்கும் சாமியாரைப்பற்றித்தான் மலையகமெங்கும் பேச்சு அடிபட்டது. மலையகத்திலுள்ள ஆயிரக்கணக்கான தோட்டங்களிலிருந்தும் பக்தர்கள் சுவாமிகளைத் தரிசிக்க வந்தனர். குயின்ஸ்பரி ஒரு யாத்திரைத் தலமாக விளங்கியது. இலங்கையின் பல பாகங்களிலிருந்தும் உயர்ந்த உத்தியோகத்தர்கள், ஆன்மீகவாதிகள் வந்து சென்றனர். சுவாமிகளைத் தரிசிக்க இந்தியாவிலிருந்தே பக்தர்கள் வந்தனர். இந்தியாவிலிருந்து வந்தவர் சுவாமிகளைத் தரிசித்தவுடன், இவர் அந்த ஊரில் சமாதியானவர், இந்த ஊரில் சமாதியானவர் என்று பேசத் தலைப்பட்டனர். சுவாமிகளைத் தரிசிக்க வந்த சேலம்வாசி ஒருவர் ஒரு வருடத்திற்கு முன்புதான் இச்சுவாமியைத் தாங்கள் சேலம் பக்கத்தில் சமாதி செய்ததாகத் தெரிவித்தார். அதனைச் சுவாமிகளிடம் விசாரித்தபோது சுவாமிகள் புன்சிரிப்புடன் 'இருக்கும் அப்பா' என்றார்.

## நவநாதசித்தரின் சித்துக்கள்

சித்தர்களுக்கு அவர்கள் செயல் எல்லாம் இயற்கை. சாமானியராகிய எங்களுக்கு அவைகள் அற்புதங்கள். தோட்டத் தொழிலாளருடன் சுவாமிகள் சகசமாகப் பழகினார். தொழிலாளரும் சுவாமிகள் மேல் அன்பும் மரியாதையும் உடையவராகப் பழகினர். பக்கத்தில் உள்ள தோட்டங்கள்தோறும் சுவாமிகள் தாமாகவே உலாவிவருவார். குயின்ஸ்பரித் தோட்டத் தொழிலாளரிடையே சுவாமிகள் பல சித்துக்கள் விளையாடினார்கள்.

ஒருநாள் சுவாமிகள் பக்கத்துத் தோட்டத்தில் உள்ள கங்காணியார் ஒருவரைச் சந்திக்கத் தனிமையில் சென்றுகொண்டிருந்தார்கள். தேயிலைச் செடி மறைவில் கஞ்சாப்புகை குடிப்பதற்காக மூவர் மறைந்திருந்தனர். சுவாமியைக் கண்டதும், சுவாமி! கஞ்சாப்புகை குடித்துவிட்டுத்தான் போகவேண்டும் என்று வற்புறுத்தினர். சுவாமிகள் மறுத்தார். அவர்கள் விடவில்லை. சுவாமியும் இணங்கினார். நச்சுத் தன்மையுள்ள சருகுகம் வைத்து, கஞ்சா தயாரித்தனர். முதலில் சுவாமிகள்தான் குடிக்க வேண்டும் எனக் கூறினர்.

சுவாமி மறுத்து, 'நீங்களே முதலில் குடியுங்கள். நீங்கள் குடித்து முடிந்தபின் நான் கடைசியாகக் குடிக்கின்றேன்' என்றார். அவர்கள் சுவாமிகளை விடவில்லை; வற்புறுத்தினார்கள். சுவாமிகள் ஒரு முறை புகையை இழுத்து முன்னாக ஊதினார். மூவர் முகத்திலும் புகை பிடித்த உடனே மயங்கி வீழ்ந்தனர். சுவாமிகள் தாம் செல்லவேண்டிய இடத்திற்குச் சென்றுவிட்டார்கள். புகை குடித்த மூவரையுந் தேடி அந்தந்த வீட்டில் உள்ளவர்கள் தோட்டம் முழுவதும் அலைந்தனர்.

ஈற்றில் மூவரும் மயங்கிய நிலையில் நாவலப்பிட்டி ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டனர். அங்கும் தெளிவு ஏற்படாமையால் கண்டி ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவைக்கப்பட்டனர். சுவாமிகளுடன் இவர்கள் தகாத முறையில் நடந்துகொண்டார்கள் என்ற செய்தி எப்படியோ தெரிந்துவிட்டது. தொழிலாளர் மூவரினதும் உற்றார் உறவினர் சுவாமிகள் இருந்த இடஞ் சென்று, பிழையை மன்னிக்குமாறு கண்ணீர் வர வேண்டினர். சுவாமிகள் தமக்கும் அதற்கும் சம்பந்தம் ஒன்றுமில்லையென அனுப்பிவிட்டார். நான்கு ஐந்து நாட்களாகியும் அவர்கள் மயக்கம் தெளியவில்லை. சுவாமிகளிடம் மீண்டும் சென்று உயிர்ப்பிச்சை இடுமாறு மன்றாடினார்கள். சுவாமிகள் ஒரு சிகறெற் வாங்கிப் பற்றவைத்து ஒருமுறை புகையை இழுத்து ஊதினார். புகை சுழன்று சுழன்று சென்றது. நீங்கள் கவலையில்லாமல் செல்லுங்கள். நோய் சுகமாய்விடும் என்று வந்தவர்களை அனுப்பினார். சுவாமி சிகறெற் புகையை இழுத்து வெளியே ஊதிய அதே நேரத்தில் மூவரும் மயக்கம் தெளிந்து எழுந்தனர்.

இச்செய்தி நிகழ்ந்தபின் தோட்டத் தொழிலாளர் மத்தியிலே சுவாமிமீது பெருமதிப்பும் பயபக்தியும் ஏற்பட்டன. சுவாமிகளைத் தரிசிப்பதற்காக எங்கிருந்து பக்தர்கள் வந்தாலும் தங்குமிட வசதி, சாப்பாட்டு வசதி யாவும் கங்காணியார் குடும்பத்தினர் அன்போடு மனப்பூர்வமாகச் செய்து ஆதரித்து வந்தனர். சுவாமிகளுடைய வருகைக்குப் பின்னர் கங்காணியார் வீடு ஓர் அன்ன சத்திரமாக மாறியதென்றே சொல்லவேண்டும்.



ஒருநாள் பெருமான் அம்மையார் சிதம்பரம் செல்ல வேண்டுமென்று சுவாமிகளிடம் உத்தரவு கேட்டார். சுவாமிகள் அனுப்பிவைத்தார்கள். அம்மையார் சிதம்பரம் சென்று ஞானப்பிரகாசத்தில் தீர்த்தம் ஆடி ஜெபம் செய்வதற்காகச் சுவாமிகளால் கொடுக்கப்பெற்ற உருத்திராக்க மாலையைத் தேடினார், காணவில்லை. வீட்டில் மறந்துபோய் வைத்துவிட்டு வந்துவிட்டார். கண்கள் மூடியபடி கைகள் கூப்பிய வண்ணம் நவநாதசித்தரை நினைந்து உருகினார். உருத்திராக்க மாலை கைகளில் விழுந்திருக்கக் கண்டார். நவநாதப் பெருமான் புறம்புறந் திரிந்து கருணை பாலிப்பதை உணர்ந்துணர்ந்து அம்மையார் உள்ளம் நெக்குருகினார்.

சுவாமிகளுடைய மிக நெருங்கிய பக்தர்களுள் திருக்கடம்பத்துறை அன்பர் சி. குருசாமியும் ஒருவர். குருசாமி அவர்களுக்குச் சுவாமிகளுடைய தொடர்பு ஏற்பட்டதன் பின்பு கொல்லிமலைச் சித்தர்களைப் பார்க்கவேண்டும் என்றொரு ஆசை எழுந்தது. அந்த ஆசையைச் சுவாமிகளிடம் கூறினார். அமாவாசைத் தினத்தன்று ஒருநாள் இரவு 8 மணிக்குக் கொல்லிமலை வருமாறு சுவாமிகள் குருசாமியை அழைத்தார்கள். இந்த அமாவாசை இருட்டில் எப்படிச் செல்வதென்று குருசாமி தயங்கினாராயினும் சுவாமிகள்மீது கொண்ட நம்பிக்கையில் சுவாமியைப் பின்தொடர்ந்தார். குருசாமியின் தயக்கத்தை உணர்ந்த சுவாமிகள் குருசாமியின் வலது கையைத் தமது இடது கையால் பற்றிக்கொண்டு கண்களை இறுக மூடிக்கொள்ளும்படியும் திறக்கச் சொல்லும்போது திறக்கவேண்டும் என்றும் அருளினார். 2, 3நிமிடங்களுக்குள் கண்களைத் திறக்கச் சொன்னார் சுவாமி. குருசாமி கண்களைத் திறந்தார். என்ன ஆச்சரியம்! கொல்லிமலை உச்சியில் தாம் இருப்பதை உணர்ந்தார். சுவாமிகள் பெரியதொரு பாறுங்கல்லை இலகுவாகக் கையால் அகற்றி உள்ளே அழைத்துச் சென்றார். ஏழு சித்தர்கள் ஆழ்ந்த சமாதியில் இருப்பதைக் கண்டு தரிசித்தார்.

சித்தர் ஊரைக்கரை, கோம்பை முதலிய இடங்களில் பக்தர்களின் வழிபாட்டுக்காளானார். அங்குள்ள மக்கள் அபிஷேகாதிகள் செய்தே சித்தரை உபசரித்தார்கள். ஆலயத்துடையான்பட்டி இராமசாமி ரெட்டியார் திருப்பணி செய்துள்ள பெருமாள் கோயில் கிணற்றில் அதிக ஆழத்திற்கு வெட்டியும் நீரின்மையைச் சித்தரிடம் தெரிவிக்க சித்தர் ஒரு சக்கரத்தைத் தகட்டில் வரைந்து கிணற்றில் இடச் செய்தார். இவ்வாறே இராமசாமி ரெட்டியார் செய்யக் கிணற்றில் நிரம்ப நீர் ஊறிவந்தமையை ரெட்டியார் ஒரு விழாவாகக் கொண்டாடினார். சுவாமிகளை வைத்துக்கொண்டே கும்பாபிஷேகத்தை வெகுவிமரிசையாக நடத்தினார்.

பச்சைப்பெருமாள் பட்டியில் ஒரு ரெட்டியார் புறந்திண்ணையில் சித்தர் இமையா நாட்டத்தோடு யோகத்தில் இருந்தார். ரெட்டியாருக்குச் சுவாமிகளைக் கண்டால் பிடிக்காது. எல்லோரும் வெளிவேடம் போடுகிறவர்கள் என்பது அவரது எண்ணம் ஒரு உண்மை மகானை உண்மை மகானுல்தான் புரிந்துகொள்ள முடியும்.

"புறந்திண்ணையிலே ஒருத்தர் செத்த ஆடு விழிப்பதுபோல் விழித்து வேஷம் போடுகிறார்" என்று ரெட்டியார் வீட்டிலுள்ளாருக்கும் போவோர் வருவோர் எல்லோருக்கும் பரிகாசமாகக் கூறினார். அவருடைய பரிகாசம் பேச்சளவில் நின்றுவிடவில்லை. செயலிலும் இறங்கியது. சித்தருடைய தலையில் ஒரு கொள்ளிக் கட்டையைக் கொண்டு வந்து வைத்தார். சித்தர் அதனைச் சிறிதும் பொருட்படுத்தாது உணர்வு வரப்பெருதவராக இருந்தார். இதனை உணர்ந்த மற்றொரு ரெட்டியார் சிரத்திலிருந்த கொள்ளிக் கட்டையை அகற்றி, சித்தரை வணங்கி நின்றார். சித்தர் விழித்தார். எதிரே நின்றவரைப் பார்த்து "என்னப்பா" என்றார். "சுவாமி இந்த வீட்டு ரெட்டியார் தங்கள் தலையில் நெருப்பிட்டார். அதனை அடியேன் அகற்றினேன்" என்றார். "அப்படியா? அவர் மிக நல்லவர்" என்று சித்தர் அகன்றார். அக்குடும்பமே இருந்த இடம் தெரியாது அழிந்து போனதை யாவரும் அறிவர்.



# பெரியானைக்குட்டி சுவாமிகள்

பம்பாய் செல்லும் வழியில் பூனாவில் ஞானதேவருடைய சமாதியைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. அதனை ஆனந்த சமாதி என்னும் அழைப்பார். சமாதியினுள்ளே சென்றதும் வாய்விட்டுச் சொல்ல முடியாத ஆனந்தம் ஒன்றை அநுபவிக்க முடிந்தது. பகவான் ரமணமகரிஷிகளின் சந்நிதியிலே ஓர் ஆத்மீக அலை வீசியதையும் அதனுள் இருக்கும்போது எமதுள்ளம் அடைந்த பேரானந்தத்தையும் அங்கும் அநுபவிக்க முடிந்தது. அத்தகையதொரு பேரானந்தத்தை, கொழும்பு முகத்துவாரத்தில் இருக்கும் பெரியானைக்குட்டி சுவாமிகளுடைய சமாதிக்குச் சென்றபோது அநுபவிக்க முடிந்தது.

ஈழ நாட்டில் அழகான பட்டினங்களுள் முதலிடம் வகிப்பது கண்டியாகும். பெரியானைக்குட்டி சுவாமிகள் மிக இளம்பராயத்தில் கண்டியில் வசித்ததாகத் தகவல்கள் கிடைத்துள்ளன. கண்டிக் கடைவீதியிலே சிறுபையனாகச் சுற்றித் திரிந்தார். கண்டித் தெப்பக்குளத்திற்குப் பக்கத்திலே ஒரு சலவைத் தொழிலாளி வசித்துவந்தார். அவர் ஒரு நாள் இந்தப் பையனைத் தமது வீட்டிற்கு வருமாறு அழைத்தார். பையனுடைய நல்ல குணங்களை அறிந்த அத்தொழிலாளி தனது சொந்தப் பிள்ளையைப்போலவே அன்புசெய்து வளர்த்து வந்தார். பையனும் வளர்ப்புத் தந்தைதக்கு வேண்டிய உதவிகளைத் தாமாகவே உணர்ந்து செய்துவந்தார். அழுக்குத்துணி மூட்டைகளைச் சுமந்து கொண்டு குளத்திற்குச் செல்லுதல், துணிகளைப் பால்போல் நிறமாகும்வண்ணம் துவைத்தல், தோய்த்த துணிகளைக் காயவிடுதல், காய்ந்த துணிகளை மாராப்பாய்க் கட்டி வீட்டுக்குச் கொண்டுசெல்லுதல் போன்ற தொழில்கள் அத்தனையையும் மகிழ்வுடன் செய்தார். ஒய்வு நேரங்களில் ஓடி ஆடி விளையாடவும் தவறவில்லை. சிறுவயதிலே உடைகளின் அழுக்கைப் போக்குவதிலே வல்லவரான சிறுவர் பெரியானைக்குட்டி சுவாமிகள் ஆனதும் எத்தனையோ ஆத்மாக்களின் மன அழுக்கைப் போக்கி உள்ளார். கடையிற் சுவாமிகளின் உத்தமசீடர் சடைவரத சுவாமிகளும், திருவளந்தில் இன்று பூதஉடலோடு திருவருள் புரிந்துகொண்டிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிவானந்த மௌனகுரு சுவாமிகளும் இக்குலத்திற் பிறந்தவர்களே.

ஆனைக்குட்டி என்பது வளர்ப்புத் தந்தையால் வைக்கப்பட்ட பெயராகும். ஒரு நாள் கொல்லைப்பக்கம் சென்ற ஆனைக்குட்டி "அம்மா அம்மா பாம்பு" என்று சத்தமிட்டார். இச்சத்தத்தைக் கேட்ட வளர்ப்புத் தாயார் ஓடோடியும் வந்து "எங்கடா மகனே பாம்பு" என்றார்கள். ஆனால் ஆனைக்குட்டியோ கெக்களம் கொட்டிச் சிரிக்கலானார். இந்தப் பரிகசிப்பு, தாய்க்கு மிகுந்த கோபத்தை உண்டாக்கியது. இரண்டாம் முறையும் அப்படியே பலத்த சத்தமிட்டு அழைத்தார். வீட்டிலிருந்த சில ஆண்கள் மட்டும் ஓடிச்சென்று "பாம்பு எங்கே" என்று விசாரித்தனர். அவர்களையும் ஆனைக்குட்டி பரிகசித்து அனுப்பியது. மூன்றாந்தடவையும் உரக்கக்கூவி அழைத்தார். ஒருவரும் ஏன் என்று கேட்கவில்லை.

சில மணித்தியாலங்கள் சென்றன. கொல்லைப் பக்கம் சென்ற ஆனைக்குட்டியைக் காணவில்லையே என்று தேடிச் சென்றனர். அங்கே ஆனையைக் காணாமல் திகைத்தனர். ஆனால் அவர் மலங்கழித்த இடத்தில் தங்கக் குவியலாய் இருப்பதைக் கண்டனர். தங்கத்தை எடுத்துப் பாதுகாப்பாக வைத்துவிட்டு, குடும்பம் முழுவதுமே ஆனைக்குட்டியைத் தேடுதலில் ஈடுபட்டது. கண்டி வீதி எல்லாம் தேடினர் கண்டுபிடிக்க முடியவில்லை. ஈற்றில் கண்டி ஸ்ரீ கதிரேசன் ஆலயத்தின் படியில் படுத்திருக்கக் கண்டனர். அவரை வீட்டிற்கு வருமாறு பலபடியாகக் கெஞ்சி அழைத்தனர்.

முற்பிறவியில் உங்களுக்கு உழைத்துத் தரவேண்டிய கடன் இருந்தது. அது நிறைவேறி விட்டது. இப்பொழுது நீங்கள் யாரோ? நான் யாரோ? என்று கூறி மௌனமாக இருந்துவிட்டார். வினை ஒளியும் வரையும் தம்மைக் காட்டிக் கொள்ளாமலே வாழ்ந்தார். இந்தப் புதினத்தைக் கோயில் குருக்கள் கவனித்தார். சலவைத் தொழிலாளரைப் பார்த்து, "பையனுக்கு மூளைக்கோளாறு ஏற்பட்டுள்ளதுபோலத் தெரிகிறது. ஆகவே அவரைத் தொந்தரவு செய்யாமல் வீட்டுக்குச் செல்லுமாறு" கட்டளையிட்டார். சலவைத் தொழிலாளிக்கும் பையன் "பாம்பு பாம்பு" என்று அழைத்த செய்தி நினைவுக்கு வரவே சரிதான் என்று சொல்லி வீடு சென்றுவிட்டார். கதிரேசப் பெருமான்தான் குருக்கள் நாவினின்று பேசியுள்ளார். இல்லையேல் அவர்கள் வெறுமனே வீடு திரும்பியிருக்கமாட்டார்கள்.

இறைவன் ஆனைக்குட்டியைப் பலப்பல சாதனைகளில் ஈடுபடுத்தி உள்ளுணர்வை உயரச் செய்துகொண்டிருந்தான். ஆனைக்குட்டி தினமும் கடைவீதிக்குச் சென்று, எச்சில் இலைகளைப் பொறுக்கி, அவற்றில் உள்ள எச்சில்களைச் சாப்பிட்டுவிட்டு, கோயில் படிக்கே திரும்பி வந்துவிடுவார். உலக மக்கள் தம்மை நெருங்காதவாறு மகான்கள் தம்மை மறைத்தே வாழ்ந்து வந்தனர். எச்சில் இலையோடு தினமும்



உட்கார்ந்திருக்கும் ஒருவரை யார்தான் அண்டுவார்கள். அப்படிப்பட்ட ஒருவரோடு பேச்சுக்கொடுத்தாலே தமக்குக் கௌரவம் இல்லை என்று நினைக்கலாம் அல்லவா? இச்சந்தர்ப்பத்திலே ஜீவன் முக்தர்களைப் பற்றிக் கைவல்யத்திலே வரும் செய்யுள் ஒன்று நினைவு கூரத்தக்கதாகும்.

"காமமாதிகள் வந்தாலும் கணத்திற்போம் மனத்திற் பற்றார்
தாமரைஇலைத் தண்ணீர்போல் சகத்தொடுங் கூடி வாழ்வார்
பாமரர் எனக் காண்பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்
ஊமருமாவரர் உள்ளத் துவகையாம் ஜீவன்முத்தர்"

நான் என்ற அகந்தை அற்றுப்போகவும், ஆண்டவன் படைப்பில் எவ்வித உயர்வு தாழ்வும் கருதக் கூடாது என்பதனைச் சாதனைப் படுத்தவும் மகான்கள் இத்தகைய செயல்களில் ஈடுபட்டு நடிப்பார்கள். அந்தணராகப் பிறந்த இராமகிருஷ்ணபரமகம்சதேவர் அதிகாலையில் எழுந்து சென்று புலையர் சேரியைக் கூட்டி மெழுகி வைத்துவிட்டு விடியுமுன் வீடு திரும்பிவிடுவாராம்.

பெரியானை கண்டியில் இருக்கும்வரை தம்மை மற்றையோருக்குக் காட்டிக்கொள்ளாது வாழ்ந்தாலும் கண்டியை விட்டுப் புறப்படும்போது ஜீவன்முக்த நிலையை அடைந்தே சென்றுள்ளார். மகான்கள் பிறந்த இடத்திலோ அன்றி வளர்ந்த இடத்திலோ சந்நியாசி ஆவது இல்லை. காரணம் அந்த இடத்து மக்கள் அவர்களை அவர்களது பூர்வ ஆச்சிரமம் கொண்டேதான் மதிப்பர். அவர்களது அகவளர்ச்சியையும் உள்ளுணர்வையும், சக்தியையும் உணர்ந்துகொள்வதில்லை. கள்வன் ஒருவன் சந்நியாசியாகிவிட்டால், எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்தாலும் கள்வன் என்ற பெயரை மறக்கமாட்டார்கள். ஆனைக்குட்டி கண்டியில் இருந்திருந்தால் சலவைத்தொழிலாளியின் மதிப்பிற்கு மேல் அவ்வூர் மக்கள் கொடுத்திருக்க மாட்டார்கள்.

## இந்தியாவில் நடைபெற்ற அற்புதங்கள்

ஆனைக்குட்டி சுவாமிகள் இந்தியா சென்று சேர்ந்தார். சாதாரண ஆனைக்குட்டி அல்ல. ஜீவன்முக்தரான ஆனைக்குட்டி. நவநாத சித்தரும் ஆனைக்குட்டி சுவாமிகளும் ஒருமுறை பல சாதுக்களோடு ஒரு புகையிரத ஸ்தானத்தில் புகையிரதம் ஏறினர். இதைக் கண்ணுற்ற புகையிரத நிலைய அதிபர் ஆனைக்குட்டியையும், நவநாதசித்தரையும் தவிர மற்றைய சாதுக்களையெல்லாம் இறங்குமாறு கட்டளையிட்டார்.

மற்றைய சாதுக்களோடு இவர்களும் இறங்கினர். சுவாமிகள் இருவரும் செல்லலாம் எனப் புகையிரத நிலைய அதிபர் கூறினார். எமது சகோதரர்களுக்கு இடம் இல்லை என்றால் நாமும் போகவில்லை என்று சாதுக்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து நடந்துபோய் பக்கத்திலுள்ள ஒரு காட்டில் தங்கினர். காட்டில் நெருப்பு மூட்டி, சுற்றிவரக் குளிர் காய்ந்தனர்.

புகையிரத யந்திரம் வேலை செய்துகொண்டே நிற்கிறது. நகர மறுத்துவிட்டது. சாரதி தன்னாலானமட்டும் முயன்றார். ஓடாமல் நிற்பதற்குரிய காரணத்தை அவரால் கண்டுகொள்ள முடியவில்லை. பெரியபெரிய பொறியியலாளர் எல்லாம் வந்து பார்த்து முயன்றனர். கைகூடவில்லை. இயந்திரத்தில் எவ்வித கோளாறும் இல்லை. அப்படியானால் ஏன் ஓட மறுக்கிறது? என்ற பிரச்சனையில் ஆழ்ந்தனர். ஏறிய சாதுக்களை இறக்கிவிட்டதுதான் காரணமாய் இருக்கலாம் எனப் பிரயாணி ஒருவர் கூறினார். புகையிரத நிலைய அதிபரும் அதனை அரைகுறையாக ஏற்றுக்கொண்டார். அந்தக் காலத்தில் பெரிய பொறியியலாளராக இருந்தவர் ஒரு வெள்ளையர். அவரும் இன்னும் சில உயர்ந்த உத்தியோகத்தரும் சேர்ந்து சாதுக்களைத் தேடிப் புறப்பட்டனர். சாதுக்களைக் காட்டிலே கண்டனர். வீழ்ந்து வணங்கி, தமது பிழைகளைப் பொறுக்குமாறு வேண்டினர். புகையிரதத்தை ஓடச்செய்யுமாறு வேண்டினர். ‘‘சுவாமிகள் எதைச் செய்யவேண்டுமென்று விரும்புகிறீர்களோ அதை நாங்கள் தவறாது நிறைவேற்றி வைப்போம்’’ என்றார்.

‘‘நாங்கள் பரதேசிகள். உழைப்புப் பிழைப்பு அற்றவர்கள். எங்களிடம் எப்போதுமே பணம் இருக்காது. உங்களைப்போன்ற இல்லறத்தார்கள்தான் உண்ண உணவும் உடுக்க உடையுந் தந்து காப்பாற்ற வேண்டும்.

‘‘துறந்தார்க்குந் துவ்வாதவாக்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை’’

என்றுதானே வள்ளுவர் கூறுகின்றார். ஆகையால் எங்களைப் போன்ற சாதுக்களிடமிருந்து எப்பொழுதேனும் புகையிரதக் கட்டணம் அறவிடக்கூடாது. இதற்குச் சம்மதமானால், இதனை எழுதிக் கையொப்பம் இட்டுத் தாருங்கள். அதன் பின்பு புகையிரதம் ஓடுவதற்கு வழிபார்ப்போம்’’ என்று கூறினார்கள்.

இது அந்த வெள்ளையருக்குப் பெரிய வியப்பாக இருந்தது. தாமே சுவாமிகள் கூறியவாறு எழுதிக் கையொப்பமிட்டுச் சுவாமிகளிடம் கொடுத்தார்கள். சுவாமிகள் மகிழ்வோடு வாங்கிக் கொண்டார்கள்.



சுவாமிகள் அந்த வெள்ளைக்காரரிடமிருந்தே ஒரு சிகரெற்றை வாங்கிப் பற்றவைத்தார்; புகையை இழுத்து வெளியே ஊதினார். என்ன ஆச்சரியம்! 4, 5 மணித்தியாலங்களாக அசையாது நின்ற புகையிரதம் தாமாகவே நகரத் தொடங்கியது. இத்தகைய அற்புதங்கள் நிகழ்த்திய மகான்களை யார் நினைக்கின்றார்கள்?

## கொழும்பு மாநகரில் ஆனைக்குட்டி சுவாமிகள்

கொழும்புக் கோட்டைப் புகையிரத ஸ்தானத்திற்கும் மருதானைப் புகையிரத ஸ்தானத்திற்கும் இடையில் கப்பித்தாவத்தை என்றொரு இடம் உள்ளது. அந்த இடத்தில் இன்றும் ஒரு கோயில் இருப்பதை யாரும் அவதானிக்கலாம். அங்கே ஈனமுத்து என்றொருவர் வசித்து வந்தார். அந்தக் காலத்தில் றிக்சோ இழுக்கும் கூட்டத்தினருக்கு இந்த ஈனமுத்துதான் தலைவர். றிக்சோ இழுப்பவர்கள் நாளாந்தம் தமது உழைப்பிற்கேற்ப ஈனமுத்துவுக்குக் கமிஷன் கொடுப்பார்கள். அதைக் கொண்டே அவர் வாழ்க்கை நடைபெற்றது. கமிஷனில் அரைவாசிக்குமேல் தனது கள்ளுச் சாராயச் செலவிற்காகச் செலவு செய்வார். தினமும் எந்தநேரமும் குடிபோதையில் மூழ்கி இருப்பவர்களைத் ‘தினவெறியர்’ என்று அழைப்பார்கள். இந்த ஈனமுத்துவும் அத்தகையவரில் ஒருவரே. ஆனால் இந்தக் குடிகாரனுக்குச் சாதுக்கள் சாமிகள் என்றால் ஒரு தனி மதிப்பு. சாதுக்களிடம் பக்தி செலுத்துவதும் அவர் செய்த பூர்வ புண்ணியம்போலும்.

இத்தகைய ஈனமுத்துவிடம்தான் பெரிய ஆனைக்குட்டி சுவாமிகள் பல இடங்களிலும் சுற்றித் திரிந்துவிட்டுக் கடைசியில் வந்து சேர்ந்தார்கள், சுவாமிகள் ஒரு ஜீவன் முக்தர் என்பதை முன்னமே கண்டோம். விருப்பு வெறுப்பற்றவர். ஈனமுத்து, தான் உண்பதையும் குடிப்பதையும் சுவாமிக்கும் கொடுப்பார். சுவாமிகள், கொடுப்பது எதுவானாலும் அதனை வாங்கி உண்டுவிடுவார். சுவாமிகளைத் தரிசிக்க வருபவர்கள் எத்தனை பேரானாலும் கடன் வாங்கியும் அத்தனை பேரையும் ஈனமுத்து உபசரிப்பார்.

எறும்பூரக் கல்லும் குழியும் என்பது பழமொழி. தினமும் சுவாமிகளுடைய தரிசனைக்காக வரும் ஏழைகளின் தொகை கூடிக்கொண்டே வந்தது. அதனால் ஈனமுத்துவின் கஜானாவும் காலியானது. ஈனமுத்துவின் சொந்தச் செலவிற்கே தட்டுப்பாடு ஏற்பட்டது. இளையான்குடிமாற நாயனாரைச் சிவபெருமான் சோதித்ததுபோல ஈனமுத்துவைச் சுவாமிகள் சோதித்ததாகவும் இருக்கலாம். கைப்பொருள் இல்லாத காலத்திலும் இளையான்குடிமாற நாயனார் அடியார்களை அன்போடு உபசரிப்பார் என்பதை உலகிற்குக் காட்டவே சிவபெரு

## சுவாமிகளின் உபதேசம்

''சாதுக்கள் சந்நியாசிகள் ஏன் இறைவனே வீட்டிற்கு வந்து விட்டால், அவர்களை உள்ளன்போடு உபசரித்து ஒருநேர உணவு அளி, அன்று தங்கிநிற்க உத்தேசித்தால் சந்தோஷமாகத் தங்கிநிற்க அநுமதி, அடுத்தநாட் காலை நோக்கத்தைப் பார்த்து வழிஅனுப்பு.''

உண்மையான சாதுக்கள் சந்நியாசிகள் ஒரு இடத்தில் மூன்று நேரச் சாப்பாட்டிற்குமேல் தங்கக்கூடாது என்ற விதியைக் கடைப் பிடிப்பவர்கள். அதாவது அவர்கள் ஒரு நாளைக்கு ஒரு முறையே உண்பவர்கள். அதுவும் மத்தியானத்திற்முன் பிச்சை எடுத்து உண்டு விடுவார்கள். மத்தியானம் கடந்துவிட்டால், அன்று பட்டினி கிடப் பார்கள். வேண்டிய உணவு ஒரு வீட்டிலேயே கிடைத்துவிட்டால் வேறு வீடுகளுக்குப் பிச்சைக்காகச் செல்லமாட்டார்கள். ஒரு நேர உணவுக்கு ஏழு வீடுகளில் மாத்திரம் தான் பிச்சை எடுக்கலாம் என்ற நியதி உண்டு. ஏழு வீடுகளிலும் பிச்சை மறுக்கப்பட்டால் அன்று முழுநாளும் பட்டினியே கிடக்கவேண்டும். பிச்சைக்குப் போகும் போது பிட்சா பாத்திரத்தை முன் ஏந்தியவராய் பத்துமாதக் கர்ப் பிணி எண்ணெய்க்குடத்தைத் தாங்கி நடப்பதுபோல நடந்துசென்று வீட்டின் முன்னால், கண் நிலத்தையோ, பெருவிரலையோ பார்த்த வண்ணம் இறைவன் புகழைப் பாடியவண்ணம் நிற்கவேண்டும் ஒரு பாக்குக் கடித்து உமிழக்கூடிய நேரம் தாமதித்து நிற்கவேண்டும். அதற்குமேல் தாமதிக்கக்கூடாது திரும்பிவிடவேண்டும். பிட்சா பாத் திரத்தில் என்ன போடுகிறார்கள் என்று பார்க்கக்கூடாது. பிச்சை போட்டதும் ஏதாவது ஒரு தரும உபதேசம் செய்து திரும்பவேண் டும். இக்கட்டுப்பாடு சாதக சந்நியாசிகளுக்கு மிகமிக அவசியமானது. ஒருவர் சந்நியாசி ஆவதற்குமுன் பரிவிராஜக யாத்திரையை மேற் கொள்ளவேண்டும். அதாவது கையில் பணமின்றி, எங்கு செல் கின்றேன் என்ற எண்ணமின்றி வாய்ப்பேச்சின்றி, இறைவன் ஒரு வனையே துணையாகக்கொண்டு முன்பின் அறியாத புதிய இடத்திற்குச் செல்லவேண்டும். உணவு கிடைத்தால் உண்ணவேண்டும். எங்கு படுக்க நேருதோ அங்கு படுக்கவேண்டும்.

வீட்டுக்கு வந்த சந்நியாசிகளின் வயது நிலையைக் கவனித்து பிரயாணத்திற்குவேண்டிய பணஉதவி புரியவேண்டும். உன்னோடு தான் சிலநாட்கள் தங்கவேண்டுமென்று விரும்பினால் மண்வெட்டி ஒன்றைக் கொடுத்து நிலத்தைக் கொத்திப் பண்படுத்துமாறு கட்டளையிடு. அல்லது கோடரியைக் கொடுத்து விறகு வெட்டச் சொல். நேரத்திற்குச் சாப்பாடு வழங்கு.



சுவாமிகளின் இந்த உபதேசம் சாதுக்களும் சந்நியாசிகளும் இல்லறத்தார்களும் எவ்வாறு ஒருவரை ஒருவர் அநுசரித்து நடந்து கொள்ளவேண்டும் என்பதைக் காட்டுகிறது.

''நக்கிக் கண்ட நாயும் கொத்திக் கொண்ட கோழியும்
விட்டு நீங்கா''

என்பது சுவாமிகள் அடிக்கடி கூறும் பழமொழியாகும்.

''உன்னையும் அறியாய் என்னையும் நம்பாய்''

''தூஷித்தவன் துன்பத்தைக் கொண்டு போவான்
பூசித்தவன் புண்ணியத்தைக் கொண்டு போவான்''

இவை சுவாமிகளின் திருவாக்கு.

## சமாதி

சுவாமிகள் இன்ன நாள் இன்ன நேரம் சமாதி அடையப் போவ தாக முன்னமே அறிந்திருந்தார்கள். மூன்று நாட்களுக்கு முன்பே வைத்தியர் கந்தனை அழைத்தும் தம்மோடு வைத்துக் கொண்டார் கள். தம்மோடு நெருங்கிய பக்தர்களுக்கெல்லாம் முன்கூட்டியே சூசகமாக உணர்த்தியிருந்தார்கள். சுவாமிகள் சமாதி எய்துவதற்குச் சில நாட்களுக்கு முன்பு அன்பர் ஒருவருடைய இல்லத்தில் தங்கி இருந்தபோது முகத்திலும் தலையிலும் மயிர் நீண்டு வளர்ந்திருந்த படியினால் அவ்வன்பர் சுவாமிகள் சவரம் செய்விப்பதற்கேற்ப ஒழுங்குகள் செய்திருந்தார். சவரத் தொழிலாளி சோப்பு பூசி முடிந்ததும் தொழிலாளியின் கத்தியைத் தட்டிவிட்டு சவரம் செய் யாமலே எழுந்து சென்று விட்டார்கள். அன்று தொடக்கம் சுவாமி கள் சவரம் செய்விக்கவே இல்லை. சமாதி அடையப்போவதைச் சுவாமிகள் முதன் முதல் அன்பர்களுக்குக் காட்டிய அறிகுறி இது வாகும்.

சுவாமிகள் தாம் முன்பு குறிப்பிட்டவாறு 10-8-1951 ஆம் நாள் வெள்ளிக்கிழமை பரிபூரணம் எய்தினார்கள். பக்தர்கள் நாலா திசை களிலிருந்தும் வந்து கூடினார்கள். உடனேயே சித்தானைச் சேவா சங்க மொன்று அமைத்து சமாதி வைப்பதற்கான ஒழுங்குகள் செய்தனர். நான்கு நாட்களாகப் பத்மாசனத்தில் இருத்தி பூஜை முதலியன நடைபெற்றன. ஒரு கன யார்க் கனபரிமாணத்தில் குழி ஒன்று தயாரானது. சாணிச்சாம்பல், உப்பு, செங்கல்மா, வேப்பங்கரி, கற் பூரம், சந்தனத்தூள் ஆதியன அந்தர்க் கணக்கில் ஆயத்தமாயின.

சமாதி ஆனபின் தமது அடிவயிற்றிலிருந்து இரத்தம் பெருகும் என்றும் அதன்பின்னே சமாதி வைக்க வேண்டும் என்றும் கூறி இருந்தார்.

மூன்றாம் நாள் அடிவயிற்றிலிருந்து இரத்தம் பெருகியது. உடலை விட்டு உயிர்பிரிந்து உடல் இறந்தால் இரத்த ஓட்டம் எப்படி இருக்கும் என ஒரு சந்தேகம் வைத்தியர்களுக்கே எழுந்தது. நான்காம் நாள்தான் சமாதி வைக்கப்பட்டது என்றாலும், நான்கு நாட்களும் உடலில் எவ்வித மணமோ மாற்றமோ இன்றியேதான் இருந்தது. உடலில் உயிர்கொண்டு உலாவியபோது செய்த சித்துக்கள் போலவே சமாதி அடைந்த பின்பும் சித்துக்கள் தோன்றிக்கொண்டிருந்தன. மகான்களுடைய சமாதிகளில் எழுந்த கோயில்களின் அற்புதங்களுக்கு மூல காரணம் இச்சமாதிகளின் மகிமையேதான்.

ஆண்டுதோறும் ஆடிச்சுவாதி நட்சத்திரத்தில் அதாவது சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய குருபூஜைத் தினத்தில் காரைதீவில் உள்ள சித்தானைக்குட்டி சுவாமிகளின் சமாதிக் கோயிலில் குருபூஜை ஒரு பகலும் ஒரு இரவுமாக ஒரு முழுநாள் கொண்டாடப்பட்டு வருகின்றது. சுவாமிகளுடைய பக்தர்கள் ஒன்றுகூடி ஆனந்தம் அடைகின்றனர்.



# சடைவரத சுவாமிகள்

சுவாமிகள் அச்சுவேலியைப் பிறப்பிடமாகக் கொண்டவர்கள். அச்சுவேலியிலே சலவைத் தொழிலாளர் வம்சத்திலே சுப்பையா என்றொரு உத்தமர் இருந்தார். நல்ல கடவுட் பக்தர். அடியார் பக்தியிலும் சிறந்து விளங்கியவர். பெரியபுராணத்தில் வரும் திருக்குறிப்புத் தொண்டருக்கு இணையானவர். சிவனடியார்களுக்கு ஆடைகளைக் குறிப்பறிந்து தோய்த்துக் கொடுக்கும் சிறப்புடையவர். இவர் சிவனடியார்களுடைய ஆடைகளின் அழுக்கை அகற்றுவார்போல இருவினையும், மும்மலமும், இறப்பு, பிறப்பு ஆகிய அழுக்கையும் அகற்றினார்.

இவருக்கு ஒரு உத்தம புத்திரன். சரவணை என்று பெயரிட்டுச் செல்லமாக வளர்த்து வந்தார். சரவணை இளமையிலேயே வசீகரமான தோற்றம் உடையவர்.

சுந்தரர் சடையனாரையும் இசைஞானியாரையும் பெற்றோராக உடையவர். பெயருக்கேற்ற அழகு மிக்கவர். சுந்தரர் தெருவிலே சிறு தேருருட்டி விளையாடிக் கொண்டிருந்தார். அவ்வழியே நரசிங்கமுனையர் என்ற அரசர் வந்தார். சுந்தரரது அழகு அரசரைக் காந்தமென இழுத்தது. குழந்தையின் பொலிவைக்கண்ட மன்னர் அதன்மீது அளவிலா அன்பு கொண்டு வாரி எடுத்தார். இது யார் குழந்தை என்று விசாரித்துத் தந்தையாரிடம் சென்றார். குழந்தையைச் சுவீகாரம் செய்து கொண்டார்.

இதே போன்று சரவணையின் வசீகரத் தோற்றம் நீராவியடியைச் சேர்ந்த வேளாண் வகுப்பு அம்மையார் ஒருவருடைய மனதைக் கவர்ந்தது. சரவணைக் குழந்தையை வளர்க்க ஆசைகொண்டார். சுப்பையாவிடம் தனது கருத்தை அம்மையார் தெரிவித்தார். தனது மகன் ஒரு செல்வந்தர் வீட்டில் வாழ்வதைச் சுப்பையாவும் பெரிதும் விரும்பினார். அதனால் சரவணைக்கு எக்குறையும் தெரியாது வாழும் வாழ்க்கை வசதி இறையருளால் கிட்டியது.

இந்தச் சரவணக்குழந்தை வளர்ந்து வரும் வீட்டிற்கு அயலிலே தான் கடையிற் சாமியாரின் சிஷ்யர் ஒருவருடைய வீடு இருந்தது.

ஒருமுறை கடையிற் சுவாமிகள் அவ்வீட்டிற்கு வந்தபோது ஒன்பது தினங்கள் சுகவீனமாகப் படுக்கையில் இருக்க நேர்ந்தது. அப்போ சரவணை எட்டுவயதுப் பாலகனாக இருந்தார். கடையிற் சுவாமியார் மீது அவ்வூர்க் குழந்தைகளுக்கெல்லாம் ஒரு தனிப்பிரியம். சுவாமிகளுக்கும் குழந்தைகள்மீது ஒரு அலாதியான வேட்கை. சுவாமிகள் சுகவீனமாகப் படுத்திருக்கிறார். என்பதைக் கேள்வியுற்ற குழந்தைகள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றார்கள். அக் கூட்டத்திலே சரவணையும் சென்றார். சுகவீனமாகப் படுத்திருந்த சுவாமிகளை நெருங்கக் குழந்தைகள் அஞ்சினார்கள். ஆனால் சரவணை மாத்திரம் மலர்ந்த முகத்தோடு சுவாமிகளை அணுகித் தொட்டுப் பார்த்தார். உடனே சுவாமிகள் படுக்கையைவிட்டு எழுந்து ஆனந்தக் கூத்தாடி அவரைத் தனியாக அழைத்துச்சென்று கட்டிப்பிடித்துக் கொஞ்சித் தமது தலையிற்கிடந்த தொப்பியைக் கழற்றி, சரவணையின் தலையிலே சூட்டி மகிழ்ந்தார்கள். இவ்வருள் நிகழ்ச்சிக்கு உதவியாயிருந்த அத்திருத்தொப்பி இன்றும் மண்டைதீவில் அன்பர் ஒருவருடைய இல்லத்தில் பூஜை அறையில் உள்ளது.

வேளாண் அம்மையாருக்குக் குழந்தைமேல் அன்பு இருந்தாலும் சாதி அபிமானம் முற்றாக அவரை விட்டு நீங்கியதாகத் தெரியவில்லை. இது பழக்கதோஷம். இதனைத்தான் வள்ளலார்,

''சாதியிலே மதங்களிலே சமயநெறி களிலே
சாத்திரச் சந்தடிகளிலே கோத்திரச் சண்டையிலே
ஆதியிலே யபிமானித் தலைகின்ற வுலகீர்
அலைந்தலைந்து வீணேநீ ரழிதல் அழகலவே''

என்று குறிப்பிட்டார். அவ்வம்மையார் தான் திண்ணையிலும் சரவணையை வீட்டு நடையிலும் படுக்க விடுவது வழக்கம். ஒருநாள் அம்மையார் ஒரு கனவு கண்டார். ஒரு சந்நியாசியார் வந்து, நீ இச்சரவணையை யாரென்று நினைத்தாய்? இவன் எனது அடியவனல்லவா? இவன் பண்டாரப்பிள்ளை எனச் சொல்லி மறைந்தார். அன்று தொடக்கம் அம்மையார் சரவணையைத் தனக்குப் பக்கத்தில் திண்ணையிலே படுக்க விடுவது வழக்கம். அன்று தொடக்கம் சரவணக் குழந்தை அம்மையாருக்குச் சோதி சொரூபமாகவே காட்சிதந்தார்.

தீவுப்பகுதியைச் சேர்ந்தவர் முருகேசுச்சாமியார். அவர் நீண்ட காலம் கொடிகாமத்தை இருப்பிடமாகக் கொண்டவர். இவருக்கு ஒரு சிஷ்யை இருந்தார். அவரின் பெயர் பொன்னம்மாள் என்பது. இச்சரவணையும் பிற்காலத்தில் முருகேசுச் சுவாமியுடனேயே வெகு காலம் இருந்து அவரிடம் உபதேசம் பெற்றவர். எல்லோருக்கும் குரு



ஒருவர் அத்தியாவசிமானவர். குருவின் கருணையில்லா விட்டால் யாருக்கும் முத்தி இல்லை.

முருகேசுச்சுவாமியிடம் சரவணை உபதேசம் பெற்றதும், சடைவரதர் என்ற திட்சாநாமம் சரவணைக்குக் கிடைத்தது. ஊரிலுள்ளவர்கள் சரவணைச் சாமி என்று அழைக்கார்களே தவிர சடைவரதர் என்ற பெயர் அவர்களுடைய வாயினுள்ளே நுழையவில்லை. முருகேசுச் சுவாமிகள் சமாதி அடையும் தறுவாயில் சடைவரதரை அழைத்து "நீ இனிமேல் என்னைப்பார்த்ததுபோல தேவி பொன்னம்மாளைப் பார்த்துக்கொள்'' என்றார். அப்படியே சீவியகாலம் முழுவதும் தேவி பொன்னம்மாளையே சடைவரத சுவாமிகள் குருவாக வழிபட்டார். பொன்னம்மாளின் சமாதி உசனில் உள்ளது.

சுவாமிகளுடைய உத்தம சிடர் அறுவர் ஏழாலையில் இருந்தனர். அவர்களுக்குத் திட்சையும் மந்திர உபதேசமும் கொடுத்ததோடு ஞானப்பெயரும் சூட்டினார். பொன்னையர் — அருளானந்தசிவம்; திருமதி பொன்னையா — அகிலாண்டம்; பேரம்பலம் — மகாலிங்கம்; சர்மா — கருணாகரன்; முருகேசு உபாத்தியாயர் — சற்குணன்; கந்தையா பரமசிவம்; என்ற ஞானப்பெயர்களைத் தாங்கினர். யார் யார் எந்தெந்தப் பக்குவநிலையில் இருந்தனரோ, அவரவர்க்குத் தகுதியான ஞானப்பெயரைச் சூட்டினார்கள்.

சுவாமிகள் மகாசமாதி அடையுமுன்பு உசன் மடத்தில் சிறிது காலம் சுகவீனமுற்றிருந்தார். அருளானந்தசிவம் அவர்கள் கேள்வியுற்றுச் சுவாமிகளுடைய உடல்நிலையை அறியச் சென்றிருந்தார். இவர் யாழ்ப்பாணக் குடாநாட்டிலே சிறந்தவொரு ஆயுர்வேத வைத்தியர். தமிழகத்தினராலும் பாராட்டுப்பெற்ற ஒரு சிறந்த சைவசித்தாந்தி. ஏழாலையில் ஒரு நால்வர் மடாலயத்தைத் தாபித்து அதில் சைவசமயாசாரியர் நால்வரையும் எழுந்தருளச் செய்து அடியார் பக்தித்திறனை வளர்த்து வந்தார்.

அருளானந்தசிவம் சுவாமிகளுடைய உடல்நிலை மிக மோசம் அடைந்திருப்பதை உணர்ந்து தம்மோடு சிலகாலம் வந்து தங்குமாறு அழைத்தார். சுவாமிகளுக்கு உசனில் மங்கையர்க்கரசி என்றொரு அம்மையார் உத்தம சிஷ்யையாக விளங்கினார். அருளானந்தசிவத்தினுடைய அழைப்பை ஏற்றுக்கொண்ட சுவாமிகள் மங்கையர்க்கரசி அம்மையாரிடம் விடைபெற்றுக்கொண்டு ஏழாலை சென்றார். ஏழாலை நால்வர் மடாலயத்தில் சுவாமிகள் தங்குவதற்கேற்ற எல்லா வசதிகளும் செய்துதரப்பட்டன.

சுவாமிகள் ஏழாலை வந்து மறுநாள் மாலை நாலுமணி அளவில் பால் பருகிவிட்டு சாய்மனை நாற்காலி ஒன்றில் படுத்திருந்தார்கள். தமது சிஷ்யர்களுடன் ஆத்மீக சம்பாஷணை நடத்திக் கொண்டிருந் தார்கள். திடீரென நிமிர்ந்து பத்மாசனத்தில் இருந்தார்கள். சீடர் கள் எல்லாரும் சுவாமிகளையே உற்று நோக்கிக்கொண்டிருந்தனர். அந்த இருக்கையிலேயே சீடர்களின் மத்தியில் சுவாமிகள் மகாசமாதி அடைந்தார்கள்.

சுவாமிகள் யுவவருடம் ஆடிமாசத்து உத்தர நட்சத்திரத்திலே தமது குருதேவி சிவபதம் அடைந்தநாளில் மகாசமாதி அடைந்தார். அவரது சமாதி ஏழாலையில் மிகப்பெரியதொரு விழாக்கோலம் பூண்டு வைக்கப்பட்டது. சுவாமிகள் தாம் ஒரு பெரிய துறவியாய் இருந்த போதிலும் தமது சீடர்களும் இல்லந் துறந்தவர்களாய் இருக்க வேண்டுமென்று விரும்பினாரல்லர். ஆயினும் அவரது சிஷ்யர்களுள் சிலர் துறவிகள், சிலர் கிருகஸ்தர்கள், ஆனால் அவரது தாயினும் மிக்க கருணை அவரது சீடர்களைத் தடுத்தாட்கொண்டது.

''எல்லாந் திருவருட் செயல்'' என்ற கொள்கையே எக்காலமும் எக்காரியத்திலும் எப்பொழுதும் எல்லாரும் கடைப்பிடித்தொழுகி அருளால் அனைத்தையும் பார்க்கும் அனுபவத்தை அடைந்துய்ய வேண்டும் என்பதே சுவாமிகளுடைய முக்கிய குறிக்கோளாகும். அகத் துறவையும், தன்னையறிந்து தலைவன்மேற் பற்றுதலையுமே அவர் பெரிதும் போற்றிப் புகட்டினார்.

அந்தக் காலத்தில் பல கோயில்களில் ஆடு கோழிகளைப் பலியிடு தல் ஒரு மரபாக இருந்து வந்தது அவற்றுள் கச்சேரியடியில் இருந்த கோயிலும் ஒன்றாகும். சுவாமிகளுடைய பெருமுயற்சியினால் அக் கோயிலில் பலிநிறுத்தம் ஏற்பட்டதோடு வேறும் பல கோயில்களின் பலிநிறுத்தத்திற்கும் இச்செய்தி காரணமாக இருந்தது.

பூமாரி என்ற பெயருடைய சீடர் ஒருவர் இருந்தார். அவர் சுவாமிகளைப் பற்றியும் அவரது சீடர்களைப் பற்றியும் சடைவரத சுவாமிகளின் திருவடியார் திருநாமாவளி என்ற தலைஅங்கத்துடன் 'அம்பலத்தரசே' என்ற மெட்டில் பாடல் ஒன்று எழுதியிருந்தார். அது பின்வருமாறு:-

1, அரகர சிவசிவ சடைவரதா
அடியரை ஆண்டருள் குருவரதா.

2, உன்னடியார் பெயர்சில உரைப்போம்
உன்புகழாம் பெருநல முரைப்போம்.



3. மங்கையர்க் கரசியின் மாகுருவே (சுன்னாகம்)
பொங்குந் திருவுறு பூவுருவே.

4. வாலாம்பிகையின் வண்தொண்டும் ,,
பால்தே னெனக் கொண் டாயென்றும்

5. நடரா சனுக்கோர் நன்மணியே ,,
சடையா யவனளி கொள்மணியே

6. கந்தையா வெனுங் கண்மணியே ,,
வந்தடைந்தா னுனை விண்மணியே

7. இருவுறு விசுவ நாதனது ,,
ஒருகுரு வேயடி யார்க்கழுது

8. பிரேம சுந்தர மறையோனே (ஏழாலை)
பேரன்பொடு தொழு மிறையோனே

9. அம்பல மென்னு மணியடியான் ,,
புங்கவனே யெம்மணி முடியான்

10. அருளானந்தன் பெருமாளே ,,
அடைந்தா யுத்திரத் திருநாளே

11. அகிலாண் டம்மாளருங் குருவே ,,
அடியார் குழுவின் பெருந்திருவே

12. பேரம் பலவன் சிரன்பே ,,
பெற்றாய் மருளுக் கோரம்பே

13. கணபதி யடியவன் தனையாண்டாய் ,,
குணமூறு மவனன்பது பூண்டாய்

14. அன்புறு மாறுமுகப் பத்தன் ,,
அவனுக் கருளிய மெய்ச்சித்தன்

15. செவ்வேட் தொண்டன் திருவடிகள் ,,
சீரளி கொண்டிடும் முருகழகன்

16. சீராருங்குல வீரசிங்கம் (கொல்லன்கலட்டி)
தீர்ந்தானுனை யடைந்தே பங்கம்

17. சுப்பிரமணியாந் தூயனுக்கும் ,,
நற்பத மருளிய நாயகனே

18. கந்தையாவுன் கான் முளையே ,,
கால்கொடுத் தாண்டாய் வான்மழையே

19. இராசா வென்னுஞ் சீரடியான் ,,
நேசா நீசெஞ் சடைமுடியான்

20. சின்னத் தம்பியெனும் பக்தன் ,,
சீர்தொண் டதுகொண் டருள்சித்தன்

21. பொன்னே ரொளியுறு பொன்னையன் (பரு - துறை)
தன்னை யாண்டருள் மூன்னையன்

22. மன்பால சுந்தர மாதவனே ,,
அன்பா லடைந்த குரு ஆதவனே

23. மாதவ வேதவனத்தடியான் ,,
ஆதவனே சடை மாமுடியான்

24. பெரியபிள்ளைப் பெண்மணியின் ,,
பெருமாளே யெம் பெருவாழ்வே

25. வயிரமுத் தடியனுக் கானபிதா (அச்சுவேலி)
மற்றுமவர்க் கொரு ஞானபிதா

26. சின்ன னென்னுஞ் சீரடியான் ,,
சேர்ந்தா னுன்றன் திருவடிதான்

27. வல்லிபுரத்தின் மாமணியே (கொடிகாமம்)
மற்றும் பலவடியார் கனியே

28. பேரன்பேயுறு சீர் வேலன் (சித்தங்கேணி)
சூர்வெவ் வினையின் ஓர்காலன்

29. நமச்சிவாயன் நாயகனே (நாவற்குழி)
நல்லடியார்க் கொரு தாயகனே

30. மாதவனென்னும் மாவடியான் (கச்சாய்)
திதறவாண்ட திருமுடியான்

31. அப்பாத்துரையன் அருமருந்தே (திருக்கோணமலை)
இப்பாரடியவர்க் கொரு குருவே

32. குணசேகரனின் குருநாதா ,,
அணியா ரறவுரை அருள்சோதா

33. திருநாவுக்கரசுக் கொரு குருவே ,,
பெருமா ளெங்களருந் திருவே

34. அண்ணாமலை யெனுமோ ரன்பன் ,,
கண்ணே யெனவுறு சீரன்பன்

35. ஆங்கில வைத்தியர் குருசாமி (யாழ்ப்பாணம்)
ஆம் பெரியோர்க்கு மிங்கொருசாமி

36. இன்னும் பலவடியார் தொண்டு
ஏற்றுட் கொண்டா யருள் விண்டே

37. தாயேன் தனக்கிங்கோர் தாயே
தவின்றேன் திருப்பா அருள்வாயே

38. பேயே னுட்லுயி ருன்னுடைமை
பெரும்புகழ் பாடுதல் என்கடமை.

# ஆனந்தசடாட்சர குரு

எனக்குப் பள்ளிப் பருவத்தைக் கடந்துவிட்ட வயது. ஒருநாள் எங்கள் ஊரில் ஒரு பரபரப்பான செய்தியைக் கேள்விப்பட்டேன். ''சரவணமுத்துச் சாமியாரைச் சமாதிவைத்த இடத்தில் நாட்டிய வாழை மறுபக்கமாகத் திரும்பியிருக்கிறது.'' அவருடைய சமாதியின் பொழுது ஏற்பட்ட ஓர் அற்புதம் அவ்வூர் மக்கள் எல்லோரையும் அச்சமாதியைத் தரிசிக்கச் செய்துவிட்டது. சுவாமிகள் பூதவுடல் கொண்டுலாவும்போது சுவாமிகளைப் பயன்படுத்தத் தெரியாத மக்கள் எல்லோரும் அற்புதம் பார்க்க ஓடிச் சென்று சமாதியை அதன்மூலமாகத் தரிசனம் செய்து திரும்பினார்கள்.

சுவாமி என்று ஒருவர் மக்கள் உள்ளத்தில் இடம்பெற வேண்டுமானால் அவர் ஏதாவது சித்துக்கள் காட்டவேண்டும். அவரிடம் சித்து இல்லாவிட்டால் அவர் எந்த மகான் ஆனாலும் அவரைப் பொருட்படுத்தமாட்டார்கள். சித்துக் காட்டிப் பலரை ஏமாற்றியவர்களும் ஏமாந்தவர்களும் உண்டு. சித்து என்பது மனிதனைப் படுகுழியிற் தள்ளி வீழ்த்திவிடும். ஆற்றின் மேலாக நடந்து சென்று தனது சித்தைக் காட்டிய ஒருவரை ஒரு மகான் பார்த்து உனது இவ்வளவு நாள் செய்த தவம் முழுவதும் ஒன்றரை அணா பெறுமதி உடையது தானே என்று கூறினார்களாம்.

நீர்வேலியைச் சேர்ந்த வல்லிபுரம் என்பவர் குப்பிழானைச் சேர்ந்த சின்னாச்சிப்பிள்ளையைத் திருமணஞ்செய்தார். சின்னாச்சிப்பிள்ளையின் தந்தையார் ஒரு விதானையார். மேற்குறிப்பிட்ட குடும்பத்தாருக்கு மகனாகப் பிறந்தவர்தான் சரவணமுத்துச் சாமியார் அல்லது சர வணைச் சாமியார் என்றழைக்கப்படும் ஆனந்தசடாட்சர குரு அவர் கள். இவர் சிறு வயது தொடங்கியே சாதுக்களின் சகவாசத்தை யும் கோயில் வழிபாட்டையும் யாத்திரை செய்தலையும் பெற்றிருந் தார். விளையும் பயிரை முளையிலே தெரியும் என்பார்கள். இவரது இளமை வாழ்க்கை இவர் பிற்காலத்தில் ஒரு மகானாக விளங்குவார் என்பதை எடுத்துக்காட்டியது. இவர் அடிக்கடி இந்திய யாத்திரை

செய்து மகான்களையும் பாடல்பெற்ற தலங்களையும் தரிசனைசெய்து வந்தார்.

"மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்ற தாயுமானவருடைய வாக்கு இவருடைய வாழ்க்கையில் பலித்தது.

திருவொற்றியூரிலுள்ள இறைவனார் இவரைக் கவர்ந்தார். சில நாட்கள் அங்கு தங்கி இருந்தார். இறைவரே இவரை ஆட்கொண்டார். ஒரு சிவராத்திரி தினத்தன்று திருவொற்றியூரில் இருக்கும் போது ஒரு சாது எதிர்ப்பட்டு "நீர் ஏன் இங்கு இருக்கிறீர்??" என்று கேட்டார். "நானும் ஒரு தேவையை நோக்கி இருக்கிறேன்" என்றாராம். இரவு நாலாம் ஜாமப்பூஜை முடிந்ததும் "நான் இவ்விடத்திற்கு வருவேன், என்னை எதிர்பார்த்து இரும்." என்று சொல்லி விட்டு அந்தச் சாது போய்விட்டார். சரவணமுத்து கோயில் வாசலிலேயே இரவு முழுவதும் சாதுவையும் இறைவனையும் விட்டு நீங்காத நினைவோடு கண்விழித்திருந்தார்.

கண்மூடித் தியானத்திலிருந்தால் அச்சாதுவே தியானத்தில் தோன்றுவார். அவரது இதுகாலவரையில் உள்ள தியான சாதனைகள் எல்லாம் சாதுவின் திருவுருவமாகவே மாறிவிட்டன. தியானத்தில அமர்ந்தார். சாதுவே உள்ளும் புறமும், அக்கமும் பக்கமும், முன்னும் பின்னும், எல்லாமாகக் காணப்பட்டார். இப்படிப்பட்ட போராட்ட நிலையிலேதான் அன்றிரவு முழுவதும் கழிந்தது.

நாலாம் சாமப் பூஜை முடிந்ததும் சாது தோன்றினார். இறைவனாரது திருவுருவைப் பார்க்கும்போது சாதுவின் திருவுருவமே தெரிந்தது. காரணம் அவருக்கு விளங்கவில்லை. சாது காந்தமென அவரைக் கவர்ந்து இழுத்தார். பூஜை முடிந்த அதே நேரத்தில் சாது, சரவணமுத்துவுக்குத் தீட்சை வைத்தார். தீட்சை வைத்து மந்திரோபதேசமும் செய்தார். தீட்சை பெற்றுக் கொண்டதும் சரவணமுத்துவுக்கு அளவில்லா ஆனந்தம். பெறற்கரிய பேறு பெற்றதாக எண்ணினார். தமது குருநாதன் யார் என்று அறிய ஆவல் கொண்டார். உனக்கு விருப்பமான பெயரால் அழைப்பாயாக என்ற ஒலிமாத்திரம் கேட்டது. ஆனந்த பரவசரானார். சாது அக்கணப்பொழுதிலே மறைந்து விட்டார். வாழ்நாளில் எப்பொழுதாவது அந்தச் சாதுவைத் திரும்பத் பார்க்கும் வாய்ப்புக் கிட்டவே இல்லை. கோயிலினுள்ளே சென்றார். சுவாமியின் திருவுருவிலே தனது குருநாதனின் திருவுருத் தோன்றி மறைந்ததைக் கண்டார். மணிவாசகப்பெருமான் தம்மை ஆட்



கொண்ட குரு மூர்த்தத்தைக் கும்பிட்ட கோயில்தோறும் கண்டு களித்தது இப்படித்தானோ என்று திருவருளை வியந்தார்.

"இரும்புதரு மனத்தேனை ஈர்த்து ஈர்த்து என்புருக்கி
கரும்புதரு சுவை எனக்குக் காட்டினை உன்கழலிணைகள்" என்றும்

"இணையார் திருவடி என்தலைமீது வைத்தலுமே
துணையான சுற்றங்கள் அத்தனையுந் துறந்தொழிந்தேன்" என்றும்

நெஞ்சார வாயாரப் பாடி மெய்மறந்து நின்றார். அரும்பேறு பெற்று மாறிலா மகிழ்ச்சியில் திளைத்தார்.

யாத்திரையின் பயன் வார்த்தை சொல்லச் சற்குருவும் எய்தினார். பூவுலகத்திற்கு வந்த நோக்கமும் நிறைவேறிவிட்டது. கடலுக்கு அடியிலுள்ள முத்துச்சிப்பி ஐப்பசி மாசத்து சுவாதி நட்சத்திரத்து மழைத்துளியை விரும்பிக் கடலுக்குமேலே வந்து வாயைத் திறந்து கொண்டு படுத்திருக்குமாம். மழைத்துளி விழுந்ததும் வாயை மூடிக் கொண்டு கடலுக்கு அடியிலே சென்றுவிடுமாம். முத்துச் சிப்பியின் பலநாள் தவத்தினால் மழைத்துளி முத்தாக மாறுகின்றது. அம் முத்து அரசனுடைய மணிமுடியை அலங்கரிக்கின்றது.

அதுபோல உபதேசம் கிடைத்ததும் உடனேயே ஈழநாடு வருவதற்கு எண்ணமிட்டார். அன்று காலேயே புறப்பட்டு விட்டார். ஆனால் கையிலே காசு இல்லை. அம்பிகையின் சந்நிதியில் படுத்திருந்து கொண்டு எண்ணமிட்டார். ஒரு பொய்யுறக்கம்; அதற்குள் ஒரு கனவு. காசைப்பற்றிக் கவலைப்படாதே, காசு தேவையான போது கிடைக்கும். எழுந்து பார்த்தார். ஒரு ரூபாய் படுக்கையில் கிடந்தது. அந்த ஒரு ரூபாயையும் எடுத்து முடிந்துகொண்டு ஊர் புறப்பட்டுவிட்டார். முடிந்த பணம் முடிச்சிலேயே இருக்க ஈழநாடு வந்து சேர்ந்துவிட்டார். பாஸ்போட்டும் விசாவும், பெமிற்றும் பெற்று இந்தியாவிலிருந்து இலங்கைக்கும், இலங்கையிலிருந்து இந்தியாவுக்கும் பிரயாணஞ் செய்யும் அன்பர்களுக்கு இச்செய்தி அதிசயமாகத்தான் தோன்றும்.

ஊர் வந்தார். தமது வளவுக்குள் சென்றார். பலர் வந்து தரிசித்துச் சென்றனர். நிலையான வீடு கிடையாது. தனக்கென்று ஒரு ஆச்சிரமம் அமைக்கவேண்டும் என்று எண்ணினாரல்லர். அதுவும் பந்தம் என்பதே அவருடைய சித்தாந்தம். தனக்கென்று உள்ள அந்த வளவுக்குள் ஒரு கோயில் கட்டினார். அங்கு சிவகாமசுந்தரியைப் பிரதிஷ்டை செய்தார். வருகிறவர்கள் போகிறவர்கள் தம்மைக் கும்பிடுவதை அவர் விரும்பவில்லை. கும்பிட விரும்புகிறவர்களுக்கு அம்பிகையைக் காட்டிவிட்டுத் தாம் விலகி நின்று கொள்வார். அம்

பாளுக்கு அவரே நித்திய பூஜை செய்து தினமும் அக்கினி காரியமும் செய்துவந்தார்.

இவர் பெற்ற உயாநிலையை யாரும் அறியார். அவ்வூர் மக்கள் கோயிலில் தெய்வத்தைப் பார்க்க முற்பட்டனர். அடியார்களிடம் ஆண்டவனைக் காணும் வாய்ப்பு எல்லார்க்கும் கிட்டுவதில்லை.

"பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்"

என்று கூறிய சுந்தரமூர்த்தி சுவாமிகளின் நிலை எல்லார்க்கும் வாய்த்து விடுமா? சாதாரண சரவணமுத்துவாக இருந்தவர் ஒரு சிலருடைய உள்ளத்திலே மாத்திரம் சரவணமுத்துச் சாமியாராக மாறி இருந்தார். ஒருவன் பிறந்த ஊரிலே சந்நியாசியாக வாழக் கூடாது என்று கூறுவார்கள், காரணமும் உண்டு. அவ்வூர் மக்களுக்குப் பூர்வாச்சிரம எண்ணங்கள்தான் தலைப்படும். அவருடைய ஆச்சிரம மாற்றத்தையோ அன்றி உள்ளத்தின் உயர்வையோ சாதாரண மக்களால் புரிந்துகொள்ள முடியவில்லை.

ஒருசில பக்குவசாலிகள் மாத்திரம் அவரைக் குருவாக ஏற்றுக் கொண்டு தமது உள்ளத்திலே குருவின் ஸ்தானத்தை அவருக்கு அளித்தனர். சுவாமிகளுடைய சீடர்களாகப் பின்வருவோர் விளங்கினர். இன்றும் சுவாமிகளுடைய சமாதியில் இருந்து பணி ஆற்றுபவரும் சுவாமி அம்மா என்று யாவராலும் அழைக்கப்படுபவருமான மாணிக்க அம்மா அவர்கள் அடுத்தவர். மாணிக்க அம்மா அவர்களின் தம்பியாராகிய பீதாம்பரம் அவர்கள்; மயில்வாகனம் என்ற அன்பர்; நீர்வேலி முருகுச்சாமியார். இவர்கள் சரவணமுத்துச் சுவாமியிடம் உபதேசம் பெற்று ஆத்மீக நிலையில் அவரது சீடர்களாயினர். முள்ளியவளையில் உள்ள ஐவர் சுவாமிகளிடம் உபதேசம் பெற்று ஆத்மீக நிலையில் மிக உயர்ந்து விளங்கினார்கள்.

அந்தக்காலத்தில் யாழ்ப்பாணத்திலிருந்து அடியார் கூட்டம் கதிர்காமத்திற்குக் கரையோரப் பாதையால் நடையாத்திரை செய்வதுண்டு. இக்காலத்திலும் அது உண்டு. வைகாசி விசாகத்திற்கு வரும் அடுத்த திங்கட்கிழமை முள்ளியவளையில் நடைபெறும் கண்ணகையம்மன் கோயில் பொங்கல் விழாவில் கலந்துகொண்டு அடியார்கள் கரையோரமாகக் கூட்டங் கூட்டமாகக் கதிர்காமம் நோக்கி நடையாத்திரை மேற்கொள்வர். ஒருமுறை அடியார் கூட்டத்துடன் சுவாமிகளும் சென்றார்கள். முப்பனைக்காட்டில் சுவாமிகளைத் தனியாகவிட்டு யாத்திரைக் கோஷ்டி வெகுதூரம் சென்றுவிட்டது. சுவாமிகள் காட்டில் தனியாகவே இருக்க நேரிட்டது. சுவாமிகள் பின் தங்கியதை யாரும் அறியார். அன்றிரவு மரத்தின் கீழே படுத்திருக்கும்போது முருகப்பெருமான் சோறு கொண்டுவந்து கொடுத்து இளைப்பாற்றிச்



சென்றார். விடியற்காலையில் சுவாமிகள், யாத்திரைக் கோஷ்டியினர் தங்கியிருந்த இடத்திற்குத் தனியாக நடந்து சென்றபோது அவர்கள் பெரிதும் ஆச்சரியம் அடைந்தனர்.

சுவாமிகளுடைய கையில் பணம் இருந்தால் அதைச் சோறாக்கி ஏழைகளின் வயிற்றை நிரப்பிவிடுவார்.

"அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள் வைப்புழி"

என்ற திருக்குறட் கருத்தைச் சுவாமிகள் நன்கு உணர்ந்திருந்தார்கள். ஏழைகளுக்கு அழிவு செய்யக்கூடிய அவர்கள் பசியைத் தீர்த்து வைப்பது ஒருவன் தான் பெற்ற செல்வத்தை ஒரு இடத்தில் சேர்த்து வைப்பதாகும். ஏழைகளின் பசிப்பிணியைத் தீர்த்து வைப்பது பிற்காலத்திற்குக் கொடுத்துவைத்த புண்ணியமாக நமக்கு உதவும். பிறருடைய பசியைத் தீர்ப்பவனுக்குப் பின்னால் வரக்கூடிய மற்றப் புண்ணியங்கள் எப்படியானாலும் ஒன்று மட்டும் நிச்சயம். பசித்து வந்த பிறருக்கும் பங்கு கொடுத்துப் பசியாற்றிவிட்டுப் பின் உண்கின்றவனைப் பசி என்னும் கொடியதுன்பம் தொடுதல்கூட முடியாது.

தண்ணீர் தேங்கி நிற்குமிடத்திலே சேறும் கரியும் மணமும் உண்டாவது போலவே பணம் தங்கி நிற்கும் இடத்திலேயும் அகப்பகையும் புறப்பகையும் வளர்ந்துகொண்டுவரும் என்பதை உணர்ந்தார். பணத்தைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. கையிற் கிடைக்கும் பணம் உடனே அன்னதானமாக மாறிவிடும். சுடலைக்குச் சென்று தனியாக வாரக்கணக்கில் தங்குவார். தனிமை அவருக்குப் பேரின்பம் தந்தது. யாரும் அறியாவண்ணம் அங்கு கடுந்தபசு இருந்தார். முருகனைப் பற்றிய எண்ணம் முகிழ்த்துவிட்டால், மேகத்தைக் கண்ட மயில்போல ஆடுவார். நோயாளர் சென்று அவரது பாதத்திலே வீழ்ந்து தமது நோயை மாற்றுமாறு கேட்பர். உடனே விபூதியை எடுத்து மந்திரித்து வாயிலும் தலையிலும் போட்டு நெற்றியிலும் அணிந்துவிடுவார்கள். அவ்விபூதியினால் குணம் அடைந்தோர் கணக்கிலடங்கார்.

சுவாமிகள் சமாதி அடைவதற்கு மூன்று தினங்களுக்கு முன்பு மாணிக்க அம்மாவிடம் "இந்த உடம்பு இன்னும் மூன்று தினங்களுக்குத்தான் இருக்கும்" என்றார்கள். சுவாமிகள் கூறியதை எவரும் கருத்திற் கொள்ளவில்லை; ஏதோ உலகோர் கூறுவது போலக் கருதிவிட்டார்கள். சுவாமிதான் நல்ல சுகமாக இருக்கிறாரே. அவருடைய உடம்புக்கு ஒன்றுமில்லையே. சுவாமி வேறு ஏதோ கருத்தில் வேடிக்கையாகத்தான் சொல்கிறார்கள் என்பது பலருடைய எண்ணம். மாணிக்க அம்மாவிடம் தனியாகச் சில வார்த்தைகள் கூறினார்கள்.

"நான் சமாதி அடைவதைப் பற்றி நீ ஒன்றுக்கும் பயப்படாதே. உன்னைப்பற்றி இறைவனிடம் நிறையக் கூறி உள்ளேன்" இந்தச் சந்தர்ப்பத்திலேதான் அம்மாவின் கண்களும் பனித்தன. இந்த இடத்தில் ஒரு சமாதி கெதியில் வரப்போகிறது, அதன் அதிர்ஷ்டசாலி யாரோ என்று சுவாமிகள் அடிக்கடி கூறுவார்களாம்.

மாணிக்க அம்மா ஒருமுறை ஐந்து ரூபா வைத்திருப்பதைச் சுவாமிகள் கண்டுவிட்டார்கள். உடனே அதைக் கொண்டுவரச் செய்து ஐந்து ரூபாவுக்கும் காய்கறி அரிசி வாங்கி அன்னதானம் செய்வித்தார்கள். அன்னதானம் முடிந்தபின் இப்பணத்தை எதற்கு வைத்திருந்தாய்? என்று கேட்டார். கற்பூரம், ஊதுபத்தி வாங்குவதற்காக வைத்திருந்ததாக அம்மா கூறினாராம். "இனிமேல் காசு கையில் கிடைத்தால் உடனே அடியார்களுக்கு அன்னதானம் செய்துவிட வேண்டும். பணத்தைச் சேர்த்து வைக்கக்கூடாது" என்று உபதேசம் செய்தார்கள். இச்செய்தி, வார்தா ஆச்சிரமத்திலே வாழ்ந்த காந்திஜிக்கும் கஸ்தூரிபாய்க்கும் இடையில் நடந்த ஒரு செய்தியை நினைவூட்டுகின்றது.

வார்தா ஆச்சிரமவாசிகள் எவரும் தமக்கென்று தனிச்சொத்து வைத்திருக்கக்கூடாது என்பது ஆச்சிரமவிதி. காந்தியின் மகன் தாய் தந்தையரைப் பார்க்க வந்த இடத்தில் இரண்டு ரூபாவைக் கஸ்தூரி பாயிடம் கொடுத்துச் சென்றார். கஸ்தூரிபாய் மகன் தந்ததுதானே என்று அதனைச் சேலையில் முடிந்து வைத்திருந்தார். அடுத்த நாள் குளிக்கும்போது கிழவியார் சேலையில் இருந்து ஏதோ ஒன்றை அவிழ்த்து வைப்பதைக் காந்தி அவதானித்துவிட்டார். அது என்ன என்று காந்தி கேட்டார். மகன் தந்த பணம் என்று கஸ்தூரிபாய் கூறினார். உடனே காந்தி "நீ ஒரு கள்ளி. பணம் கிடைத்த உடனே ஆச்சிரமத்திலல்லவா கொடுத்திருக்கவேண்டும்" இதனைக் காந்தி பகிரங்கமாக ஆச்சிரமவாசிகளுக்கு அறிவித்ததோடு அமையாது கஸ்தூரிபாய் அன்று முழுவதும் உணவுண்ணக்கூடாது என்று தண்டனையும் விதித்துவிட்டார்.

சுவாமிகள் சமாதி அடைவதற்குச் சிறிது நேரத்திற்குமுன் மாணிக்க அம்மாவை அழைத்துத் தம்முடன் எப்போதும் கொண்டு திரிந்த பிரம்பையும் விபூதிப் பையையும் அம்மாவிடம் கொடுத்து இவை இரண்டும் எந்நாளும் உனக்குத் தேவை. இவற்றைப் பேணி வைத்திரு என்று சொன்னார்கள். இவையே சுவாமிகள் செய்த கடைசி உபதேசமாகும். 1938ஆம் ஆண்டு பங்குனி மாதம் முதலாந் திகதி சுவாமிகள் தாம் முன்னரே கூறியவாறு சமாதி அடைந்தார்கள். அவர்களது சமாதி அவர் பிறந்த ஊராகிய குப்பிழானிலேயே வைக்கப்பட்டது.



முன்புனை கண்டபோது
    முனிவரன் என்று யானும்
நின்னினை உணராப் பேதை
    ஆயினேன் என்ன செய்வேன்
கன்றினுக் கிரங்கும் சேதா
    ஆயினை கருணை வள்ளால்
அன்றெனை ஆண்டாய் அல்லையோ
    ஆனந்த சடாட்சர குருவே.

தனக்குறு பசிபோல யார்க்கும்
    அப்பசி உண்டென உணர்ந்து
மனக்குறை இன்றி நாளும்
    மானிடப் பூசை செய்து
இனத்துறு இயல்பால் யார்க்கும்
    இனியனாய் வாழ்ந்து காட்டி
அனைவர்க்கும் அன்புருவானாய்
    ஆனந்த சடாட்சர குருவே.

சரவணமூத்து வென்னும்
    சடாட்சர நாமம் பூண்டோய்
நரர்சுரர் களுக்கு எல்லாம்
    நாயகனாய் வந்தோய்
அரஹர என்று சொன்னால்
    ஆனந்த பாஷ்பம் பொழிந்து
அரஹர முருகே ஆனாய்
    ஆனந்த சடாட்சர குருவே.



# செல்லாச்சி அம்மையார்

1928 ஆம் ஆண்டு சுன்னுகம் மயிலணிச் சைவவித்தியாசாலை
யில் கல்வி கற்கும் பொருட்டுச் சேர்ந்ததாக நினைவு. சுன்னுகத்தைப்
பிறப்பிடமாகக் கொண்டவரும் பாடசாலையின் அயல் வளவில் வசித்
தவருமான பொன்னம்பல உபாத்தியாயர் எங்களுக்குச் சமயபாடங்
கற்பித்தார். சைவசித்தாந்த நூல்களில் நல்ல பயிற்சி உடையவர்.
மாணவருடைய உள்ளம் அறிந்து கற்பித்த பெருமை உடையவர்.

ஒருநாள் சமயபாடங் கற்பிக்கும்போது திருவருட்பயனில்,

பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணு புவி.

என்ற குறளுக்கு விளக்கம் கொடுக்கும்போது ஞானிகளைப் பற்றிய
பேச்சும் வந்தது. அத்தருணத்தில் செல்லாச்சி அம்மையாரையும்
யோகர் சுவாமிகளையும் குறிப்பிட்டார்கள். அக்காலத்தில் செல்லாச்சி
அம்மையாரைச் சுன்னுகத்தம்மையார் என எனது தந்தையார் பேசு
வதைக் கேட்டிருக்கின்றேன். செல்லாச்சியம்மையாரிடம் யோகர்
சுவாமிகள் அடிக்கடி வந்து சென்றுகொண் டிருந்தாரானபடியினுல்
போலும் ஆசிரியரும் இருவரையும் ஞானியர் வரிசையில் வைத்துப்
பேசினுர்கள். சமயபாட ஆசிரியர் செல்லாச்சி அம்மையாரைப்பற்றிச்
சில செய்திகள் குறிப்பிட்டபின் அம்மையாரைப் பார்க்கவேண்டும்
என்ற ஒரு அவா எமதுள்ளே எழுந்தது. எமது வகுப்பிலுள்ள நாலைந்து
பேர் அம்மையாரைத் தரிசிக்கும் நோக்கமாகச் சென்றபோது அம்மை
யார் என்ன மக்கள் வந்தீர்கள் என்று கேட்டார்கள். தண்ணீர்
குடிக்க வந்தோம் என்று கூறி அம்மையாருடைய வளவுக்குள் இருந்த
கிணற்றில் குடித்துவிட்டுத் திரும்பினேம்.

அன்று அம்மையாரைப் பார்த்த நினைவு இன்றும் உள்ளத்தில்
பசுமையாக உள்ளது. பிற்காலத்தில் ரமணுச்சிரமத்தில் ஆனந்தமாய்
அம்மையாரைச் சந்தித்தபோதும் செல்லாச்சி அம்மையாருடைய
நினைவுதான் முதலில் வந்தது.



அம்மையார் சுன்னுகத்திலே உள்ள பிரபல வேளாளர் குடும்பத்
தைச் சேர்ந்தவர். பரம்பரையாகத் தமிழும் சைவமும் பேணப்பட்டு
வந்த குடும்பம் அது. தாம் இளமையிலே கற்கவேண்டிய கல்வியைப்
பாடசாலைக்குச் செல்லாமலே வீட்டிலேயே கற்றுக்கொண்டார்.
நாவலர்பெருமான் எழுதிய இரண்டாம் நாலாம் பாலபாடங்களையும்
முதலாம் இரண்டாம் சைவ வினுவிடைகளையும் நன்கு கற்றுத் தேறி
ஞர்கள்.

இரண்டாம் பாலபாடத்திலுள்ள முதலாம் பாடத்து முதல் வசன
மாகிய "இந்தச் சரீரம் நமக்குக் கிடைத்தது நாம் கடவுளை வணங்கி
முத்தியின்பம் பெறும் பொருட்டேயாம்'' என்பது அம்மையாரின்
மனத்தில் நன்கு பதிந்து வேரூன்றிக் கிடந்தது. நான்காம் பால
பாடத்திலுள்ள ''கடவுள்'', ''ஆன்மா'', "கல்வி'', "தருமம்'',
''ஆச்சிரமம்'', "நல்லொழுக்கம்'', "கற்பு'', "வீட்டுவேலை'' என்னும்
பாடங்களைப் பலமுறை திருப்பித்திருப்பிப் படித்துத் தம் வாழ்க்கைக்கு
வழிகாட்டியாகக் கொண்டார்.

இக்காலத்திலே இத்தகைய புத்தகங்கள் பாடப் புத்தகங்களாக
அமையாததினுலே மாணவர்களுடைய ஒழுக்கநிலை கெட்டுச் சீரழிந்
துள்ளது என்பதை நாம் கண்கூடாகக் காண்கின்றேம். சினிமாக்,
காட்சியில்லாத பத்திரிகைகளைக் காண்பதே அபூர்வமாக உள்ளது.
இந்திய மாநிலத்திலுள்ள பதினுன்கு பாஷைகளில் ஆயிரம் சினிமாப்
பத்திரிகைகள் வெளிவருகின்றன என்றுல் வேறு அத்தாட்சியே தேவை
இல்லை. நல்ல இலக்கியப் பத்திரிகைகளாக வெளிவந்தவை, விற்பனை
யைக் கூட்டும்பொருட்டு சினிமா நட்சத்திரங்களின் கவர்ச்சிப் படங்
களுக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றன.

அம்மையார் சமயாசாரத்தில் பரம்பரையாக ஈடுபட்டு வந்த
குடும்பத்தில் தோன்றியவரானபடியினுல் சிறுவயதிலேயே ஆலய
வழிபாட்டிலுங் கவனம் செலுத்தினுர். சிறுமியாயிருக்கும்பொழுது
பெற்றேருடன் சுன்னுகம் ஐயனுர் கோயிலுக்குப் பக்கத்திலிருக்கும்
விநாயகப்பெருமான் கோயிலுக்குச் சென்று வழிபட்டுவந்தார்.

அம்மையார் வைத்தியப் பகுதியில் அப்போதிக்கரியாகக் கடமை
யாற்றிய திரு. முதலியார் தம்பு என்பவரை 1889ஆம் ஆண்டில்,
திருமணஞ் செய்தார். இவர்களுக்கு ஒரு மகனும் ஒருமகளும் உளர்.
அம்மையார் ஆத்மீகத்தில் முன்னேறி வந்தாராயினும் தமது கணவ
ஞருக்குச் செய்யும் கடமைகளில் எள்ளளவும் தவறினுரல்லர். குடும்பக்
கடமைகளோடு சிவதொண்டுகளிலும் ஈடுபாடுள்ளவராகக் காணப்
பட்டார். கோயிலுக்குச் சென்று அங்கு நடைபெறும் புராணபடனங்
களைத் தவருது கேட்டுவந்தார்.

உள்ளப்புனிதத்திற்குப் புறப்புனிதமும் ஓரளவுக்கு தேவை.

"மாசிலாத மணிதிகழ் மேனிமேல்
பூசு நீறு போல் உள்ளூம் புனிதர்கள்"

என்ற சேக்கிழாரின் இலக்கணத்திற்கு அம்மையார் இலக்கியமாக விளங்கினார்கள்.

இவ்வம்மையாரின் தந்தையாரான முத்துக்குமாரபிள்ளை என்பவரின் தாயார், முத்தமிழ்விரகராய் விளங்கிய சுன்னாகம் முத்துக்குமார கவிராசரின் புத்திரியாவார். சென்னையில் மிக்க அதிகார புருடராயும் பெரும்புகழ் பெற்ற தமிழ்ப் பேரறிஞராயும், நிகரற்ற தமிழ்நூற் பதிப்பாளராயும், விளங்கிய ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கட்குத் தண்டமிழாசிரியராய் நல்லறிவுச்சுடர் கொளுத்தியவர் இம்முத்துக்குமார கவிராசரேயாவர். இக்கவிராசருக்கு ஆண்குழந்தைகள் இல்லை. நால்வரும் பெண்மக்களேயாவர். இவர்கள் நால்வரும் தமது தந்தையாரிடம் தமிழை நன்கு பயின்று பாண்டித்தியமடைந்திருந்ததுடன் ஆலயங்களில் புராணபடனஞ் செய்யும் ஆற்றலும் பெற்றிருந்தனர்.

1905ஆம் ஆண்டு மாவிட்டபுரம் தேர்த்திருவிழா முடியும் சமயத்தில் அம்மையாரின் கணவர் முதலியார் தம்பு சிவபதம் அடைந்தார். கணவரிறந்த அந்தநேரத்தில் பிற்காலப் பெருவாழ்வுக்கு வேண்டிய ஆயத்தத்தைச் செய்யவேண்டுமென்ற பேருணர்வு அம்மையாருக்கு ஏற்பட்டது. கணவர் இறந்ததும் அணிகலன்களைத் துறந்து. வெள்ளாடை தரித்து, உண்டியைச் சுருக்கித் தவவாழ்க்கையிலீடுபட்டார். உகை விஷயங்களையும் தம்மையும் மறந்து சிவபூசையில் நெடுநேரம் இருப்பார்.

அவர் வழிபாடு செய்து வந்த லிங்கமும் அதிசயமான முறையிலேயே அவரிடம் சேர்ந்ததாகக் கூறப்படுகிறது. இறைவனே தம்முன் தோன்றி ஆத்மீக வாழ்வுக்கு வழிகாட்டினானென்று அம்மையார் தமது அன்பர்களுக்குக் கூறியுள்ளார்.

அம்மையாருக்கு இறைவனே கனவிலே குருவாய்த் தோன்றி உபதேசம் செய்துள்ளான். இதனை அம்மையார் பல சந்தர்ப்பங்களிலே தனது அன்பர்களுக்குக் கூறியுள்ளார். கடவுளின் திருவருள் கைவரப் பெற்றவர்களுக்கு அவர்களை அறியாமலேயே பேராற்றல்கள் உண்டாகின்றன என்பதனை இந்துக்கள் நம்புகின்றனர். இப்படிச் சித்திகள் ஏற்படவே துன்புற்றோரும், நோயாளிகளும் அவரிடம் வரத் தொடங்கினர். அவர் கொடுக்கும் சொற்ப விபூதியோ, அல்லது அவரது ஸ்பரிசமோ, அல்லது அவரது வாய்ச் சொல்லோ அல்லது அவர் வீட்டுக் குளிர்ந்த நீரோதான் நோய் தீர்க்கும் மருந்தாகும்.



அம்மையாரின் பிற்கால வாழ்வில் அவரது இல்லத்தையடைந்து பத்து வருடங்கட்குமேல் கூட வாழ்ந்து வந்தவர் பூசாரிக்கிழவனார் ஆறுமுகம் அவர்கள். இவர் ஏழாலையைச் சொந்த ஊராக உடையவர். இவரது நைட்டிகப் பிரமச்சரிய வாழ்க்கையை, சமய சீலத்தை, சைவ வேடத்தை நோக்கி எல்லாரும் பூசாரிக்கிழவனார் என்று அழைத்தனர். இவர் சைவசித்தாந்த சாத்திரப் பயிற்சியும் வேதாந்த சாத்திர ஆராய்ச்சியும் அறிவும் கைவரப் பெற்றவர். தமிழறிவும் உடையவர். இவர் அதிகாலையில் கோயில் கிணற்றில் ஸ்நானம் செய்து சந்தியாவந்தனம் செய்வார். பின்னர் ஆலயத்துட் சென்று வீதிவலம் வந்து வணக்கத்தை முடித்துக்கொண்டு நின்றபடியே தியானம் செய்வார். எம்மால் பத்து நிமிடங்கள் இருந்தே தியானம் செய்ய முடியவில்லை. இவரோ நின்றுகொண்டே மூன்று மணித்தியாலங்கள் தியானத்தில் ஆழ்ந்துவிடுவார். சில சமயங்களில் ஒற்றைக் காலில் நின்றும் தவம் செய்வார். இந்நிகழ்ச்சி பாசுபதம் பெறுவதற்காக ஒற்றைக் காலில் நின்று தவஞ்செய்த அர்ச்சுனனை நினைவூட்டுகின்றது. இவர் தியானத்தில் ஈடுபட்டிருக்கும்போது கண்களினின்று ஆனந்த பாஷ்பம் சொரிவதைப் பல அன்பர்கள் கண்டுள்ளனர்.

தியானம் முடிவடைந்ததும் கடவுளை வணங்கிவிட்டுத்தாம் வசிக்கும் இல்லம் சென்று பொங்கல் செய்து உணவருந்துவார். ஒரு நாளைக்கு ஒருநேர உணவுதான் உட்கொள்ளுவார் முருகப்பெருமான் சந்நிதியில் என்றும் தீபம் ஒளிசெய்து கொண்டிருக்கப் பிடியரிசி எடுத்துப் பொருள்தேடி மூலதனம் வைத்துஞ் சென்றுள்ளார். அம்மையாருக்குப் பலவழிகளிலும் உதவியாளராக வாழ்ந்து வந்தார். எந்த விஷயமானாலும் அம்மையார் இவருடன் கலந்தாலோசித்தே செய்வார். அம்மையார் சிவகதி அடையச் சில ஆண்டுகளுக்கு முன்பு ஏழாலை சென்று அங்கேயே சிவலோகப் பிராப்தி எய்தினார்.

தீய நோக்கங்களோடு அம்மையாரை நாடி வருபவர்களை அம்மையார் முன்கூட்டியே அறிந்துவிடுவார். அவர்களைக் கண்டதும் பத்திரகாளிபோல உக்கிரகோலம் கொண்டு விறுவிறுப்பான பேச்சுகளை நிகழ்த்துவார். ஒருவித அகோரம் தோன்றி உடலில் நெருப்புப் போல இருக்கும். அதைத் தாங்க முடியாது குறித்த பேர்வழிகள் அம்மையார் முன்னிலையில் வந்ததும் உரத்த குரலில் பாட்டுக்களைப் பாடியும் பரிபாஷைகளை வீசியும் அவர்கட்குப் பதிலளித்து அனுப்பிவிடுவார். யோகர் சுவாமிகளிடமும் இத்தகையதொரு நிலை இருந்ததை அவரது அன்பர்கள் அவதானித்திருப்பர். உயர்நிலை அடைந்த புண்ணியாத்துமாக்களின் மனநிலையைத் தாழ்ந்த நிலையினின்று தத்தளிக்கும் புல்லறிவாளர் அளந்தறிவதென்பது முடியாத காரியமாகும்.

அம்மையார் செய்து வந்த செபம், தியானம் முதலியவற்ருேடு திருப்தி அடையாது, புறம்பேயும் சிவலிங்கத் திருமேனியில் சிவபெருமானைத் தியானிக்க வேண்டுமென்ற எண்ணம் அவர் மனதில் உண்டாகியது. இக்காலத்தில் ஒரு சிவலிங்கம் எதிர்பாராத முறையில் கிட்டியது. அது கிடைத்ததும் சிவன் கோயிற் குருக்களிடம் சிவபூசை செய்யும் முறைகளைக் கேட்டறிந்து முறைப்படி சிவபூசை செய்து வந்தார். இவ்வாறு சிவத்தியானம் சிவபூசை செய்து வருங் காலத்தில் அம்மையாருக்குச் சமாதிநிலை வந்துவிடும். மணித்தியாலக் கணக்காகப் பிரக்ஞையற்றிருப்பார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவருக்கு அடிக்கடி சமாதிநிலை கூடுவது போன்று அம்மையாருக்கும் அடிக்கடி ஏற்பட்டு வந்ததைப் பக்தர்கள் அறிவார்கள். இந்தக் காலத்தில்தான் அம்மையாரிடம் அற்புதமான சித்திகள் வெளிப்பட்டன.

யோகர் சுவாமிகள் அம்மையாரிடம் அடிக்கடி வரத் தொடங்கினார்கள். இருவரும் ஒருவரை ஒருவர் நன்கறிந்தவர்கள். அம்மையாரைப் போன்று உயர்ந்த நிலையில் உள்ளவர்களை யான் எங்குங் கண்டதில்லை என சுவாமிகளும், சுவாமிகளைப்போன்ற உயர்ந்த நிலையிலுள்ள ஒரு மகானை என் வாழ்க்கையில் கண்டதில்லை என அம்மையாரும் கூறுவார்களாம். அம்மையார் ஞான சாதனை தொடங்கியவுடன் மந்திர செபத்தை விடுமாறு அம்மையாருக்குக் கட்டளை பிறந்தது. அக்கட்டளையின் தாற்பரியத்தை நன்கு அறிந்துகொள்ள முடியாத அம்மையார் வழக்கம்போல மந்திர ஜெபத்தில் ஈடுபட்டிருந்தார்கள். தியான நிலைக்குள் புகுந்தவுடன் அவர்கள் இருந்த இடத்தை விட்டு வெகுதூரம் வீசப்பெற்ருர்கள். இந்நிகழ்ச்சியின் பின் அவர் அனுட்டித்து வந்த சாதனைகள் எல்லாம் தாமாகவே அவரைவிட்டு நீங்கிவிட்டன. 1914ஆம் ஆண்டு அம்மையாருக்கு அத்துவிதஞானி ஒருவரின் நட்புக் கிடைத்தது. அதன் பின் அம்மையார் "தானே அதுவாய், அதுவேதானுய்" விளங்கினுர்கள். நான் எனும் நினைவு முற்ருய் மறைந்தது. "நானும் இல்லையடி, நாதனும் இல்லையடி" என்னும் அதீத அநுபவப்பேறு பெற்று விளங்கினுர்கள்.

அம்மையாரின் வாழ்க்கையில் காணப்பட்ட பல சம்பவங்களிலிருந்து அவர்கள் சர்வ வியாபக ஞானம் பெற்றிருந்தார்கள் என அநுமானிக்கக் கூடியதாக இருந்தது. இறைவனிடத்தில் தம்மை முற்ருக ஒப்புக் கொடுத்து அவன் இட்ட கட்டளைப்படி நடந்து வந்தார்கள். உணவுதானும் அவன் இட்ட கட்டளைப்படியே தான் உண்ணும் நிலையைப் பெற்றிருந்தார்கள். பிறர் தமக்குச் செய்யும் வழிபாடுகளையும் அக்கட்டளைக்கமையவே அனுமதித்து வந்தார்கள். அம்மையார் தமது பூதவுடலை உதறவேண்டிய காலம் நெருங்கிவிட்



டது என்பதை உணர்ந்து உணவையே குறைத்து வெறும் நீராகாரம் மாத்திரமே ஒரு மாதகாலம் உண்டார். கடையில் அதனையும் நீக்கி விட்டார்.

18-1-1929இல் அம்மையார் மகாசமாதி அடைந்தார். துக்கம் அநுட்டிப்பதற்கு எவ்வித காரணமும் இல்லை. முழுநாளும் வழிபாடே நடந்தது. அம்மையாரின் சமாதி நிலை கேட்டு மக்கள் கூட்டம் பெருகியது. சிலர் அவருடைய உடலைச் சமாதி வைக்கவேண்டுமென்று விரும்பினர். அவர் தமது அந்தியகால நிலைபற்றி ஏதும் பேசாமையால் அவரது உடலைத் தகனஞ் செய்வதென்று தீர்மானிக்கப்பட்டது. சிவயோக சுவாமிகளுடைய ஆலோசனையின் பேரிலேயே இப்படியான தீர்மானம் எடுக்கப்பட்டது. அன்பர்கள் பூத உடலுக்கு அபிஷேகம் செய்து, அலங்கரித்து சங்கநாதத்துடனும், மணி ஓசையுடனும், தேவார பாராயணத்துடனும் மயானத்துக்குக் கொண்டு போயினர். சந்தனக் கட்டை, கற்பூரம் முதலியவற்றின்மீது வைத்து அன்பர்கள் வழிபாடு செய்த பின்னர் மகன் சிதைக்குத் தீ மூட்டினுர்.

ஸ்ரீ செல்லாச்சி அம்மையார் போன்ற பெண்ணடியார்கள் புண்ணிய பூமியாகிய பரத கண்டத்தின் பல பாகங்களிலும் வாழ்ந்தார்கள் என்பதை நாம் அறிவோம். ஆனுல் பிறநாடுகளிலும் இறைவனைத் தமது நாட்டுச் சமய சாதனைக்கமைய வழிபட்டு அநுபூதி பெற்ற பெண்ணடியார்கள் பலர் வாழ்ந்தார்கள் என்பதை எங்களிற் பலர் அறிவதில்லை. ஐரோப்பா தேசத்தில் விளங்கிய பெண்ணடியார்களுள் பரிசுத்த திரேசா அம்மையார், ஜெனேவா நகரத்து பரிசுத்த கதரீன் அம்மையார், சியன்ன நகரத்து பரிசுத்த கதரீன் அம்மையார் ஆகியோர் தலைசிறந்தவர்கள். சியன்ன நகரத்து பரிசுத்த கதரீன் அம்மையாருக்குத் திருக்காட்சி ஆறுவயதுப் பிராயத்தில் கிடைத்ததென அவர்கள் வரலாற்றில் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீ செல்லாச்சி அம்மையாரின் வாழ்க்கை வரலாற்றை நாம் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிடுவோமாயின் மேலை நாட்டவர் அம்மையாரின் ஆத்மீக உயர்வை நன்கு புரிந்துகொள்வார்கள்.



# தாளையான் சுவாமிகள்

கடவுள் ஒரு வஸ்துவோடுங் கலந்ததில்லை
கடவுளோடு ஒரு வஸ்துவுங் கலந்ததில்லை
கடவுளைத் தவிர ஒன்றுமில்லை
இந்த நிர்ணயம் உடையவரே என் கூட்டத்தவர்

பாடுபட்டேன் பரமறிந்தேன்
பாடிழந்தேன் பரமானேன்

தூண்டு கோலில்லாத் துணையில்லாத் தூய்தானால்
வேண்டுவதெல்லாங் கொடுக்கும் விண்.

இலங்கைப் புகையிரதப் பகுதியில் எனக்கு ஒரு நண்பர் இருந்தார். அவர்தான் அன்பர்களால் பக்தன் என்ற புனைபெயரால் அழைக்கப்படும் நா. சிதம்பரப்பிள்ளை அவர்கள். மேலே குறிப்பிட்ட உபதேசங்களை ஒரு கொப்பியில் எழுதி வைத்திருந்து அதனை என்னிடம் காட்டினார். அவற்றை வாசித்துப் பார்த்த உடனே இவர் ஒரு ஞானியாக இருக்க வேண்டுமென்ற எண்ணம் அடியேனுடைய உள்ளத்தில் எழுந்தது. இதை எழுதியவர் யார்? என்று அவர்களிடம் வினவினேன். தாளையான் சுவாமிகள் என்றார்கள். அவர் எங்கே இருக்கிறார்? என்று கேட்டேன். கொழும்பில் இருப்பதாகக் கூறினார்கள். சமீபத்தில் இருப்பதால் சுவாமிகளைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆவல் மிக்கது. அன்பர் உதவியுடன் சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றேன். அப்பொழுது சுவாமிகள் முன்னிலையில் பத்துப் பன்னிரண்டுபேர் இருந்தார்கள். நாங்கள் இருவரும் நெடுஞ்சாணையாக வீழ்ந்து வணங்கிவிட்டு ஒரு பக்கம் ஒதுங்கி நின்றோம்.

பக்தன் என்னை அறிமுகம் செய்துவைத்தார். சுவாமிகள் என்னை நிமிர்ந்து பார்த்தார்கள். அவருடைய பார்வை காந்தமென உள்ளே பாய்ந்தது. ஒரு கணப்பொழுதுதான். இருக்கலாமே என்றார்கள். நாங்கள் இருவரும் சிறிது ஒதுங்கி உட்கார்ந்தோம். நல்லாசிரியராய் வாழ்ந்தால் ஆண்டவனைக் காணலாம் என்றார்கள். அத்துடன் சுவாமிகளுடைய பேச்சு அங்கு முன்னமே கூடியிருந்தவர்கள் பக்க



மாக மாறியது. அன்றைய சந்திப்பு என்றும் மறக்கமுடியாத ஒரு சந்திப்பாக அமைந்தது. அச்சந்திப்பே முதலுங் கடைசியுமாக அமைந்தது. அதன்பின்பு பலமுறை முயன்றும் சுவாமிகளைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிடைக்கவில்லை. இதேபோலவே சிந்தானைக்குட்டி சுவாமிகளையும் காரைநகரில் ஒரேஒரு முறைதான் சந்திக்கும் வாய்ப்புக் கிட்டியது.

இராமநாதபுரம் ஜில்லா பல மகான்களைத் தோற்றுவித்த புண்ணிய பூமியாகும். நம்புதாளை என்பது அங்குள்ள கிராமங்களில் ஒன்றாகும். இக்கிராமத்தில் கனம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் என்பவர் வாழ்ந்து வந்தார். அவரது அன்பு மனைவியாரின் பெயர் 'மீராநாச்சியார் உம்மா' என்பதாகும். இருவரும் செய்த தவத்தின் பேறாகத் தோன்றியவர் 'ஷெய்கு நெய்னா முஹம்மது மஸ்தான் பாவா' அவர்கள் ஆவர். 'ஊரைச் சொன்னாலும் பேரைச் சொல்லாதே' என்பது தமிழ்ப் பண்பாட்டை விளக்கும் ஒரு பழமொழி. பெரியவர்களுடைய பெயரையும், மனைவிமார் கணவனது பெயரையும் உச்சரிக்கும் வழக்கம் இல்லை. இது அவர்களுக்குக் கொடுக்கும் மரியாதையாகக் கருதப்பட்டு வந்தது. தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் பெரியாரைக் குறிக்குமாறு ஏற்பட்டுவிட்டால் அவர்கள் பிறந்த ஊரின் பெயரால் குறிப்பிடுவார்கள். முசிறி, சீர்காழி போன்ற பெயர்கள் அவ்வண்ணம் ஏற்பட்டவையே. அதேபோன்று 'ஷெய்கு நெய்னா முஹம்மது மஸ்தான் பாவா' அவர்களின் பெயரையும் ஊரின் பெயராலேயே அழைக்கத் தொடங்கினர். நம்புதாளையில் பிறந்தபடியினால் பிற்காலத்தில் தாளையான் சுவாமிகள் என அழைக்கப்பட்டார்.

குழந்தை தாயின் வயிற்றில் கருவாக இருக்கும்பொதே தந்தை இறந்துவிட்டார். அப்படியானால் தாய்க்கு எவ்வளவு சோதனைகள் நிகழ்ந்திருக்கும் என்பதை நாம் யூகித்தறியலாம் அல்லவா? குழந்தை தாயாரின் அரவணைப்பிலேயே வளர்ந்து வந்தது. பெற்றார் இட்ட பெயரினையும் ஊர்ப் பெயரினையும் சேர்த்துச் சுருக்கமாக "தாளையான் பாவா" என்றும் அழைப்பர். இவர் குடும்பத்திலே ஒரேஒரு மகன். ஆனபடியினாலே தாயார் இவருக்குத் திருமணம் செய்து பார்க்க ஆசை கொண்டார். தாயார் தமது கருத்தைப் பாவாவிடம் தெரிவித்தார். அவர் தாயாரை நோக்கி, "எனதருமை மாதாவே நான் திருமணம் செய்துகொள்ளக்கூடிய பருவத்தை இன்னுமடையவில்லை. அந்தக் காலம் வரும்போது தாங்கள் சீவித்திருந்தால் அதைச் செய்துகொள்ளலாம்" என்று விடை கூறிக் கொழும்பு செல்ல உத்தரவு கேட்டார்கள். அன்பு மகனுடைய இந்த இதமான வார்த்தைகளைக் கேட்ட அம்மையார் மனம் மிகமகிழ்ந்து மகனை வாழ்த்தி இலங்கை செல்வதற்கு உத்தரவு கொடுத்தார்கள்.

இலங்கைக்குச் செல்லுமுன்பு ஒருநாள் தாயும் மகனும் தெரு
வழியே சென்று கொண்டிருந்தார்கள். எதிரே சில பக்கிரிகள் வந்
தார்கள். இவர்கள் யார்? என்று தமது அன்னையாரிடம் கேட்டார்.
தாயாரோ எள்ளளவேனும் கல்வியறிவில்லாதவர். தாயார் சொன்னார்,
"வானுலகத்திலிருந்து பூவுலகத்திற்குச் சாப்பிட வந்திருக்கிறார்கள்
சாப்பிட்ட பின் மறுபடியும் வானுலகம் சென்றுவிடுவார்கள்." இவ்
வார்த்தைகள் அப்பிஞ்சு உள்ளத்திலே நன்கு பதிந்துவிட்டது. தானும்
அப்பக்கிரிகளைப்போல வரவேண்டும் என்ற எண்ணம் அவருடைய
உள்ளத்திலே கல்லின் மேல் எழுதிய எழுத்துப்போல நன்கு பதிந்து
விட்டது.

தாயாருடைய தந்தையார் ஒரு. யோகி. அவரிடம் பாவா சென்று
'இந்தப் பக்கிரிகளைப்போல நானும் வரவேண்டும். நானும் வானுலகம்
செல்லவேண்டும். இதற்கு வழி என்ன? என்று கேட்டார். உடனே
பெரியவர் சிரித்தார். உனக்கு வேண்டியதெல்லாம் நான் சொல்லித்
தருகின்றேன். ஆனால் ஒரு நிபந்தனை. எனக்கு நீ தொண்டு செய்ய
வேண்டும். அதனை மகிழ்வுடன் ஏற்றுக்கொண்ட பாவா அன்று
தொடக்கம் தாத்தாவின் மனம் கோணாது தொண்டுகள் செய்துவந்
தார். சீலை தோய்த்தல், உணவு கொண்டுவருதல் முதலாக எல்லாத்
தொண்டுகளையும் மனம்கோணாது செய்து வந்தார். குருசிஷ்ய இணக்
கம் இருவருக்குமிடையே ஏற்பட்டது. இவருடைய பக்குவ நிலை
அறிந்து தீக்ஷையும் உபதேசமும் கொடுக்கப்பபட்டன.

தாத்தாவிடம் பெற்றுக்கொண்ட உபதேசத்தைத் தீவிரமாகச்
சாதனை செய்வதில் ஈடுபட்டார். தொண்டியில் மௌனகுரு ஒருவர்
இருக்கிறார் என்று கேள்வியுற்று அவரை நாடிச் சென்றார். அவர்முன்
கைகளைக் கட்டியவாறு மிகப் பணிவோடு நின்றார். மௌனயோகியோ
இவரைத் திரும்பிப் பார்ப்பதில்லை. தினமும் இப்படியே நிகழ்ந்து வந்
தது. தனது மனதில் இவர்தான் தனது குரு என்று தீர்மானம்
செய்துகொண்டார். இவரது வைராக்கியத்தை உணர்ந்த மௌன
குரு ஷெய்கு மஸ்தான் ஆரியுபில்லாஹ் இவரைத் தமது சீடனாக
ஏற்றுக்கொண்டார்.

இந்த நிலையில் இலங்கை வந்தார். அக்காலத்தில் இலங்கை
வந்த பாய்க் கப்பல் ஒன்றிலே பிரயாணம் செய்தார். கடை ஒன்றில்
சம்பளத்திற்கு உழைத்தார். மௌனகுருவுக்கு விசேடமான பொருட்
களைத் தனது சம்பளத்தில் வாங்கி அனுப்பிக் குருசீட இணக்கத்தை
நெருக்கமாக்கிக் கொண்டார். இவர் அனுப்பிய பொருட்களைப் பார்த்த
மௌனகுரு, "நம்புதாளைப் பையனா அனுப்பினான்? நல்லாயிருக்கிறதே."
என்று கூறுவாராம். இப்படி இவர் இலங்கையில் இருக்கும்போது
ஓராண்டின் பின் மௌனகுரு சமாதி அடைந்துவிட்டார் என்ற



செய்தி வந்தது. அதனைக் கேட்ட உடனேயே மயக்கம் அடைந்து
விழுந்துவிட்டார். அந்த மயக்க நிலையில் அவருக்குக் குருபகவா
னுடைய திருக்காட்சி கிடைத்தது. மனம் தெளிவுபெற்று மறுபடியும்
இந்தியா சென்று தொண்டில் குருநாதனுடைய சமாதியைத் தரிசித்
தார்.

சமாதியின் சன்னிதியில் சிலகாலம் மௌனத்தவம் புரிந்தார்கள்.
ஒருநாள் தியானத்தில் அமர்ந்திருக்கும்போது "உன் தாயார் சந்தூக்
கில் வருகிறாள் ஓடு" என ஒரு அசரீரி வாக்கு உண்டாயிற்று. ஏதோ
மனப்பிராந்தி என்று அசரீரியைப் பொருட்படுத்தாமல் மௌன
மாகவே இருந்தார்கள். இரண்டாம் முறையும் அசரீரி கேட்டது. அதை
யும் செவிமடுக்காதவர்போல அசண்டைத்தனமாக இருந்தார். மூன்
றும் முறையாக உரத்த தொனியில் வலியுறுத்தி, "சீக்கிரம் ஓடடா"
என்னும் சப்தத்தோடு கன்னத்தில் ஒரு அடியும் விழுந்தது.

அத்தனைக்கும் பிறகுதான் பாவாவுக்கு ஒரு தெளிவு ஏற்பட்டது.
தனது இருக்கையை விட்டெழுந்தார். ஒரு மைல் தூரத்தில் உள்ள
நம்புதாளையை நோக்கி விரைந்தோடினார்கள். அடக்கஸ்தலத்தில்
தாயாரின் திருமேனி வைக்கப்பட்டதைக் கண்டார்கள். நிலைதடுமாறி
ஆவேசமுற்றவர்களாய் அக்குழியினுள் விழுந்துவிட்டார்கள். இதனைக்
கண்ணுற்ற உறவினர் இவரைத் தூக்கி அப்புறப்படுத்தினர்.

அதற்கப்பால் தம்மில்லத்தில் தாயாருக்குச் செய்ய வேண்டியன
எல்லாம் செய்தபின் ஊரைவிட்டு வெளியேறினார்கள். பாய்க்கப்பல்
ஒன்றில் வேலை செய்து வந்தார்கள். ஒருநாள் மேலதிகாரி ஒருவர்
மேல்கட்டிலிருந்து தாயுமான சுவாமிகளின் பாடல் ஒன்றைத் தப்பும்
தவறுமாகப் பாடிக்கொண்டிருந்தார். இதனைச் செவியுற்ற பாவா
அவர்கள் அவர் முன்னிலையில் சென்று, சரியான முறையில் அப்
பாடலைப் பாடினார்கள். அதனைச் செவியுற்ற அவ்வதிகாரி இவரைத்
தப்மோடு அணைத்துக்கொண்டார்கள். அந்த அதிகாரி இவரிடம்
வேலை வாங்குவதைத் தவிர்த்து இவர் விருப்பப்படி மறுபடியும் இலங்
கைக்கு அனுப்பி வைத்தார்.

கொழும்பு வந்து சேர்ந்து பல வருடங்கள் வர்த்தகத்தில் ஈடுபட்
டார். அதில் முன்னேற்றமுங் கண்டார். எவ்வளவுதான் பொரு
ளில் புரண்டாலும் மனம் வேறு எங்கேயோ சஞ்சரித்து ஞானமார்க்
கத்தில் இன்னும் முன்னேற வேண்டும் என்று பெரியதோர் ஆர்வம்
ஏற்பட்டது. அப்பால் எங்கேனும் ஒரு மகானின் சன்னிதானத்தை
அடைந்து தனித்திருக்க வேண்டும் என்ற அவாப்பூண்டவராய்த் தமது
வர்த்தகத் தொடர்புகள் யாவற்றையும் வெறுத்துத் தள்ளிவிட்டுக்
கொழும்பிலிருந்து பாரத நாட்டிற்கு யாத்திரையாகப் புறப்பட்டார்.

முத்துப்பேட்டை என்ற ஊர் வந்து சேர்ந்தார். "ஹக்கீமுல் ஹுக்கமா ஷெய்கு தாவூத் ஒலிநாயகம்" அவர்களுடைய திருச்சமாதியைச் சேர்ந்தார்.

இங்கு 'அக்கரை இராவுத்தர்' என்னும் பெரியாரைச் சந்தித்து உரையாடும் சந்தர்ப்பம் கிடைத்தது. அவ்வமயம் இராவுத்தர் அவர்கள் இவர்களை ஆதரித்துத் தமது ஆண்டகை அவர்களின் முன்அறிவிப்பின்படி தன்னுடைய அந்திய காலம் நெருங்கிவிட்டதாகக் கூறினார். நாமிருவரும் ஒரே நோக்கம் உடையவர்கள். ஆனபடியினால் நீங்கள் இங்கேயே தங்கவேண்டும். "அடுத்து வரும் ஜமாதுல் அவ்வல் பிறை ஒன்றில் ஆண்டகை அவர்களின் கந்தூரி ஆரம்பநாளன்று நான் தேகவியோகமாகிவிடுவேன். நீங்கள் என்னோடு இருந்து எனது மரணச் சடங்குகளை நிறைவேற்றிவிட்டு, இந்தக் குடிசையிலேயே தங்கி இருந்து மேன்மைதங்கிய ஆண்டகை அவர்களின் கிருபா கடாட்சங்களைப் பெற்று ஆனந்தநிலை அடைவீராக" என்று கூறியதோடு மகான் ஷெய்கு தாவூத் ஆண்டகை அவர்களின் மகத்துவத்தைப்பற்றியும் அங்கு தாமடைந்த பாக்கியங்களைப்பற்றியும் எடுத்துக் கூறி இருவரும் நீண்டநேரம் சம்பாஷணை செய்தனர்.

குறிப்பிட்ட நாளில் இராவுத்தர் இறைவனடி சேர்ந்தார்கள். அவர்களுக்குரிய மரணச் சடங்குகளைக் குறைவின்றிச் செய்து நல்லடக்கம் செய்தபின் அதே குடிசையில் பாவா அவர்கள் பன்னிரண்டு வருஷ காலம்வரை தங்கி இருந்து ஐங்காலத் தொழுகை, நோன்பு போன்ற விதிகளை வழுவாது அனுஷ்டித்தவர்களாய் வாய்பேசா மௌன யோகியாகவே இருந்தார்கள். அப்பன்னிரண்டு வருடங்கட்கிடையில் பல சித்திகள் பெற்று விளங்கினார்கள்.

தபோசித்தி பெற பகல் எல்லாம் நோன்பு அனுஷ்டித்தார்கள். இரவெல்லாம் வணக்கத்தில் ஈடுபட்டார்கள். மக்கள் எல்லாம அயர்ந்து நித்திரைக்குப் போனபின் அர்த்தசாமத்தில் ஆண்டகை அவர்களின் சமாதி முன்பு அமர்ந்திருப்பார்கள். சோர்வு ஏற்பட்டால் நிற்பார்கள்; சுற்றி வருவார்கள்; இடையிடையே அவரையும் அறியாமல் தூக்கம் வந்துவிட்டால் அடே! என்றொரு அசரீரி கேட்டு விழித்தெழுந்துவிடுவார்கள். மறுபடியும் தூக்கம் வந்துவிட்டால் அடே! என்ற குரல் கர்ணகடூரமான அதட்டலாக ஒலிக்கும். மறுபடியும் தூக்கம் வந்துவிட்டால் அடே! என்ற அதட்டலோடு அடியும் கிடைக்கும். கன்னத்தில் அடி விழுந்தவுடன் தலைவிரிகோலமாக ஓடிச் சென்று முன்னாலிருந்த குளத்தில் நீராடித் தியானத்தில் அமர்வார்கள். இப்படியே பன்னிரண்டு ஆண்டுகள் ஊண், உறக்கம், உலக சுகபோகங்கள் யாவற்றையும் வெறுத்தொதுக்கிவிட்டு ஆண்டகையின் திருவடிகளே சரண் என்று கிடந்தார்கள்.



ஒருநாளிரவு ஜீலானி அவர்களைத் தரிசிப்பதற்காகப் பகுதாதுக் கேகவேண்டும் என ஆண்டகை அவர்களின் திருவடியில் வேண்டுதல் செய்துகொண்டே இருந்தார்கள். அப்போது "பகுதாத்தைக் காட்டுவோம்" என்றொரு தொனி கேட்டது. பின்னிரவு பாவா அவர்கள் தூக்கத்திலிருக்கும்போது கனவில் "இதோ பகுதாதைப் பாரும்" என்றொரு பெரியாரின் வாக்கைக் கேட்டது. அச்சமயம் இவர் இருந்த குடிசையின் மேல்புறத்தில் காணப்படும் ஒற்றைக்கால் மண்டபத்தில் பல பெரியோர்களின் மத்தியில் அமர்ந்திருக்கும் வடிவழகுமிக்க பெரியாரை நோக்கி நானும் தங்கள் சமுகம் வரவேண்டுமே என்று இரந்து கேட்டதற்கு "இதோ பக்கத்தில் காலியாக இருக்கும் ஆசனம் உமக்குரியதுதான். என்றாலும் வருஷம் பன்னிரண்டு ஆகவேண்டும்" என மறுமொழி பகர்ந்தார்கள்.

இன்னொருநாள் இரவு, பாவா அவர்கள் துயில்கொண்டிருக்கும்போது பெரியார் ஒருவர் இவரின் சொப்பனத்தில் தோன்றி இவரை அழைத்தார். அழைத்த பெரியார் முன்நடக்க இவர் பின்னால் சென்றார். சிறிது தூரம் சென்றதும் பெரியவரைப் பின்தொடர முடியாமல் ஓட்டமாக ஓடிச்சென்றார். இப்படியே சிறிது தூரம் சென்றதும் பாவா களைத்து வாடிவிட்டதைக் கிருபையோடு கவனித்த அப்பெரியார் தமது சோழியப் பையிலிருந்த குடுக்கையைத் திறந்து அதனுள்ளிருந்த ஒப்புவமை கூறமுடியாத பானத்தை இவர்கள் வாயில் ஊற்றினார்கள். அதைப் பருகி ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினவர்களாய் அதிவிரைவோடு நடந்தார்கள். ஆரம்பத்தில் இவர்களுக்கு முன் வழிகாட்டியாக நடந்து சென்று சர்பத்தை நல்கிய அந்தப் பூமான் இவர்களுக்குப் பின்னால் நடந்தார்கள் எனினும், முன் போகும் வாலிபரைத் தொடரமுடியாமல் இப்பெரியார் ஓடிச் செல்லவேண்டியதாயிற்று. இவ்வாறான காட்சிக்குப்பின் பாவா அவர்களுக்குப் பெரியதோர் சக்தியும் இன்ப நிலையும் உண்டாகிவிட்டது.

இம்மாதிரி எண்ணமுடியாத எத்தனையோ அற்புதக் காட்சிகளைக் கண்டு தெளிந்து பன்னிரண்டாம் ஆண்டின் இறுதியில் தமது சொப்பனத்தில் கம்பீரத் தோற்றமுடைய பக்கீர் ஒருவர் உதயமாகி இவர்களை நோக்கி, "உமது தவம் முடிந்துவிட்டது; எனவே இதோ குவிக்கப்பட்டிருக்கும் பொற்குவியலை அள்ளிக்கொண்டு போகலாம்" என்றுரைத்தார்கள். அவ்வசனத்தைக் கேட்ட இவர்களுக்குக் கோபம் உண்டாகி இவ்வுலகப் பொருள் அனைத்தும் துச்சம். எனவே எனக்குத் தேவை இல்லை என்று அலட்சியமாக மறுமொழி கூறிவிட்டார்கள். உடனே அப்பெரியார் இவர்களைக் கட்டி அணைத்து முத்தமிட்டு, தேவாமிர்தம் போன்ற பானத்தைப் புகட்டியதோடு பல இரகசிய அறிவுரைகளையும் போதித்து மறைந்தார்கள்.

அதன்பின் முத்துப்பேட்டையை விட்டுப் புறப்பட்டார்கள். நாகூர் ஆண்டவர் அவர்களின் சமாதியை அடைந்து சிலகாலம் சாதனை செய்தார்கள். அங்கிருந்து கொழும்பு சென்றடைந்தார்கள். கொழும்பில் தானியான் என்ற அச்சகத்தை நாட்டி, பக்கிரிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் வாசஸ்தலமாக அமைத்து உதவினார்கள். இன்னும் பல தொழில்களையும் ஆரம்பித்து நடத்தினார்கள். சமாதி அடையும் காலம் கிட்டியதை உணர்ந்தார். அதனைத் தமது அடியார்களிடம் முன்கூட்டியே கூறியிருந்தார்கள்.

3-8-1955 புதன்கிழமை காலை 9-30 மணியளவில் முன்அறிவித்தல் செய்திருந்ததற்கேற்பத் தங்களது அரவணைப்பில் வைத்திருந்த பக்கிரிகளுடனும் சன்னியாசிகளுடனும் வெகு ஆனந்தமாக உரையாடிக்கொண்டிருக்குஞ்சமயம் பரிபூரணநிலை என்னும் மகா சமாதியை அடைந்தார்கள்.

இறுதிக் கிரியைகள் குறைவின்றிச் செய்யப்பட்டன. பன்னூற்றுக்கணக்கான மெய்யடியார்கள் புடைசூழக் கொழும்பு ரத்மலானை கந்தவளை என்னுமிடத்தில், முகம்மது பலீல் அப்துல் கபூர் அவர்களால் நன்கொடை அளிக்கப்பெற்ற பூங்காவில் இம்மகானின் புனிதவுடல் நல்லடக்கஞ் செய்யப்பட்டது. அவர்களின் சமாதிபீடம் சிறந்ததொரு திருக்கோயில்போல இன்றும் திகழ்ந்துகொண்டிருக்கின்றது.



# மகாதேவ சுவாமிகள்

1937, 38, 39ஆம் ஆண்டுகள் திருநெல்வேலிச் சைவாசிரிய கலாசாலையில் கல்வி பயின்ற காலம், மாலை நேரங்களில் மகான் ஒருவரைத் தரிசிக்கும் பேறு அடிக்கடி கிடைத்து வந்தது. ஆறு அடி உயரமான அன்புருவம்; செக்கச் செவேல் என்றிருக்கும் திருமேனி; நல்ல தோற்றப் பொலிவு; முழந்தாளை மறைத்தும் மறையாதும் அமைந்த அகலங் குறைந்த காவிவேட்டி; மிகச் சிறிய ஒரு அங்கவஸ்திரம். இவையே அம்மகானின் வெளிவேடப் பொலிவு. இவர்தான் வேதாந்த மடத்தைச் சேர்ந்த மகாதேவ சுவாமிகள்.

பாரத நாட்டில் நிலைத்திருந்த ஒரு குரு பரம்பரையிலிருந்து மூன்று மகான்கள் ஈழத்திற்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் சுவாமி சின்மயானந்தர், சுவாமி முக்தியானந்தர், சுவாமி நிரஞ்சனானந்தர் என்று அழைக்கப்பெற்றனர். சுவாமி சின்மயானந்தர் பரம்பரையில் வந்தவர்கள் சாஷன் சுவாமி பரம்பரையினர். இப்பரம்பரையில் வந்தவர்களே கந்தர்மடத்து வேதாந்த மடத்தைச் சேர்ந்தவர்கள்.

ஊர்காவற்றுறைப் பட்டினத்திற்கு அணித்தாய் விளங்குவது கரம்பொன் கிராமம். இக்கிராமத்திலே திரு. இராமநாதருக்கும் திருமதி. அன்னபூரணிக்கும் 5-9-1874 வெள்ளிக்கிழமை பின்னிரவு திருவாதிரை நட்சத்திரமும் கடக லக்கினமும் கூடிய சுபமுகூர்த்த சுபவேளையில் ஒரு திருமகன் அவதரித்தார். இவர்தான் "தம்பையா" என்னும் அன்புப் பெயர்பூண்ட வைத்தியலிங்கம் ஆவர். இவரே பிற்காலத்தில் மகாதேவ சுவாமிகள் என்று கொண்டாடப்பெற்றவரும் ஆவர்.

இவரது ஆரம்பக் கல்வி கரம்பன் கத்தோலிக்க கன்னியாஸ்திரிகளால் நடத்தப்பட்ட ஆரம்ப பாடசாலையில் தொடங்கியது. எட்டு வயதில், கரம்பொன் மேற்கில் முத்துக்குமாருச் சட்டம்பியாரால்

நடத்தப்பட்ட திண்ணைப் பள்ளியில் இரண்டாவது கல்வி ஆரம்பமானது. இவர் அக்கம் பக்கங்களில் நடைபெறும் பெரியார்களுடைய உபந்நியாசங்களையும் சங்கீத கதாப்பிரசங்கங்களையும் தவறாது கேட்டு வந்தார். கேள்வி அறிவினாலேயே தமது அறிவைப் பூரணப்படுத்திக் கொண்டார்.

சீலர்களையே சிவமாகக் கருதித் தம்மாலியன்ற தொண்டுகளையும் உதவிகளையும் செய்வதே இவரது புறவழிபாடாயிற்று. கடவுட் கலப்புடன் உலகக் கோயிலுக்கு அருட்பணி புரிவதே இவரது மதமாயிற்று. மனித சமுதாயமெல்லாம் ஒரே குலம் — உலகமெல்லாம் ஒரே வீடு — அனைத்திற்கும் ஒரே கடவுள் — அன்பும் அருட் பணியுமே அவரை அடையும் வழி என்பது அவர் கொள்கையாயிற்று. எப் பெரியாரைக் கண்டாலும் வணங்கி அவரிடம் ஏதும் கேட்பதும் கேட்டவற்றைச் சிந்திப்பதுமாக இருப்பார். அதிகம் பேசமாட்டார். பிறர் பேசுவதைத் தாம் செவிமடுப்பார். வீண் பொழுதும் கழிக்க மாட்டார். பொழுது கழிவதும் தெரியாது. நாளெல்லாம் உள்ளும் புறமும் சுறுசுறுப்பாக இயங்கிக்கொண்டிருப்பார். மோனமும் தியானமும் அடக்கமும் அன்பும் திருவும் அருளும் செறிந்த அவரது தவமும் பணிவும் இளமையிலே யாவரையும் கவர்ந்து இழுத்தன. அதிகாலையில் எழுந்து வேப்பங்குச்சியை எடுத்துப் பல் துலக்கி, குளிர்ந்த நீரிலே குளித்து, நன்றாகத் தோய்த்துலர்ந்த ஆடை அணிவது இவரது வழக்கமாக இருந்தது.

இவருக்கு மூன்று ஆண் சகோதரர்களும் இரண்டு பெண் சகோதரிகளும் இருந்தனர். இவர் குடும்பத்தின் முதல் பிள்ளை தமது பெரு முயற்சியினால் தமது குடும்பத்தைப் பேணிப் பாதுகாத்து வந்தார். ஒரு பக்கம் ஆத்மீகப் பசி எடுக்க மறுபக்கம் தன் தாய் தந்தையரை வயிற்றுப் பசியால் வாடாது பாதுகாத்து வந்தார். இதற்காகத் தமது கிராமத்தில் விவசாயத்தில் ஈடுபட்டதோடு நில்லாது சங்குவேலியைச் சேர்ந்த மட்டக்களப்பு வைத்தியலிங்கம் என்னும் ஒரு தனவந்தருக்குக் கணக்கப்பிள்ளையாய் அமர்ந்து அதனால் வரும் ஊதியத்தைக்கொண்டே தன்னையும் தமது பெற்றோரையும் ஓம்பிவரலானார். இதனால் இவர் வாழ்க்கையில் பிறர் கையை எதிர்பார்க்கும் சூழ்நிலை ஏற்படவே இல்லை. தமது ஓய்வு நேரம் முழுவதும் சாத்திரம், தோத்திரம் பயிலுவதே தொழிலாகக் கொண்டார். இப்படியாக நாட்கள் செல்லச் செல்ல ஞான தாகமும் அதிகரித்தது.

மட்டக்களப்பு வைத்தியலிங்கம் கீரிமலையில் ஒரு மடங் கட்டுதற்கு ஆவல் கொண்டார். அதற்கு மேற்பார்வையாளராகச் சுவாமிகளையே அமர்த்தினார். மடங் கட்டப்படுங்காலையில் ஆலயதரிசனைக்காக அங்குள்ள சிவாலயத்திற்குச் செல்வார். அங்கு ஒருநாள் கண்ணம்மாச்சி



என்ற அம்மையார் ஒரு புத்தகம் வைத்துப் படித்துக்கொண்டிருக்கக் கண்டார். இவர் அப்புத்தகம் ஓர் உயர்ந்த நூலாக இருக்கவேண்டும் என்று எண்ணி "ஒருதரம் பார்த்துவிட்டுத் தருகிறேன், தாருங்கள்" என்று அந்த அம்மையாரைக் கேட்டார். அதற்கு அம்மையார், "இதை எனது குருநாதரின் உத்தரவின்றித் தருவதற்கில்லை" என்று கூறிவிட்டார். குருவின் மூலம்தான் இத்தகைய நூல்கள் தரப்படவேண்டும் என்று கூறினார்.

இவ்வார்த்தைகள் அவருடைய உள்ளத்திலே ஒரு புத்துணர்வை உண்டாக்கின. அக்குருநாதனைத் தரிசிக்கவேண்டும்; அப்புத்தகத்தைப் படிக்கவேண்டும் என்ற பேரவா அதிதீவிரமாக எழுந்தது. குருநாதன் எங்கே இருக்கிறார் என்று அம்மையாரிடம் கேட்டறிந்துகொண்டு, உள்ளம் சிலிர்க்க உணர்ச்சிவசப்பட்டு அம்மையார் காட்டிய இடத்திற்கு விரைந்து சென்றார்.

கனகரத்தினம் சுவாமிகள் சிறாப்பர் மடத்து அறையில் அதுவரையும் தியானித்து இருந்துவிட்டு ஞானகுரவனைத் தேடிவரும் தம்பையாவை எதிர்கொள்ள வாசலண்டை வந்து சேர்ந்தார். அக்கணமே திரு. தம்பையாவும் மெய்ம்மறந்து அந்த ஞானகுரவரின் திருப்பாதங்களைச் சிரமேற்கொண்டு வீழ்ந்து வணங்கி ஆனந்தக் கண்ணீர் பெருகக் கிடந்தார். குருநாதனும் தன் குழந்தையின் பரிபக்குவ நிலையினை உணர்ந்து அவரைத் தேற்றி வேண்டியதென்ன? என்று வினவினார். பிறவாப் பெருவாழ்வு தரும் மெய்ஞ்ஞானம் பெறுவதே தமது அபேட்சை என்று தழுதழுத்த குரலில் கூறிப் பணிந்து நின்றார்.

கனகரத்தினம் சுவாமிகள், 'எதற்கும் அஞ்சேல்' என்று தஞ்சம் அளித்துத் தம்மிடம் அடிக்கடி வந்து போகுமாறு கூறினார். கண்ணம்மாச்சியின் கையில் இருந்த 'மோட்ச சாதன இரகசியம்' என்ற நூலையும் தமது கரத்தால் வாங்கித் தம்பையாவின் கையில் கொடுத்தார். அன்றுதொட்டுத் திருநெல்வேலியில் உடையார் வீட்டில் பெரிய சுவாமிகள் நடாத்தும் வேதாந்த வகுப்பிற்குக் கிரமந் தவறாமல் சென்று பாடங் கேட்டுவரலானார். தம்பையா பெரியகடை தையல் நாயகி அம்பாளைத் தினமும் தரிசனை செய்வது வழக்கம். தேவி உபாசனையில் மிக ஈடுபாடுடையவராக விளங்கினார்.

யாழ்ப்பாணத்துக் கந்தர்மடப் பகுதியில் கந்தபுராண ஒழுங்கை என்று அழைக்கப்பட்ட வீதியில் பருத்தித்துறையைப் பிறப்பிடமாகக் கொண்டவரும் இலங்கை அரசாங்கப் பிஸ்கால் பகுதியிலே சார்ஜன்டாகக் கடமை ஆற்றியவருமான திரு. சின்னத்தம்பி என்பவர் வாழ்ந்துவந்தார். இவரைச் "சார்ஜன்ட் சுவாமி" என்று மக்கள் அன்பாக அழைப்பர். தத்துவ சாஸ்திரங்களிலும் சமய

அறிவிலும் மிக ஆற்றலுள்ளவராக இவர் விளங்கினார். எந்த நேரமும் இவரைச்சுற்றி ஒரு கூட்டமே இருக்கும். இவர் சுவாமி சின்மயானந்தரின் சீடராவர். சார்ஜன் சுவாமிகளின் சீடர் பெரிய சுவாமி என்றழைக்கப்படும் சுவாமி கனகரத்தினம் சுவாமிகள் ஆவர். கனகரத்தினம் சுவாமிகளின் உத்தம சீடரே மகாதேவ சுவாமிகள் ஆவர்.

தம்பையா தனது குருநாதராம் கனகரத்தினம் சுவாமிகளுடன் தலயாத்திரை செய்யப் புறப்பட்டார். இந்தியாவில் பாடல்பெற்ற தலமெல்லாம் யாத்திரை மேற்கொண்டனர். மணிவாசகப் பெருமான் ஞானதிட்சை பெற்ற திருத்தலமாகிய திருப்பெருந்துறைக்கும் சென்றனர். அங்குதான் தம்பைபாவுக்குக் கனகரத்தினம் சுவாமிகளால் ஞானதீக்கை வைக்கப்பெற்று மகாதேவ சுவாமி என்ற தீட்சா நாமமும் சூட்டப்பெற்றது.

சுவாமிகள் யாத்திரை முடிந்து ஈழநாடு வந்து சேர்ந்ததும் தம் குருநாதனுக்கேற்ற ஆச்சிரமம் ஒன்று அமைக்கவேண்டுமென்று திருவுளங் கொண்டார். பல அன்பர்களிடம் உதவி கோரினார். திரு. வை. சி. சி. குமாரசுவாமி அவர்களுடைய தந்தையார் நிலம் அளித்தார்கள். மற்றும் பல அன்பர்கள் கட்டிடத்திற்கு வேண்டிய பணம் அளித்தார்கள். குருநாதருடைய மனதுக்கியைந்த ஆச்சிரமத்தை மகாதேவ சுவாமிகளே முன்னின்று கட்டி முடித்தார்கள். ஆச்சிரமத்திற்குச் சிவகுருநாதபீடம் என்று பெயரிடப்பட்டது. கனகரத்தினம் சுவாமிகளே முதலாவது பரமாசாரியாராக வீற்றிருந்து குருபீடம் செயலாற்றத் தொடங்கியது. ஆண்—பெண் இருபாலாருமாக நூற்றுக்கணக்கானவர்கள் கூடி வேதாந்த சிரவணம் செய்துவரலானார்கள். இதில் வேதாந்தம் போதிக்கப்பட்டுவரும்போது வேகாந்த சித்தாந்த மாறுபாடுகளுக் கிடமளியாது சமரச நோக்குடனேயே கல்வி போதிக்கப்பட்டது. இதனால் கனகரத்தின சுவாமிகளாயினும் சரி, அவர்பின் வந்த மகாதேவ சுவாமிகளாயினும் சரி, தம்மை அடுத்து வரும் மாணவர்களுக்கு அவரவர் தரத்துக்கேற்ற முறையில் உண்மையை விளக்கி வந்தார்கள்.

கரம்பொன் சைவத்திலும் தமிழிலும் பின்தங்கிய கிராமமாக விளங்குவது கண்ட மகாதேவ சுவாமிகள் அங்கு சண்முக வித்தியாலயம் என்ற பெயரில் ஒரு பாடசாலையைத் தாபித்தார்கள். இதன் பின் பல இடங்களிலும் சைவத் தமிழ்ப் பாடசாலைகள் ஆரம்பிக்குமாறு பலரையுந் தூண்டிவந்தார்கள். இதன் பயனாகத் துன்னாலையில் ஞானாசாரிய வித்தியாசாலைக்கு அத்திவாரமிட்டு அதனை ஆரம்பித்து வைத்தார்கள். அது இப்போ ஒரு மகாவித்தியாலயமாக விளங்குகிறது. அங்கு அத்திவாரக்கல் நாட்டிய தினத்தைச் சுவாமிகளின் பெயரால் பெருவைபவமாக இன்றும் கொண்டாடி வருகின்றனர்.



மகாதேவ சுவாமிகள் பொது வேலைகளில் ஈடுபட்டு நித்தியப் பிரம்மச்சாரியாக விளங்கினார்கள். இவரது பக்குவ நிலையறிந்த இவரது குருநாதர் இவருக்குக் காவி உடை கொடுத்து, சந்நியாசமும் வழங்கினார். இனிமேல் மடத்திலிருந்து ஞானத்தொண்டு புரியவேண்டுமென்றும் கட்டளையிட்டருளினார். இதன்பின் குடும்ப நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் சகோதரர்கள்பால் விட்டு, குடும்பத் தொடர்பையும் நீக்கிக்கொண்டார்.

சார்ஜன் சுவாமிகள் என்று அழைக்கப்பெறும் சின்னத்தம்பி சுவாமிகள் 29-03-1908 ஞாயிற்றுக்கிழமை சதய நட்சத்திரத்திலே பரிபூரணம் எய்தினார்கள். இவரது சமாதி யாழ்ப்பாணத்து வண்ணார் பண்ணையிலுள்ள கோம்பயன்மணல் மயானத்தில் வைக்கப்பட்டது. நடுகல் ஒன்று இவரது சமாதியிலிருக்கின்றது. தக்க கட்டிடம் எதுவும் அதன்மீது எழுப்பப்படவில்லை. இவரது குருபூசை சிவகுருநாத பீடத்தில் ஆண்டுதோறும் பங்குனித் திங்களில் வரும் சதய நட்சத்திர நன்னாளிலே வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது.

''ஆண்டவன் எல்லாரிடமுங் குடிகொண்டிருக்கின்றார். ஆனால் எல்லாரும் அவனிடத்தில் இல்லை. பக்தி என்னும் இரசத்தை எடுத்து இதயக்கமலக் கண்ணாடியிற பூசினால் அந்த ஈசுவரனின் உருவம் பதியும். கற்புள்ள ஒரு பெண் தன் கணவனிடத்து வைக்கும் அன்பு—, பதுக்கிப் பதுக்கிப் புதைத்து வைத்துப் பேய்போலத் தன் பணத்தைப் பாதுகாக்கும் ஒரு உலோபியிடத்தில் இருக்கும் பொருளாசை— உலக இன்பப் பொருள்களைப் பெறுவதற்கும் அவற்றால் அனுபவிக்கக்கூடிய இன்பங்களை அனுபவித்தற்கும் துடிதுடித்து நிற்கும் உலோகாயவாதியின் ஆவல் ஆகிய மூன்றும் ஒன்றுகூடினாற் போன்ற தீவிர பக்தி இருக்குமானால் இருதயகமலக் கண்ணாடியில் பதித்த ஈசுவரனை எங்கும் காணலாம்'' என்று போதித்த மகானாகிய கனகரத்தினம் சுவாமிகள் தமது பொறுப்புக்களை எல்லாம் தமது ஒப்பற்ற சீடராய மகாதேவ சுவாமிகளிடம் ஒப்படைத்துவிட்டு, ''உடலும் எனது உயிரும் புகுந்து ஒழியாவண்ணம் நிறைந்தான்''. தன்னிடத்து ''வேண்டும் பரிசு ஒன்று உண்டெனில் அதுவும் உன்தன் விருப்பு அன்றே'' என்று தேர்ந்து ''எண்ணமே உடல் வாய் மூக்கொடு செவி கண் இவை என்று இவை நின் கண்ணே வைத்து மண்ணின் மேல் அடியேன் வாழ்கிலேன்'' என்று விண்ணப்பித்து, ''மண்ணிலே பிறந்து இறந்து மண் ஆவதற்கு ஒருப்படுகின்றேனை அண்ணலே ஆட்கொள்க'' என்று வேண்டி ஒருப்பட்ட மனத்தினராய் 14-9-1922 மிருகசீரிட நட்சத்திர நன்னாளிலே பரிபூரணத்துவம் பெற்றார். மறுதினமாய வெள்ளிக்கிழமை இவரை இம்மடத்திலேயே சமாதி வைத்தனர்.

ஆண்டுதோறும் ஆவணி மாத மிருகசீரிட நன்னாளில் கனகரத்தினம் சுவாமிகளது குருபூசை வெகு விமரிசையாக இம்மடத்திற் கொண்டாடப்பட்டு வருவதுடன் மாதந்தோறும் மிருகசீரிடப் பெரு

நாளில் மாதாந்தப் பூசைகளும் சிறப்பாக நடத்தப்பட்டு வருகின்றன. இப்பொழுது மகாதேவ சுவாமிகளின் பொறுப்பு இன்னும் கூடிவிட்டது. சுவாமிகள் ஆச்சிரமத்திற்கு வரும் மாணவர்களுக்குப் பாடம் போதிப்பதோடு ஆங்காங்கு ஆலயங்களிலும் பாடசாலைகளிலும் சென்று சமயப் பிரசங்கங்கள் செய்து மக்களிடையே அரிய உண்மைக் கருத்துக்களைப் பரப்பிவருவாராயினர். இவர் போதித்தவாறே சாதனையிலும் ஈடுபட்டவராதலினால் மக்கள் இப்பெருந்தகையைப் போற்றி அவர் சொற்கேட்டு ஒழுகிவரலானார்கள். இவர் ஞான முதிர்ச்சியுடையவரன்றி அநுபூதிச் செல்வருமாவார். இவர்தம் பேச்சு தோற்றம், நடை யாவும் எவரையும் தம்பால் ஈர்க்கும் அன்புமயமான தன்மை வாய்ந்தவை. இதனால் எவரும் தமது சந்தேக விபரீதங்களைப் போக்குவதற்குக் கூசாது அவர்முன் சென்று தமது குறையை நிவர்த்தித்துக் கொள்வர். அவரும் காட்சிக் கெளியராய் கடும் சொல்லரல்லராய், ஞான ஒளி பரப்பும் பரமாசாரியராக இருந்து பல ஞானக்குழந்தைகளை வளர்த்துவந்தார். சுவாமிகளின் சீடர்கள் யாழ்ப்பாணத்தின் பல பாகங்களிலும் இன்றும் இருக்கின்றார்கள். சுவாமிகளின் காலத்தில் விபுலானந்த அடிகள் வித்தியானந்த தயாராம், உருத்திர கோடீஸ்வர சுவாமிகள், ஞானானந்த சுவாமிகள் ஆகியோர் சிவகுருநாதபீடத்துக்குச் சமுகம் அளித்துப் பல நாள் தங்கியிருந்து சென்றிருக்கிறார்கள்.

சுவாமிகள் இக்குருபீடம் தளர்வின்றி நடைபெற வருவாய் தரக் கூடிய தென்னந்தோப்புகள் வாங்கிவிட்டதோடு இதன் கிளை மடமொன்றை விளவேலி என்ற இடத்தில் ஆரம்பித்தும் வைத்தார்கள். இப்படியான பெருஞ்சேவைகளில் ஈடுபட்டிருந்து வேதாந்த ஞான வெள்ளத்தைப் பெருக்கெடுக்கச் செய்த பரமாசாரிய ஞானக் கொண்டல் தம்வினை முடிவெய்தும் காலம் நெருங்கிவிட்டதை உணர்ந்தார். சிலநாள் சுகவீனநிலையில் இருந்தார். மருந்து சாப்பிட மறுத்துவிட்டார். உடல் தினைப்போதளவும் நிற்கவில்லை. சமாதி எய்தும் சில நிமிஷங்களுக்கு முன் படுக்கையைவிட்டு எழுந்து கெம்பீரமாக இருந்தார். தமது கரத்தால் கீழே தொங்கியிருந்த கீழ்வாய் உதட்டை அழுத்திப் பொருத்தி மூடினார். அதன்பின் பேச்சுமில்லை மூச்சுமில்லை. 30-10-1942 ஞாயிற்றுக்கிழமை இரவு 7 மணிக்கு சுவாமிகள் சமாதிநிலை எய்தினார்கள். இக்குரவரின் சிவகுருநாதபீடத்தை ஸ்ரீஇராமலிங்க சுவாமிகள் நிர்வகித்து வந்தார்கள் சுவாமிகளுடைய உத்தம சீடராகிய ஸ்ரீமத் வடிவேற் சுவாமிகள் பல இடங்களிலும் சமயப் பிரசங்கங்கள் செய்து நித்திய சந்நியாசியாக இருந்து தன் குருநாதன் வரன்முறை வழுவாது வாழ்ந்துவருகின்றார். அவர் இப்போது தனது குருநாதன் பேரால் கிளிநொச்சிஜெயந்திநகரில் ஆச்சிரமம் ஒன்றை நிறுவிச் சமயப்பணி புரிந்து வருகின்றார்.

# சடையம்மா

நல்லூர் நல்ல ஊர். யாழ்ப்பாண நகரத்தோடு ஒட்டிய ஒரு கிராமம். நல்லூர்க் கந்தசுவாமி கோயிலை நாடித் தினமும் அகில இலங்கையிலுள்ள முருகனடியார்கள் வெள்ளப்போலத் திரண்டு வந்து வணங்குவதை இன்றும் காணலாம். சின்னத்தம்பிப் புலவரின் பிறப்பினாலும் ஆறுமுகநாவலர் பெருமானுடைய பிறப்பினாலும் ஞானப்பிரகாச சுவாமிகளுடைய வாழ்க்கையினாலும் நல்லூரின் மேன்மை மிகமிகப் பொலிந்து விளங்கியது.

இத்தகைய நல்லூரின் வடபாலுள்ளது திருநெல்வேலி. திருநெல்வேலி கிழக்கில் எத்தொழிலுக்கும் மேலான தொழிலாக மதிக்கப்படும் நெசவுத் தொழிலையே தமது ஜீவனோபாயத் தொழிலாகக் கொண்டு ஒழுகும் செங்குந்தர்கள் நெருங்கி வாழுகின்றார்கள். அத்தகைய செங்குந்தர் மரபில் திருவீரகத்திப்பிள்ளை என்பவர் சிறந்த பக்திமான். இவர் சின்னாச்சிப்பிள்ளை என்னும் அம்மையைத் திருமணம் செய்து இல்லறமாம் நல்லறம் நடத்தினர். இருவரும் சட்டநாதர் என்ற கோயிலிலுள்ள சிவனையும் நல்லூரிலுள்ள கந்தசுவாமியையும் தினமும் தவறாது வழிபடும் நியமம் பூண்டவர்கள்.

இவர்கள் இருவரும் செய்த தவப்பேற்றின் காரணமாக 19-08-1865 ரோகினி நட்சத்திரம் கூடிய சுபதினத்திலே ஒரு பெண் மகவு திருவவதாரஞ் செய்தார். பெற்றோர் அம்மகவுக்கு முத்துப்பிள்ளை என்று நாமகரணஞ் செய்து கண்ணை இமை காப்பதுபோலக் காத்து வந்தனர். பெற்றோர் இருவருடையவும் பக்தி முத்துப்பிள்ளையிடமுங் காணப்பெற்றது. இவரது பதினோராம் ஆண்டில் இவர் பூப்பெய்து முன்னரே அவ்வூரிலுள்ள கதிரேசு என்பவரைத் திருமண நிச்சய தார்த்தம் செய்து திருமணத்தையும் சிறப்பாகச் செய்து வைத்தனர். திருமணம் நடைபெற்று நான்கு மாதங்களின் பின்பே முத்துப்பிள்ளை பூப்பெய்தினர்.

இல்லறம் நல்லறமாக நடைபெற்றுவந்தது. பூர்வ ஊழ்வினையின் பயனாக கதிரேசனாருக்கு பைத்தியம் உண்டானது. இராமகிருஷ்ணர் தெய்வபக்தியில் மூழ்கியிருந்த காலத்தில் அவரையும் பைத்தியம் என்றுதான் அழைத்தது. அத்துடன் உலகம் விட்டுவிடவில்லை. சாரதாமணி அம்மையாரையும் பைத்தியக்காரனின் பெண்டாட்டி என்று பேசியது. கணவனாரின் பைத்தியம் அம்மையாரின் உள்ளத்தை வாட்டியது. அம்மையார் ஒருநாளிரவு ஒரு கனவு கண்டார். நல்லூர்க் கந்தப்பெருமானுடைய கோயிலின் வடக்கு வீதியிலே வைரவப் பெருமானுடைய திருக்கோயில் ஒன்று உண்டு. அந்த வைரவப் பெருமான் அம்மையாரின் கனவிலே தோன்றி, தம்முடைய திருக்கோயிலுக்கு வருமாறு கட்டளை இட்டார்.

கணவனும் மனைவியுமாக இருவரும் சென்று வயிரவப்பெருமானை வழிபட்டதோடு அவர் முன்னிலையிலேயே இரவு பகலாக நாற்பது நாட்கள் கடுந்தவம் ஆற்றினர். வைரவப்பெருமானுடைய திருவருளினாலே கணவனார் பைத்தியம் நீங்கப்பெற்றார். அந்த நாற்பது நாட்களும் சுவாமி கனவிலே கூறியபடி கோயில் சுற்றாடலில் நந்தவனம் அமைத்தலும், வீதியைக் கூட்டி நீர் தெளிப்பதுமான சரியைத் தொண்டில் இருவரும் ஈடுபட்டிருந்தனர்.

இவர்கள் இருவரும் கோயிலிலே சரியைப்பணி செய்து வருங் காலத்திலே கடையிற் சுவாமிகளுடைய பெருமையைக் கேள்வியுற்றார்கள். இருவரும் ஒருநாள் கடையிற் சுவாமிகளை நாடி வண்ணார் பண்ணைக்குச் சென்றனர். சுவாமிகள் இவர்களை நாடி வருவது போன்று எதிரே வந்தார்கள். இருவரும் வீழ்ந்து வணங்கியதோடு அம்மையார் கண்களில் நீர் ஆறாகப் பெருக சுவாமிகளுடைய திருக்கண்களையே நோக்கி நின்றார்கள். கடையில் குருநாதன் எல்லாம் சரியாகிவிடும் என்று ஆசி கூறினார்கள். "கந்தனை மறவாதே. அவன் தான் நமக்குச் சொந்தம்" என்று கூறி இருவரையும் வழியனுப்பி வைத்தார்கள். அன்றைய தரிசனத்துடன் கதிரேசுவின் பைத்தியம் முற்றாக நீங்கிவிட்டது. இருவரும் வீடுசென்று கந்தனைக் கனவிலும் மறவாது இல்லற வாழ்வில் ஈடுபட்டனர்.

திருமணமாகி நான்கு ஆண்டுகள் ஆகியும் பிள்ளைச்செல்வம் இல்லாமையினாலே உற்றார் உறவினர் யாவரும் மனக்கவலை கொண்டனர். பிள்ளைப் பாக்கியத்தைக் குறித்து விரதங்களும் தவங்களும் மேற்கொண்டனர். ஒருநாளிரவு கதிரேசு கனவு ஒன்று கண்டார். "நான் எண்ணெய் ஆட்டுவோர் மரபில் உதித்திருந்தேன். இனி உன் வயிற்றில் பிள்ளையாக வருவேன்." கனவு கனவாகி விடவில்லை. நனவாகும் நாள் வந்தது. முத்துப்பிள்ளை கர்ப்பவதியானார். உற்றார்



உறவினர் இச்சுபசெய்தி கேட்டு இன்புற்றனர். கதிரேசரும் தான் கண்ட கனவினை விளம்பினார். உரிய காலத்தில் ஒரு பெண் குழந்தை பிறந்தது.

சில ஆண்டுகள் ஓடின. கதிரேசரது சகோதரி ஒரு கனவு கண்டார். "நான் உன் குடும்பத்தில் வர இருக்கின்றேன்." இக்கனவின்படி முத்துப்பிள்ளை இரண்டாவது கர்ப்பம் எய்தி இன்னொரு பெண் மகவைப் பெற்றார். இரண்டாவது குழந்தைக்கு வயது ஆறுமாதமாய் இருக்கும்போது கதிரேசர் கனவு ஒன்று கண்டார். "நீ உன் மாங்கல்யத்தை வாங்கிக்கொண்டு உன் மனைவியைக் கதிரைமலைக்கு அனுப்பி வை." இக்கனவைக் கதிரேசர் அவ்வளவு பொருட்படுத்தவில்லை. இதே நேரத்தில் முத்துப்பிள்ளையும் ஒரு கனவு கண்டார் "நீ அணிந்திருக்கும் மாங்கல்யத்தைக் கழற்றி உன் கணவனிடம். உடனே கொடுப்பாயாக." கணவனும் மனைவியும் தாமிருவரும் கண்ட கனவினை ஒருவருக்கொருவர் பரிமாறிக்கொண்டனர். இருவரும் ஒரே நேரத்தில் ஒரே கனவினைக் கண்டார்கள். ஆனபடியினால் அதனைப் பொய் என்று சொல்லி விடுவதற்கில்லை. ஆனால் ஆறுமாதக் குழந்தையை எபபடி விட்டுச்செல்வது என்ற பிரச்சினை தாயார் உள்ளத்திலே உதித்தது.

இந்த எண்ணம் முத்துப்பிள்ளையை வாட்டியபடியினால் கனவின்படி நடக்க அஞ்சினார். "உனது முலையில் நாளைப் பகல் பத்துமணிக்கு ஒரு கட்டி தோன்றும்" என்று யாரோ கனவில் சொல்வதுபோன்ற வார்த்தைகளைக் கேட்டார். அவர் கனவில் கேட்டபடியே அடுத்த நாள் சரியாகப் பத்துமணிக்கு அவரது ஸ்தனத்தில் கட்டியொன்று தோற்றி, பெரிய வேதனையைக் கொடுத்தது. வேதனை மாத்திரமல்ல, குழந்தையினால் பாலும் குடிக்க முடியவில்லை. இதற்கு மேலும் அம்மையார் வீட்டில் தங்க விரும்பவில்லை. "நல்லூருக்கு வா" என்று யாரோ உள்ளத்திலே இருந்து சொல்லுவதுபோலக் கேட்டார். மாங்கல்யத்தைக் கழற்றிக் கணவனார் கையில் கொடுத்தார். குழந்தைகள் இருவரையும் ஒப்படைத்தார். தெய்வமாக விளங்கிய தமது கணவராகிய கதிரேசனாரைக் கடைசியாக வணங்கி விடையும் பெற்றுக்கொண்டார்.

நேராக நல்லூர் சென்றார். முருகப்பெருமானை மனமார வாயார வாழ்த்தி வணங்கினார். பிரிந்தவரைச் சேர்ந்தவர் போன்றதொரு உணர்வு எய்தினார். குருபூசை மடத்தில் ஆறுநாட்கள் தங்கி இருந்து அலகிடுதல், மெழுகுதல், நந்தவனத்திற்கு நீர்ப்பாய்ச்சுதல் போன்ற சரியைத் தொண்டுகளில் ஈடுபட்டிருந்தார். கட்டி ஒன்று தனது ஸ்தனத்தில் இருப்பதாகவே அவர் ஆறுநாட்களும் உணரவில்லை.

ஆறாவது நாள் கட்டி உடைந்தது. கட்டி இரவு உடைந்தது. அடுத்த நாள் பகலே மற்றைய அடியார்களுடன் சேர்ந்து கதிரைமலை புறப்பட்டார்.

கதிர்காமம் சென்றார். முருக தியானத்தில் முழுவதும் தன்னையே கரைத்துக்கொண்ட பாபால்குடிபாவைத் தரிசித்தார். பால்குடிபாபாவின் ஆசியும் கிடைத்தது. கடையில் குருநாதருடையவும் பால்குடிபாபாவினுடையவும் திருநோக்கம் பெற்றோருக்கு வேறும் வேண்டுமா? இருவரது ஆசியும் முருகப்பெருமானுடைய முழுக்கருணையும் பெற்ற அம்மையார் சாதனையிலே மிகவேகமாக முன்னேறினார். அருணகிரியாருக்கும், அகத்தியருக்கும் ஆறுமுகவனே குருவாக வந்து அமைந்ததுபோல அம்மையாருக்கும் முருகனே உள்நின்றுணர்த்தும் குருவானார். அம்மையாரின் கூந்தல் மிக நீளமாக வளர்ந்து சடையாக விளங்கியமையால் பக்தர்கள் சடையம்மா என்றே அழைத்தனர். அப்பெயரே பிற்காலத்தில் நிலைத்துவிட்டது.

கதிர்காமத்திலிருந்து நல்லூரை அடைந்தார். நான்கு நாட்கள் அங்கு தங்கியபின் இராமேசுவர யாத்திரையை மேற்கொண்டார். சேது தீர்த்தம் ஆடி தென்னாட்டு யாத்திரையை மேற்கொண்டார். அது முடிந்து நல்லூர் வந்து சேர்ந்தார். ஆண்டுதோறும் கதிர்காம யாத்திரை செய்துவந்தார். எங்குச் சென்றாலும் சரியைத் தொண்டே உயிர் நாடியாக விளங்கியது. ஏழாவது முறையாகக் கதிர்காம யாத்திரையை முடித்துக்கொண்ட பின் அடியார்கள் சடையையா, ஆறுமுகத்தம்பிரான், முத்தையாத் தொண்டர் ஆகியோருடன் வந்து நல்லூரை அடைந்து வடக்கு வீதியிலுள்ள மேல்மாடியில் சிவயோகத்தில் இருந்தார்கள்.

அம்மையார் அவர்கள் சிவயோகத்தில் இருக்கும் காலத்தில் சிவகுருபரனாகிய முருகப் பெருமான், பஞ்சப்பிரமமந்திர உண்மைகளையும் பஞ்சாட்சரத்தின் உண்மையையும், தேவிகா மந்திரங்களின் உட்பொருளையும், ஞானகாரணாகிய வேலவனைக் குறிக்கும் சடாட்சர மந்திரங்களையும், அவை மூன்றாகி, இரண்டாகி, ஒன்றாகிய உண்மையான சூக்கும பஞ்சாட்சரங்களையும், அவற்றின் உண்மையான ஞான பாதப் பொருளையும், உணர்ந்ததன்பின்பு, முத்தியைக் கொடுக்கும் யோகசமாதிகளிற் பழகியும், மற்ற மக்களுக்குச் செய்யும் நன்மைகளால் ஏற்படும் ஆன்ம சுகமும் கைவரப்பெற்று, முத்திநிலை அடைபவர்களுக்குள்ளனவாகிய உச்சி துடித்தல், ஊதல், நெற்றி சிவப்புறுதல், ஆகியவற்றை உள்நின்றுணர்த்தத் தாமே விளங்கிக் கொண்டார்.

இந்நிகழ்ச்சியின் பின் அம்மையார் முக்காலங்களையும் உணர்ந்த முழு ஞானநிலை எய்தினார். அம்மையார் தமது சீடர்களோடும் வட



நாட்டு யாத்திரை செய்து காசி முதல் கைலாயம் ஈறான பல தலங்களையும் தரிசித்து மீண்டார். யாத்திரை செய்து மீளும்போது தெலுங்கு நாட்டு அந்தணர் ஒருவரை ஆட்கொண்டு அருள் பாலித்தார். அம்மையார் சிவயோக சாதனை செய்துவரும் நாளில் முக்காலங்களிலும் அகோர மந்திர சாதனை செய்து வந்தமையினால் சிவாக்கினி மேற்சென்று செறிந்து மேனியைத் தகித்ததனால் மேனி சிவந்து காணப்பட்டார். இதனைத் தொண்டர்களும் மற்றுமுள்ளோரும் கண்டு வியப்படைந்தனர். சேதுமுதல் காசிஈறாகப் பன்னிரு திருமுறை யாத்திரை செய்துள்ளார்கள். முருகப் பெருமானுடைய உத்தரவுக்கிணங்க நல்லூரில் மடாலயம் ஒன்று அமைத்து அங்கு அன்னதானம் நடைபெற்று வந்தது. தமது சீடர்கள் புடைசூழ அம்மையார் பல இடங்களுக்கும் எழுந்தருளி அம்மையாருடைய அடியார்கள் உதவிய பண உதவி கொண்டு கதிர்காமத்திலும் ஒரு மடாலயம் அமைத்தார்கள்.

அம்மையாருடைய பூர்வாசிரமக் குழந்தைகளில் மூத்த குழந்தை ஐந்தாம் வயதிலும், இளைய குழந்தை மூன்றாம் வயதிலும் இறைவனடி சேர்ந்தன. கதிரேசரும் அம்மையாருடைய அடியவர்களில் ஒருவராகிச் சிவத்தொண்டுகள் புரிந்துவரலானார். சட்டநாதர் கோயில் நந்தவனம் ஆடுகளாலும் மாடுகளாலும் அழிவுறுவது கண்டு நந்தவனத்தைச் சுற்றி மதில் ஒன்று எடுப்பித்தார். அம்மையாருடைய திருப்பணிகள் யாவும் நிஷ்காம்ய கர்மமாகவே நடைபெற்றன.

அம்மையாரின் சமாதி 05-08-1936ஆம் ஆண்டு சுக்கிரவாரமும் அனுஷ நட்சத்திரமும் கூடிய குலச்சிறை நாயனாரின் குருபூசைத் தினத்திலே நிகழ்ந்தது. அத்தருணம் அடியார் கூட்டம் வேதகோஷங்களையும் திருமுறைகளையும் முழங்கியது. அம்மையாரின் சமாதி வைபவத்தை சிவயோக சுவாமியாராகிய யோகர் சுவாமிகள் முன்னின்று நடத்திவைத்தார்கள். இச்சமாதி கீரிமலையின் கிழக்குப் பாகத்தே சூரபன்மனைத் தடிந்த மயிலேறும் கதிரேசன் கோயில் பொருந்தவும் தெற்கே காத்தல் தொழில் பூண்டவரும், காயாம்பூ வண்ணரும் கன்றினால் விளவெறிந்தவருமாகிய நாராயணன் கோயில் பொருந்தவும், மேற்கே சிவசிவ என்ற மந்திரத்தை ஓதி முத்தி அடைந்த விஸ்வநாத சாமியார் சமாதி பொருந்தவும், வடக்கே கீரிமலைத் தீர்த்தத்தை விசேடமாக உடைய சமுத்திரம் பொருந்தவும் அமைந்துள்ளது.

## நாகநாதசித்தர்

"அறிவார்கள் ரிஷிகள்சித்தர் முனிவோ ரையா
அரகரா அதுக்குக்கோ ளாரென் றுக்கால்
பொறியாகப் புசுண்டமுனி சொல்வாரையா
போயழைக்கக் கோளற்று வசிஷ்ட ராகும்
நெறியாக இவ்வகைநா னறிவேனையா
நிலைத்தமொழி புசுண்டரால் மற்றோர் சொல்வா
புரிவாரு மிவ்வளவென் றுரைத்தார் மாயன்
பொருள்ஞானக் கடவுளப்போ மகிழ்ச்சி பூண்பார்."

—காகபுசுண்டர்

பதினென் சித்தர்களும் கூடியிருந்த சபையிலே பரமசிவனார் கேள்வி ஒன்றை எழுப்பினார்.

"வந்தவா றெவ்வகையே சென்ற தேதோ
கேளப்பா ஜெயகால லயந்தா னெங்கே
குருநம சிவாயமெங்கே? நீங்க ளெங்கே?
அறுத்தெனக்கு இன்னவகை யுரைசெய் வீரே!"

சிவபிரானது இக்கேள்வி எல்லாரையும் வாய்மூடி மௌனியாக்கி விட்டது: மார்க்கண்டேயர் எழுந்து, புசுண்ட முனிவர் சொல்வார் என மௌனத்தைக் கலைத்தார். அங்ஙனம் பதினென் சித்தர்களுக்குள்ளே புசுண்ட முனிவருக்குத் தனிப்பட்டதோர் செல்வாக்கும் பெருமையும் இருந்தது. அன்று மாத்திரம் இருக்கவில்லை இன்றும் அவர்கள் இருப்பதாகப் பல மான்களுடைய வரலாற்றினின்றும் அறியக் கிடக்கின்றது. குயீன்ஸ்பரி நவநாத சித்தரும், குயில்வத்தை நாக நாதசித்தரும் இதற்குச் சாட்சியாக விளங்குகின்றனர்.



கற்றனிலிருந்து கொழும்பு செல்லும் பிரதான வீதியில் சுமார் நான்குமைல் தூரத்தில் குயில்வத்தை என்றொரு இடமுண்டு. அது றோசல்லையைச் சேர்ந்தது. அக்குயில்வத்தையில் சிவாலயம் ஒன்று உண்டு. அது தெருவுக்கு அண்மையில் உள்ளது. மலைநாட்டிலுள்ள தோட்டப் பகுதிகளில் எல்லாம் ஸ்ரீ முத்துமாரியம்பாள் ஆலயமே நிறைய உண்டு. அதற்கடுத்தபடியாக முருகன் கோயிலைச் சொல்ல லாம். ஆனால் இந்த இடத்தில் மாத்திரம் ஏதோ ஒரு பூர்வீகத் தொடர்பு காரணமாகச் சிவாலயம் அமைந்துவிட்டது.

இந்தச் சிவாலயத்தில் மற்ற ஆலயங்களுக்கில்லாத ஒரு பெருஞ் சிறப்பு உண்டு. சாது ஒருவர் பூசகரா யமைந்துள்ளவரானபடியினால், வழிபடும் மக்களுக்கு மூன்றுவிதத்தில் நன்மைகள் ஏற்பட்டன. கோயில் வழிபாட்டிலேயே குரு வழிபாடும் சத்சங்கமும் கிடைத்தன. அத்தகைய சாது யாரென்றால் சுமார் பத்து ஆண்டுகளுக்கு முன் சமாதிநிலை எய்திய யோகி குமரகுருபர சுவாமிகள் ஆவார். இவருடைய குருநாதர்தான் மேலே குறிப்பிடப்பட்ட நாகநாதசித்தராவர்.

இவர் திருக்கோஷ்டியூரைச் சேர்ந்த வடகம்பட்டிக் கிராமத்தில் மீனாட்சி அம்பிகைக்கும் இராமகிருஷ்ணபிள்ளைக்கும் குழந்தையாகத் திருஅவதாரஞ் செய்தார். பாரத அன்னை ஈழத்தின் பொருட்செல் வத்தைப் பெருக்க மக்களை இலட்சக்கணக்கில் அனுப்பி வைத்தது போல அருட்செல்வத்தை வளர்க்கவும் சில மகான்களை அனுப்பி வைத்துள்ளாள். அங்ஙனம் வந்த மகான்களுள் நாகநாதசித்தரும் ஒருவராவர். ஹற்றனைச் சேர்ந்த கன்னியப் பூந்தோட்டத்திலே சில காலம் ஆசிரியத் தொழில் புரிந்து வந்தார். எண்ணும் எழுத்தும் கற்பித்து, குழந்தைகளின் இரு கண்களையும் திறந்துவைத்த நாக நாதருக்கு, தான் அகக்கண் குருடராக இருக்கலாமா? என்றொரு கேள்வி எழுந்தது. குருடன் குருடனுக்கு வழிகாட்டுவதெப்படி? ஆகவே முதலில் தனது அகக்கண் திறபடவேண்டும் என்று நினைந் தார். ஆசிரியத் தொழிலுக்கு ஒரு முழுக்குப் போட்டார். அமைதியான இடந்தேடி அலைந்தார். இன்று குயில்வத்தையில் சிவாலயமாக உருப் பெற்றிருக்கும் இடத்தில் சாந்தி நிலவக் கண்டார். அவ்விடத்தில் வந்து சாதனைகள் புரிந்தார். அயலிலுள்ள மக்கள் அவரை அன்புடன் ஆதரித்தனர்.

இந்தச் சந்தர்ப்பத்திலேதான் யோகி குமரகுருபர சுவாமிகள் நாகநாதசித்தருக்குச் சிஷ்யராக வந்து வாய்த்தார். சீடர் இளவய தினர். உலக விவகாரம் எதுவுமே அறியாதவர். தம்மை அப்படியே குருநாதரிடம் ஒப்புக் கொடுத்த பெருமைதான் அவருக்கு உண்டு. நான் அழிந்து தான் ஆகி நின்றார். அதாவது நான் அழிந்து நீ ஆக மாறி

விட்டது. குரு வேறு சீடன் வேறு அல்ல; இருவரும் ஒருவரே ஆயினர். குரு வேறு ஆண்டவன் வேறு அல்ல அதே போன்று ஆயினர் இருவரும். இப்பெருமை ஒன்றுதான் குமரகுருபரரை யோகி குமர குருபர சுவாமிகள் ஆக்கியது.

குயில்வத்தைச் சிவாலயம் 1910 ஆம் ஆண்டு கும்பாபிஷேகம் நடைபெற்றது. குருநாதராம் நவநாதசித்தரே உடனிருந்து நடத்தி வைத்தார்கள். கும்பாபிஷேகம் முடிந்ததும் குருவும் சீடனும் புவாக்பிட்டியா என்ற இடத்திற்கு ஒரு அன்பரைச் சந்திக்கக் கால்நடையாகச் சென்றனர். இவர்கள் குறிப்பிட்டுச் சென்ற அன்பர் இந்தியா சென்றுவிட்டதாக அறிந்தனர். திரும்பி வரும் வழியில் காட்டில் பாதை தவறிவிட்டது. இருவருக்கும் சிங்களமோ தெரியாது. ஒரு சிங்கள அன்பர் இவர்கள் கொழும்பு செல்கிறார்கள் என நினைத்து இருவரையும் கைச்சைகையினால் அழைத்துச் சென்று கோமாகம என்ற இடத்தில் விடுத்தார். அங்கிருந்து கொழும்பு சமீபமாக உள்ளது என்பதை அறிந்தனர். பக்கத்தில் உள்ள ஒரு புகையிரதஸ்தானத்திற்குச் சென்று இரண்டு உத்தரவுச் சீட்டுக்கள் கொழும்புக்கு வாங்கிக்கொண்டு புகையிரதம் ஏறக் காத்து நின்றனர். புகையிரதமும் வந்தது. சனக்கூட்டம் அதிகம். இருவராலும் ஏறிக்கொள்ள முடியவில்லை.

காக்கிச்சட்டை அணிந்த ஒருவர், ''சுவாமிகளே! இப்படி வாருங்கள்'' என அழைத்தார். அங்குச்சென்று பார்த்தனர். மறியல்காரர் நால்வர் கைவிலங்கு, கால்விலங்குகளுடன் இருந்தனர். கூப்பிட்டவரோ, உடனே கதவைத் திறந்துகொண்டு 'வாருங்கள்' என வரவேற்றார். சுவாமிகள் இருவரும் ஏறுவதற்குப் பின்னிட்டனர். இதைக் கண்ணுற்ற அதிகாரி, ''பயமில்லாமல் ஏறுங்கள்'' எனத் தைரியங்கூற இருவரும் ஏறி அமர்ந்தனர். எங்கு போகிறீர்கள்? என்று அதிகாரி கேட்டபோது கொழும்புக்கு என்று விடை இறுத்தனர். கொழும்புக்கு எவ்விடம் செல்கின்றீர்கள்? என்று கேட்டபோது அதற்கு மறுமொழி இருவருமே கூற முடியவில்லை. ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தனர். உடனே அந்த அதிகாரி இந்தியா செல்கின்றீர்களா? என்று கேட்டுத் தானே அவர்கள் இருவரையும் கொழும்பில் பக்குவமான இடத்தில் சேர்ப்பதாகவும் கூறினார். இருவருக்கும் எங்கு செல்வதென்றே தெரியாது. இருவரும் மௌனம் சாதித்தனர்.

அந்தக் காலத்தில் தூத்துக்குடிக் கப்பலில் செல்லும் பிரயாணிகள் மருதப்பிள்ளை என்பவரது தேனீர்க்கடையில் தங்கியே செல்வது வழக்கம். அந்த அதிகாரியும் இருவரையும் தேனீர்க்கடையில் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு நாளை திரும்பி வருவதாகச் சென்றுவிட்டார். இருவரிடமும் பணமோ இல்லை. தேனீர்க்கடையில் ஒரு மூலையில்



ஆந்தையைப்போல் விழித்துக்கொண்டிருந்தனர். அதிகாரி சாப்பாட்டுக் கடைக்காரரிடம் இரு சுவாமிகளையும் கவனித்துக்கொள் என்று சொன்னபடியினாலே அவர்கள் இவர்களைக் கவனித்து நேரத்திற்குச் சாப்பாடு ஆதியன கொடுத்து உதவினர்.

மறுநாள் அந்த அதிகாரி குறிப்பிட்ட நேரத்திற்கு வந்தார். அதே நேரத்தில் ஆஜானுபாகுவான தோற்றம் உள்ள பெரிய கங்காணி ஒருவர் வந்தார். சுவாமிகள் இந்தியாவுக்கா என்று கேட்டார். இவர்கள் ஒன்றுமே பேசவில்லை. உடனே தனது வேலையாளைக் கூப்பிட்டு தூத்துக்குடிக்கு இரண்டு உத்தரவுச்சீட்டு வாங்கிக்கொண்டுவா என்று உத்தரவு போட்டார். உடனே அவன் சென்று இரண்டு உத்தரவுச் சீட்டுக்களுடன் வந்தான். சுவாமிகள் இருவரிடமும் சீட்டுக்கள் சமர்ப்பிக்கப்பட்டன. அந்த அதிகாரி இருவரையும் கப்பலில் ஏற்றி அனுப்பி வைத்தார்.

கையில் செம்புச்சல்லிகூட இல்லாமல் எங்கே போகிறோம்? என்ற நினைவே இல்லாமல் இருவரும் மிக அமைதியாகச் சென்றனர். இப்படிப்பட்ட யாத்திரைதான் பரிவ்ராஜக யாத்திரை என்று சொல்லப்படும். சந்நியாசம் பெறுவதற்கு முன்பு இப்படிப்பட்ட யாத்திரை செய்தே சந்நியாசம் பெறுவது வழக்கம்.

இருவரும் முதன்முதலில் திருப்பரங்குன்றம் சென்றனர். கோயில் முன்னிலையில் கோவண உடையுடனும் கையில் தகரக் கொத்துடனும் தோற்றமளித்த ஒரு சாது மக்களே வாருங்கள்! வாருங்கள்!! என்று வரவேற்றார். இருவரையும் அழைத்துச்சென்று சுவாமி தரிசனம் செய்வித்தார். அங்குள்ள ஒரு பிராமணக் குடும்பம் இவ்விருவரையும் மதிய போசனத்திற்கு அழைத்தது.

வெகு நாட்களாக அப்பகுதியில் மழையே இல்லை; சரவணப் பொய்கையே வரண்டுவிட்டது. மக்கள் தண்ணீருக்காகக் கஷ்டப்பட்டனர். அவ்வூரிலுள்ள மேற்குறிப்பிட்ட பிராமணக் குடும்பம் ஒரு நேர்த்திக்கடன் வைத்தார்கள். நாற்பது அடியார்களுக்கு அன்னம் இடுவதாகவும் உடனே மழை பெய்யவேண்டும் என்பதும்தான் அந்த நேர்த்திக்கடனாகும். இவர்கள் இரு அடியார்களையுந் தவிர மற்றைய எல்லா அடியார்களும் அந்த ஊரவர்களாகும். உணவு எல்லாருக்கும் பரிமாறப்படுகின்றது. முருக நாமம் முழங்கியவண்ணம் இருக்கின்றது. அடியார்கள் யாவரும் பக்திபரவசராய் நாமபஜனையில் ஈடுபட்டுள்ளனர்.

திடீரென ஒரு அரோகராச் சத்தம் கேட்டது. ஒரே நிசப்தம். அவ்வீட்டு அந்தணர், இரு புதிய சாதுக்களையும் பார்த்து ஒரு வேண்

டுதல் வேண்டுகின்றார். "சுவாமிகளே! நீங்கள் இருவருந்தான் இந்த அடியார் கூட்டத்தில் புதியவர்கள். உங்கள் இருவரையுந் தவிர மற்றையவர்கள் எல்லோருக்கும் இந்த அன்னதானத்தின் நோக்கம் தெரியும். மழை பெய்யுமா? என்பதற்கு ஒரு உறுதி கூறியே அடியவர்கள் உண்ணவேண்டும்" என்பதுதான் அவருடைய வேண்டுகோளாகும். உடனே நாகநாதர், இறைவன் திருவுளம் அதுவானால் அவனிச்சைப் படியே நடக்கும் என்றார். அரோகரா கோஷம் எழுந்தது. அடியார்கள் உண்ணத் தொடங்கினர். வானம் இருண்டது; மின்னியது; முழங்கியது. மழை சோனாவாரியாகப் பொழிந்தது. சாப்பிட்ட அடியார்கள் மழையில் நனைந்துகொண்டேதான் தமது இருப்பிடஞ் சேர்ந்தனர். சரவணப்பொய்கை தாமரைப்பொய்கையாக மாறிவிட்டது. இவ்விரு சாதுக்களின் மகிமையையும் அறிந்தனர் அவ்வூர் மக்கள். இருவருக்கும் வேண்டிய சௌகரியம் செய்து, இருவரும் சில நாட்களுக்காவது அவ்வூரில் வசிக்கவேண்டும் என்பதற்காக இரகசியமான காவலும் வைத்தனர்.

பதினெண் சித்தர்கள் அடங்கிய இடந்தான் சிக்கந்தர்மலை. அம்மலையைத் தரிசிக்க இரு சாதுக்களும் சென்றனர். அங்குள்ள கோயிலில் கதிர்காமம் சுவாமிகளுக்குப் பட்டைச்சாதம் இரண்டு என்று புத்தகத்தில் எழுதப்பட்டிருந்ததைக் கண்டு ஆச்சரியம் உற்றனர் இருவருக்கும் அங்கிருக்கும்வரை ஒழுங்காக உணவு கிடைத்துவந்தது. காலையார் கோயில் தாசில்தார் நாகநாத சுவாமிகளைக் கூர்ந்து கவனித்தார். சாதுக்களே நீங்கள் உள்ளது உள்ளபடியே பேசவேண்டும். பொய் பேசக்கூடாது. நீர் இராமகிருஷ்ணபிள்ளையினுடைய மகன் அல்லவா? நாகநாதர் ஆம் என்றார். தாசில்தாருக்கு ஆனந்தம் சொல்ல முடியாது. உமது தந்தையார் காலமாகிவிட்டார், தாயார் உம்மைப் பார்ப்பதற்காக மிக ஆசைப்படுகின்றார். உமது ஏக்கமாகவே வாழ்கின்றார். ஆதலால் நீர் உடனே சென்று தாயாரைப் பார்க்கவேண்டும் என்று சட்டம் போட்டுவிட்டார் தாசில்தார்.

நாகநாதருக்கும் தாய்ப்பாசம் இருந்தது. நேராக வடகம்பட்டி சென்று தாயாரைப் பணிந்தார். தாயும் மகனைக் கட்டித்தழுவி ஆனந்த பாஷ்பம் சொரிந்தாள். நாகநாதர் வருகையால் வடகம்பட்டியில் மழை பொழிந்தது. நீண்ட நாட்கள் வானத்தையே பார்த்திருந்த மக்களுக்குப் பேரானந்தம் பொங்கியது. தாயாரின் ஆசியுடன் இருவரும் கும்பகோணம் சென்றனர். கும்பகோணத்தில் அம்மைநோய் கண்டிருந்தது. அங்கு தினமும் 25, 30 பேர் அம்மை நோயால் இறந்தனர். இவர்கள் இருவரும் இரவு 9–00 மணி அளவில் அங்கு சென்றனர். ஆதலால் எதையும் அறியார். ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்தனர். அவ்வீட்டில் இருந்து அம்மையால் இறந்த ஒருவரை



அப்போதான் ஈமக்கிரியைக்காகக் கொண்டு சென்றனர் இருவர். இவர்களுக்கு அதுவும் தெரியாது. அவர்கள் இருவரும் வந்தபின் சாதுக்களுக்கு ஊரின் நிலைபரத்தைக் கூறினர். அதோடு இதைத் தடுப்பதற்கு மார்க்கமுங் கேட்டனர்.

உடனே நாகநாதர் அத்தெருவிலுள்ள அனைவரையும் வீட்டுக்கொருவராக அழைப்பித்து எல்லாரும் இப்பொழுதே உங்கள் உங்கள் வீடுகளுக்குச் சென்று சாணியால் வீடுவாசல்கள் எல்லாம் மெழுகி மஞ்சள் தெளித்து வேப்பிலை வீட்டின் முன்னாலே தொங்கவிட்டு இரா முழுவதும் ஒவ்வொருவர் வீட்டிலும் மாவிளக்கேற்றித் தேவியை வழிபாடு செய்யுங்கள் என்று சொன்னார். அம்மக்களும் பூரண நம்பிக்கையோடு அவ்வண்ணமே செய்தனர். அடுத்தநாள் விடிந்து பார்க்கும்போது ஊர் பொலிவுற்று விளங்கியது அன்று தொடக்கம் எவராவது அம்மையால் பீடிக்கப்படவில்லை. அவ்வூர் மக்கள் இவ்விருவரையும் ஆண்டவனால் அனுப்பப்பட்ட திருத்தூதர் எனவே மதித்தனர். ஒவ்வோர் நாளைக்கு ஒவ்வோர் வீட்டில் சாதுக்கள் இருவரையும் அழைத்து உபசரணை மிகநல்ல முறையில் செய்தனர்.

பொருள் ஒன்றுமே இல்லாத இரு சாதுக்களுக்கும் இங்கேதான் காவி உடையும், தண்டும், கமண்டலமும், இன்னும் சில பொருட்களுங் கிடைத்தன இதுவும் இறைவன் திருவுளம் என்று அதனைப் பெற்றுக்கொண்டனர். சிதம்பர தரிசனம் செய்த பின்பு திருஅண்ணாமலை சென்று அடைந்தனர். அவர்கள் அங்கு போகும்போது இரவு அகால நேரமாகி விட்டது. இருவரும் சாதுக்கள் சத்திரத்தில் தங்கினர். அதிகாலையில் எழுந்து மற்றைய அடியார்களுடன் இருவரும் கிரிப்பிரதட்சணம் செய்தனர். கிரிப்பிரதட்சணம் எட்டுமைல் தூரத்தையும் இருவரும் கூப்பிய கை எடுக்காமலே அண்ணாமலையானது நினைவோடு சென்றனர். சுவாமி தரிசனம் ஆனபின் இருவரும் கோயிலின் வாசலுக்கு வந்தனர்.

அவ்விடத்தில் ஒரு சாது சுவாமி தரிசனம் எல்லாம் ஆய்விட்டதா? என்று இவர்களிடம் வினவினார். இவர்கள் ஆம் என்பதற்கடையாளமாகத் தலை அசைத்தனர். அண்ணாமலை யாத்திரை பரிபூரணம் அடைய வேண்டுமானால் இங்கிருக்கும் ஒரு சாதுவையும் நீங்கள் தரிசித்தாக வேண்டும். அவரைத் தரிசிக்காமல் சென்றால் நீங்கள் அண்ணாமலை வந்தும் பிரயோசனம் இல்லை என்று கூறினார் சாது.

அந்தச் சாது கூறிய குறிப்பின்படியே இருவரும் திருவண்ணாமலையிலுள்ள குகையை நோக்கி நடந்தனர். எதிரே ஒருவர் கௌபீன உடையுடன் வந்துகொண்டிருந்தார். அவர்கள் இருவரையும் பார்த்து பிராமணச் சுவாமிகளைப் பார்க்கச் செல்கின்றீர்களா? என்று வினவினார்.

இவர்கள் ஆம் என்பதற்கு அடையாளமாகத் தலை அசைத்தனர். உடனே அவரே இருவரையும் அழைத்துச் சென்று பிராமண சுவாமி இருந்த குகையைக் காட்டினார். பிராமண சுவாமியின் தரிசனமும் கிடைத்தது. இருவரும் நிலந்தோய விழுந்து வணங்கினர். பிராமண சுவாமி இவர்களை ஒருமுறை ஏறஇறங்க நோக்கினார். பிராமண சுவாமிகளின் காந்தக்கண்கள் இருவரையும் கவர்வது போலுணர்ந்தனர்.

''முத்தையா உன்னை அங்கு வந்து காணலாம் என்றிருந்தேனே நீ இங்கு வந்துவிட்டாயோ''? என்று பிராமண சுவாமிகள் கூறினார்கள் அதற்குப் பதிலாக நாகநாதரும்,

''அண்ணாமலையானைக் கண்டு தொழவல்லோ நாமும் வந்தோம்'' என்று கூறினர். இருவரும் அங்கிருந்து பிரியாமல் பிரிந்தனர். அந்தப் பிராமண சாமிதான் பிற்காலத்தில் ரமண மகரிஷி என்னும் பெயரால் அழைக்கப்பட்ட மகானாவார்.

தென்னிந்திய யாத்திரை முடித்துக்கொண்டு இருவரும் மறுபடியும் இலங்கைக்கே திரும்பினர். குயில்வத்தை சிவாலயத்தில் ஒன்றரை வருஷகாலம் தங்கி அங்கு வருவோருக்கெல்லாம் அருளுபதேசங்கள் புரிந்தார்கள். சிவாலயத்தின் முன்றிலுள்ள கல்லின்மீது சுவாமிகள் இருந்து பார்க்கும்போது கீழே புதியமண் தென்பட்டது. அவ்விடம் காட்டுக் கொடிகளினாலும் செடிகளினாலும் மறைக்கப்பட்டிருந்தது. இங்கு ஏதோ விசேடம் இருக்கவேண்டும். இது என்ன என்று பார்ப்பாயாக என்றனர். அங்கு ஒரு குகை இருப்பதாகக் கண்டனர். கோயிலின் முன்றலில் இன்றும் அக்குகை இருப்பதைக் காணலாம்.

இக்குகையிலே நாகநாதர் பல நாட்கள் மோனத்தவம் புரிந்தார்கள். பல காட்சிகள் அவருக்குக் கிடைத்தன. இந்தியாவில் உள்ள ஒரு மலைப்பகுதியில் ஒரு மகான் நாகநாதரை அழைப்பது போன்றதொரு காட்சி தியானத்தில் தெரிந்தது. அன்றே மறுபடியும் இருவரும் இந்தியா புறப்பட்டனர். தமக்குத் தியானத்தில் கிடைத்த காட்சி எவ்விடமுள்ளதோ என்ற நினைவுடன் சென்றார். நாகநாதருடைய தமையனார் தற்செயலாகச் சந்தித்தார். புஜண்டகிரிமலை பக்கத்திலே இருப்பதாகவும் அதன் பெருமை மிகவும் பெரிது என்றும் சொன்னார்கள். மேலூரைச் சேர்ந்த நரசிங்கம்பட்டியில் உள்ள மலையே புஜண்டகிரியாகும். அம்மலையில் பல சித்தர்கள் வாழ்ந்த குகை ஒன்று உளது. அக்குகையிலேதான் காகபுஜண்டர் வெகுநாள் வாழ்ந்ததாக ஐதிகம். அதனால்தான் அதற்குப் புஜண்டகிரி என்று பெயர் வந்ததாகவும் கூறுகின்றார்கள்.



நாகநாதருக்குக் காட்சியிலே தென்பட்ட குகையும் மலைக்காட்சியும் இந்த புஜண்டகிரியேதான். சில நாட்கள் அங்கு தங்கித் தவத்தை மேற்கொண்டிருந்தார்கள். இக்குகையிலேதான் அவருக்குத் தவசித்தி ஏற்பட்டது.

மறுபடியும் இலங்கை வந்து தமது உத்தம சீடராகிய யோகி குமரகுரு சுவாமிகளைக் குயில்வத்தை சிவாலயத்தில் இருக்க வைத்துத் தனியாக இந்தியா சென்று 1946ஆம் ஆண்டு வைகாசி உத்தர நட்சத்திரத்திலே சமாதி நிலை எய்தினர்.

குமரகுரு சுவாமிகள் தமது குருநாதனுடைய தியானமாக இருந்து கொண்டே நாள் முழுவதும் பூமாலை தொடுப்பார்கள். அன்பர்களைக் கண்டவுடன் அகமும் முகமும் மலர வரவேற்பார்கள். சுவாமிகளுடைய உள்ளம் குழந்தையின் உள்ளமாகவே மாறியிருந்ததை அவரது முகமே காட்டிற்று. போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாருக்கும் தமது குருநாதன் பெருமையையே இயம்பிக் கொண்டிருப்பார்கள். குருநாதனுடைய பெயரைக் கூறும்போதெல்லாம் கண்ணீர் துளிக்கும்; நாத் தழுதழுக்கும்.

சுவாமிகள் பூஜை செய்யும்போது அப்பூஜையிலேயே ஒன்றிவிடுவார்கள். தாம் வேறு, மூர்த்தி வேறு; என்ற நிலையில்லாமல் பூஜை செய்பவரும் பூஜை செய்யப்படுபவரும் பூஜையும் ஒன்றிவிடும் தன்மையைக் காணும்போது இராமகிருஷ்ணபரமகம்ச தேவர் பூஜை செய்த காட்சிதான் நமது மனத்தில் தோற்றும். யார் எதைச் சொன்னாலும் கேட்டாலும் ஆகட்டும்: நல்லதும் என்ற வார்த்தைகளையே சொல்வார்கள். எவராலும் அறியமுடியாத ஞானியாக விளங்கிய அவர் வஞ்சகம் ஏதும் அறியாத குழந்தையைப்போலவே விளங்கினர்.

# நயினாதீவுச் சுவாமிகள்

1945ஆம் 46ஆம் ஆண்டாக இருக்கலாம் என்ற நினைவு. அன்பர் பொன். கிருஷ்ணபிள்ளை அவர்களைச் சந்திப்பதற்காகக் கோப்பாய் அரசினர் பயிற்சிக் கல்லூரிக்குச் சென்றிருந்தேன். அங்கு மாணவர்கள் வரிசையாக உள்ளே சென்று வேறோர் வாசலால் வெளியேறுவதைக் கண்டேன். பண்டிதர் கிருஷ்ணபிள்ளை அவர்களும் மரநிழலில் நின்றார்கள். அவரைத் தேடிச் சென்றவன் ஆனபடியினால் கண்டதும், "கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததுபோல" என்று சொல்வார்களே, அது என்னளவில் இன்று பலித்துவிட்டது என்றேன். உங்களைத் தேடி வியாபாரிமூலைக்குத்தான் செல்ல இருந்தேன். என்னையும் அறியாமல் கால்கள் இங்கே இழுத்துவந்து விட்டன என்றேன்.

கால்கள் இங்கு இழுத்து வந்துவிட முடியாது. நயினாதீவுச் சுவாமியார்தான் இழுத்து வந்திருக்கவேண்டும் என்றார்கள். அதன் பின்புதான் மாணவர்கள் வரிசையாக ஒரு வாசல் புகுந்து இன்னொரு வாசலால் வெளியேறிய காரணம் புலப்பட்டது. அப்பொழுது அதிபராக இருந்த திரு. சண்முகரத்தினம் அவர்கள் குடும்பத்தினருடன் நயினாதீவு நாகபூஷணி அம்பாளைத் தரிசிக்கச் சென்றிருந்தார்கள். அவரோ அடியார் பக்தி, தெய்வ பக்தியிற் சிறந்தவர். நயினாதீவுச் சுவாமிகள் தேர்முட்டியடியில் தனிமையாக இருப்பதைப் பார்த்து அவரைநாடித் தனியாகவே சென்று தரிசித்தார்கள். நிமிர்ந்து முகத்தைப் பார்த்த சுவாமிகள் கையசைத்து இருக்குமாறு பணித்தார்கள். ஒரு மணித்தியாலம்வரை கழிந்து விட்டது. அதிபர் அவர்கள் சுவாமிகளுடைய சந்நிதியில் தியான இன்பம் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். உடன் வந்தவர்கள் "தோணி புறப்படப்போகிறது வாருங்கள்". என்று துரிதப்படுத்தினார்கள்.



உணர்வுபெற்ற அதிபர் அவர்கள் தான் செல்வதற்கு விடை தருமாறு வேண்டி எழுந்தார்கள். சுவாமிகள், "அவசரம் வேண்டாம்; அரை மணித்தியாலம் கழித்துச் செல்லலாம்" என்றார்கள். சரியாக அரை மணித்தியாலம் கழிந்தது. அதிபருடைய உறவின் முறையினர் ஒருவர் இறந்துவிட்டதாக வந்த தந்திதான் அது. அவர் அப்பொழுதே சென்றிருந்தால் இத்தந்தியைப் பெற்றிருக்க முடியாது. மரணச் சடங்கில் கலந்திருக்க முடியாது. அதிபர் அவர்கள் முகமெல்லாம் கண்ணீர் வார விடைபெற்றார்கள். சுவாமிகள் தமது இல்லத்திற்கு வந்து தமதில்லத்தைப் புனிதப்படுத்துமாறு அழைத்தார்கள். சுவாமிகளும் கையசைத்துப் போகுமாறும் தாம் வருவதாகவும் கூறினார்கள். சுவாமிகள் குறிப்பிட்ட பிரகாரம் இன்று வந்துள்ளார்கள். மாணவர் ஒவ்வொருவரும் வீழ்ந்து வணங்கிச் சுவாமிகளுடைய ஆசீர்வாதம் பெற வேண்டும் என்ற ஆசையினால் மாணவர்களுடைய வணக்கம் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. நாமும் இவர்கள் பின்னே போனால் நமக்கும் தரிசனம் கிடைக்கும் என்று கூறிய பண்டிதர் அடியேனையும் அழைத்துச் சென்றார்.

இருவரும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து எழுந்து நின்றோம். எமதிருவர் நெற்றியிலும் விபூதியைப் பூசிய சுவாமிகள் "எல்லாங் கைகூடும்" என்று கூறி இருக்குமாறு பணித்தார்கள். சுவாமி சந்நிதியில் கண் மூடித் தியானத்தில் இருந்தோம். அன்றுதான் அடியேன் தியான சுகத்தை உணர்ந்தேன். அதிபர் அவர்களுக்கும் பண்டிதர் அடியேனை அறிமுகம் செய்து வைத்தார்கள். கொழும்பு இராமச்சந்திரரைத் தெரியுமா? என்று சுவாமிகள் கேட்டார்கள். "ஆம்" என்று பதில் அளித்தேன். "அவர் ஒரு நல்வழிகாட்டி" என்று சுவாமிகள் கூறினார்கள். நாங்கள் இருவரும் விடைபெற்றுக்கொண்டு வெளியே வந்தோம். வெளியே வந்ததும், அன்பர் கிருஷ்ணபிள்ளை அவர்கள், சுவாமிகள் "எல்லாங் கைகூடும்" என்று கூறினார்களே என்ன நினைத்து வந்தீர்கள்? என்று கேட்டார். எனக்கு ரமண பகவானுடைய தரிசனம் எப்போ கிடைக்கும்? என்பதுதான் அடியேனுடைய உள்ளத்தில் இருந்த வேண்டுதல் என்று கூறினேன்.

அந்த ஆண்டு கம்பளையில் நடைபெற்ற பகவான் ரமண மகரிஷியினுடைய ஜயந்தி விழாவிற்கு இராமச்சந்திரனார் அவர்களும் வந்திருந்தார்கள். அடியேனும் பங்குபற்றச் சென்றிருந்தேன். திரு. இராமச்சந்திரனார் அவர்கள் தமது உரையில், "கடையிற் சுவாமிகள், குழந்தைவேற் சுவாமிகள், அருளம்பல சுவாமிகள் மூவரும் பெரும்பாலுஞ் சஞ்சாரஞ் செய்த இடமும், தொடர்பாக நெடுநாட்களுக்குத் தங்கியிருந்த இடமும் வண்ணார்பண்ணையாகும். அப்பிரதேசத்திற் சிவன் கோயிலடியிலிருந்து வெலிக்கப்புளியடி வரையுமுள்ள பகுதியிற்

சைவ வாழ்வுக்கான நற்பண்புகள் இன்றும் திகழக் காண்கின்றோம். நாவலர் பள்ளிக்கூடம், இந்துக் கல்லூரி, நாவலர் மணிமண்டபம், சிவதொண்டன் நிலையம் என்ற சிறந்த சைவ ஸ்தாபனங்கள் நான்கும் அப்பகுதியிலேயே உள்ளன.''

இப்பேச்சைக் கேட்டதும் இந்த இடங்களைப் பார்க்க வேண்டும் என்றொரு தாகம் ஏற்பட்டது. ஒருநாள், அப்புக்கமாகச் செல்லும் போது சுவாமிகள் யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரிக் கண்மையிலுள்ள சிவலிங்கப்புளியடி என்னுமிடத்தில், முன்னாள் கல்விப்பகுதியில் வேலை பார்த்த அன்பர் திரு. எஸ். சிவசுப்பிரமணியம் அவர்கள் இல்லத்தில் வந்திருக்கிறார்கள் என்பதைக் கேள்விப்பட்டேன். அங்கு சென்று இரண்டாம் முறையும் சுவாமிகளைத் தரிசிக்கும் வாய்ப்புக் கிடைத்தது. யோகர் சுவாமிகளுடைய தரிசனமும் பலமுறை அந்த எல்லைக்குள்ளே தான் அடியேனுக்குக் கிடைத்ததைச் சிந்திக்கும்போது அப்பகுதி, அடியார்களுடைய பாததூளி பட்டுப் பரிசுத்தமான சிவயோக பூமி என்றே சொல்லத் தோன்றுகின்றது.

உலகெங்கணும் உள்ள சக்தி பீடங்கள் அறுபத்து நான்கில் நயினை தீவு நாகபூஷணி ஆலயமும் ஒன்றாகும். இலக்கியங்களில் வரும் மணி பல்லவம் என்பதும் இதுவே. மணிமேகலையும் மணிமேகலா தெய்வமும் வரப்பெற்ற இடமாகும். நயினைதீவு முற்காலத்தில் சிறந்ததோர் துறைமுகமாகவும் விளங்கியது. மணித்தீவு, மணிநாக தீவு, நாகதீபம் என்ற பெயர்களும் இத்தீவிற்கு உண்டு. பாரத நாட்டிலிருந்து வருவோர் அம்பிகையைத் தரிசிக்கத் தவறுவதில்லை.

நான்கேநான்கு மைல் சுற்றளவுள்ள இத்தீவில் பெரும் பகுதியோர் சைவ வேளாண் மரபைச் சார்ந்தவர்களாகும். இம்மரபில் ஆறுமுகம் என்னும் பெரியார் ஒருவர் வாழ்ந்தார். அவருக்கு ஒரு மகன். அம் மகனுக்கு முத்துக்குமாரசாமி என்று நாமகரணம் சூட்டினர். பெற்றோர் இந்த முத்துக்குமாரசாமியே பிற்காலத்தில் நயினைதிவுச் சாமியார் என்று அழைக்கப்பட்டார்.

உரிய காலத்தில் ஆரம்பக்கல்வி பெற்றார். அக்கால இளைஞர்களில் பெரும்பாலோர் ஆரம்பக்கல்வி முடிந்ததும் முடியாததுமாக யாழ்ப்பாண நகருக்கோ கொழும்புக்கோ அன்றி கண்டி போன்ற பட்டினங்களுக்கோ சென்றுவிடுதல் வழக்கமாக இருந்தது. முத்துக் குமாரசாமி ஆரம்பக்கல்வி முடிந்ததும் கொழும்புக்குச் சென்று ஒரு வர்த்தக நிலையத்தில் வேலைக்கு அமர்ந்தார். முத்துக்குமாரசாமி வர்த்தக நிலையத்தில் சிப்பந்தியாக வேலை பார்த்தாலும் மனம் இறை பணியையே நாடி நின்றது. ஒருநாள் வர்த்தக நிலைய அதிபர் இவரை ஏசிவிட்டார். அந்த வன்சொல்லை அவரால் பொறுக்க முடியவில்லை;



ரமண பகவானுக்குப் பதினாறு வயதாயிருக்கும்போது இவரது தமையனார் இவர் ஒழுங்காகப் படிப்பதில்லை என்பதை மனதிற் கொண்டு இப்படிப்பட்டவனுக்கு இந்த என்ன வேலை? என்று ஏசினார். இந்த ஏச்சு மனதில் தைக்க, ''இது நல்ல விஷயத்தை நாடிச் செல்கிறது. இதை யாரும் தேடவேண்டாம்'' என்று ஒரு கடிதத்தில் எழுதி வைத்துவிட்டுத் திருவண்ணாமலைக்குச் சென்றுவிட்டார். இவருடைய துறவுக்கு இவரது தமையனாரே காரணம் ஆனார்.

இச்செய்தி போன்றுதான் முத்துச்சாமியும் ஒரு சீட்டுக்கவி மாத்திரம் எழுதிவைத்துவிட்டு யாருக்கும் சொல்லாமல்கொள்ளாமல் கடையை விட்டுச் சென்றுவிட்டார். கவி ஒரு விரசமான கவிதான். ஆனால் அந்த நேரத்து மன உணர்வை அக்கவி படம் பிடித்துக் காட்டுகின்றது. பல இடங்களிலும் தேடினார்கள். ஊரிலும் தேடினார்கள். முத்துக்குமாரசாமி சென்ற இடத்தை யாரும் அறியார். துறவுக்கேற்ற பக்குவநிலை ஏற்படும்போது சிறு சம்பவங்கள் கூடத் துறவுக்குக் காரணமாக அமைந்து விடுகின்றன.

அக்காலத்தில் இந்தியாவுக்குச் சென்று வருவதில் எந்தவிதக் கஷ்டமும் இருக்கவில்லை. வீட்டிலே யாருடனாவது கோபித்துக்கொண்டால் காசிக்கோ, சிதம்பரத்திற்கோ சென்றுவிடுவதாகச் சொல்லி உடனே சென்று விடுவார்கள். அங்கெல்லாம் சுற்றி அலைந்துவிட்டுத் திரும்பி வருவோரும் இண்டு. காவிதாங்கிச் சந்நியாசியானவர்களும் உண்டு. முத்துக்குமாரசாமியாருடைய உள்ளம் இறைவனை நாடி இருந்தமையால் தலயாத்திரையை மேற்கொண்டார்.

> ''மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
> வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''

என்ற தாயுமானாரின் வாக்குப்படி இவரது யாத்திரை வீண்போக வில்லை. இவரிடத்து விளங்கிய தெய்வபக்தி, ஞானம், தூய்மை, மன அடக்கம், இன்சொல், அருளோடு கூடிய நோக்கு, எந்த நேரமுஞ் சிவசிந்தனை ஆகிய குணங்கள் இவரைத் தகுந்த ஒரு குருவிடம் கொண்டு சென்று சேர்த்தன. அவரோடு பல ஆண்டுகள் தங்கிக் குரு உபதேசமும், சந்நியாசமும் பெற்றுக்கொண்டார். இவரது பக்குவ நிலை அறிந்த குருநாதர் நீ உனது ஊருக்குச் செல்லலாம் என்று உத்தரவு கொடுத்தார். குருநாதரைப் பிரிய மனமின்றிப் பிரிந்து ஊர் நோக்கி வந்தார்.

பல ஆண்டுகளுக்குப் பின் நீண்ட சடாமுடியுடன் காவி உடை தரித்த சுவாமியார் ஒருவர் நயினைதீவில் உலாவுவதை நயினைதீவு மக்கள் பார்த்தனர். எங்களுடைய ஆறுமுகத்தாரின் மகன் முத்துக்குமார

சாமியைப்போல அல்லவா தோற்றம் இருக்கிறது என்று சிலர் தமக்குள்ளே பேசிக்கொண்டனர். வேறு சிலர் அதற்கு மறுப்புத் தெரிவித்தனர். முத்துக்குமாரசுவாமி இருக்கும் இடமோ போன இடமோ யாருக்கும் தெரியாது. அவர் உயிரோடு இருக்கிறார் என்பதே சந்தேகம் என்றனர். மிக நெருங்கிய உறவினர் முத்துக்குமாரசாமியிடம் நெருங்கிப் பழகி அவர் தமது முத்துக்குமாரசாமி தான் என்று தெளிந்துகொண்டனர். உற்றார் உறவினர் அவரை அணுகித் தமது இல்லத்திற்கு வருமாறு அழைத்தனர். அவர் யாருடைய இல்லத்திற்கும் செல்வதற்கு மறுத்துவிட்டார். நாளொரு கோயிலில் சென்று தங்கி வந்தார். கோயில் மண்டபங்களையே தமது வசிப்பிடமாகக் கொண்டார்.

அவ்வூரவர்களுக்கு ஆறுமுகத்தின் மகன் முத்துக்குமாரசாமியைத்தான் தெரியுமே தவிர, இப்போ வந்திருப்பவர் எந்த நிலையில் உயர்ந்து வந்துள்ளார் என்பதை அறிந்துகொள்ள அவர்களால் முடியவில்லை. முத்துக்குமாரசாமிக்குப் பயித்தியம் பிடித்து அலைகிறான் என்றனர். சாமியாராய்ப் போய்விட்டான் என்றனர் வேறு சிலர். இந்த வயதிலே இவனுக்கென்ன சாமி வேடம் என்றனர் வேறு சிலர். நல்லதொரு கலியாணம் செய்து வைத்துவிட்டால் இந்தச் சாமிப் பயித்தியம் எல்லாம் போய்விடும் என்றனர் இன்னுஞ் சிலர்.

கோயில் மண்டபங்களிலே படுத்துறங்கித் தானும் தன்பாடுமாய்த் திரிந்த சுவாமியார் என்ன சாப்பிடுகின்றார்? எங்கே சாப்பிடுகின்றார்? என்பதை யாரும் அறியார். தங்கள் இல்லத்திற்கு வரவழைத்த உற்றார் உறவினரே அவர் இருக்குமிடந் தேடிச்சென்று உணவு கொடுத்திருக்கலாம் அல்லவா? அவர்களுக்கே அவ்வளவு சிந்தனை ஓடவில்லை. மற்றவர்களைப்பற்றிக் கூறுவான் ஏன்?

நயினாதீவைப் பிறப்பிடமாகக் கொண்டவர் இல்லற ஞானியாகிய இராமச்சந்திரா அவர்கள் அவரது வாழ்க்கை பெரும்பான்மையும் கொழும்பை மையமாக வைத்தே அமைந்தது. தாயாரின் மரணச் சடங்கை முன்னிட்டு நயினாதீவுக்கு வந்த இராமச்சந்திரனார் தமது மைத்துனர் ஒருவர் மூலம் நயினாதீவுக்கு வந்திருக்கும் முத்துக்குமாரசாமியைப்பற்றிக் கேள்வியுற்றார். கேள்வியுற்ற உடனேயே அவரைத் தரிசிக்க வேண்டும் என்ற தாகமும் ஏற்பட்டுவிட்டது. அன்றிரவே அதிகாலையில் செல்வதாக இருவரும் தீர்மானித்துக்கொண்டனர். இருவரும் அக்கமும் பக்கமுமாகப் படுத்துக்கொண்டனர்.

அதிகாலையில் நான்கு மணிக்கு இருவரும் எழுந்து பிள்ளையார் கோயிலை நோக்கிச் சுவாமியாரிடம் செல்வதாகவும் அங்கு இல்லையேல் திரும்பி விடுவதாகவும் கூறிக்கொண்டனர். போகும் வழியில்



முருகன் கோயில் கிணற்றுக்குச் சென்று கை கால் முகம் கழுவிக்கொண்டனர். பலபல என்று விடியும் நேரம். முருகப்பெருமானைத் தரிசித்துவிட்டுத் திரும்பினார்கள். நால்வரையும் ஆட்கொள்ளவந்த தட்சணாமூர்த்தி கல்லாலவிருட்ச நிழலிலே காணப்பட்டதுபோல தேடிச் சென்ற சுவமிகளும் மரம் ஒன்றின்கீழ்க் காட்சி கொடுத்தார். இரும்பைக் காந்தம் இழுப்பதுபோல இராமச்சந்திரனார் சுவாமிகளுடைய சக்தியால் கவரப்பட்டு அவர் பாதம் தொழுது பக்கத்திலே அமர்ந்தார்.

இராமச்சந்திரனாரை உற்றுப் பார்த்த சுவாமியார், "நீயும் நம்ம பட்டிதான். ஆத்மீக விஷயத்தில் அவசரப்படக் கூடாது" என்று தமது பேச்சை ஆரம்பித்தார். "பிரிந்த அம்மையார் உனக்கு மாத்திரம் தாயார் அல்லர். எனக்கும் இந்த ஊர் மக்கள் சகலருக்குமே அவர் தாயார் ஆவர். பெரிய இல்லற ஞானி அவர். அன்னதானஞ் செய்வதில் அவருக்கு ஒரு தனி ஆனந்தம்" என்று இராமச்சந்திரனாரின் தாயாருடைய தெய்வீகக் குணங்களை விபரித்த பின்பு ஆன்மீக சம்பந்தமான விஷயங்களுக்கு வந்தார். மகாத்மாகாந்தியுடன் இராமச்சந்திரனாருக்கு இருந்த தொடர்பு, யோகர் சுவாமிகளுடன் இருந்த அத்யாத்ம உறவு, சுவாமி இராமதாசர், சுவாமி சிவானந்தர் ஆகியோருடைய நூல்கள் மூலம் பெற்ற அறிவு முதலியவற்றைத் தாமே சொல்லிவிட்டு இராமச்சந்திரனாரைப் பேசத்தூண்டும் முறையில் சம்பாஷணையைத் திருப்பினார்.

இராமச்சந்திரனாரின் பேச்சு ஆரம்பமாகியது. பெரிய கடைச் சுவாமியின் அடியார்கள் என மதிக்கப்பட்ட காசிச் சுவாமி, கற்கண்டுச் சுவாமி ஆகிய இருவரின் ஆசிகளைத் தான் மூன்றாவது வயதில் பெற்றதை எடுத்துச் சொல்லிவிட்டு, யாழ்ப்பாணத்தில் ஆங்கிலக் கல்வி கற்கும்போது சந்தித்த நல்லூர் செல்லப்ப சுவாமிகள், ஓட்டுமடம் பொன்னப்ப சுவாமிகள் இருவரையும் குறிப்பிட்டார். பின்பு உத்தியோகமான பின் சந்தித்த அருளம்பல சுவாமிகள், சடைவரத சுவாமிகள் ஆகிய இருவரும் காட்டிய விசேட அன்பையும் விளக்கினார். கொழும்பில் படிக்கும்போது ஆனைக்குட்டிச் சுவாமிகளைத் தரிசிக்கவில்லையோ? என்றொரு கேள்வியைத் தூக்கிப் போட்டார் சுவாமியார் இருமுறை சந்தித்ததாகக் கூறினார் இராமச்சந்திரனார்.

“அவர் உனக்கு ஒன்றும் கூறவில்லையா?” இரண்டாம் முறை அவரது தரிசனம் தமக்குக் கிடைத்தது அஞ்சுலாம்படியில் என்றும், அப்போது அவர் ஒரு கள்ளுத் தவறணையின் எதிர்ப்பக்கக் கானுக்குள் நின்றுகொண்டு, அங்கு வந்து மது அருந்திக்கொண்டிருந்த ஆண்களையும் பெண்களையும் பார்த்தவண்ணம் சிரித்துக்கொண்டிருந்தார் என்

றும் தம்மை வணங்கிய இராமச்சந்திரனுரைப் பார்த்து "நீயும் இப்படி ஒருநாள் குடித்துவிட்டுக் கூத்தாடுவாய்" என்று சொல்லிப் புன்னகை செய்தார் என்றும் கூறினுர். இதனைக் கேட்டுப் புன்முறுவல் பூத்த சுவாமிகள் "நீ இன்னும் சந்திக்கவேண்டிய ஒரு மகான் இருக்கிறுர்; அவர் திருவண்ணுமலையில் எழுந்தருளியுள்ளார்; ரமண மகரிஷி என்பது அவருடைய பெயர். அவரைப்பற்றி நீ கேள்விப்பட்டதில்லையோ?" என்ருர் சாமியார்.

"கேள்விப் பட்டிருக்கிறேன் சுவாமி. அவரது வரலாற்றையும் மௌன உபதேச மகிமையையும் படித்துமிருக்கிறேன். ஆனுல் அழைப்பு இன்னுங் கிட்டவில்லை. திருவருள் கூட்டுங்காலம் வரவில்லைப் போலும்" என்று பதில் கூறினுர் இராமச்சந்திரனுர்.

"ஆம்! ஆம் அவனன்றி அணுவேனும் அசையாதென்ற ஆப்தர் மொழியின் உண்மை ஆன்மீக வாழ்வில் தான் தெளிவாகப் பிரதிபலிக்கின்றது. திருவாதவூரர் திருப்பெருந்துறைக்குப் போனது பாண்டியன் கட்டளைப்படி குதிரை வாங்கவா, அல்லது ஒரு தரிசனம் பெறவா? தாயுமானவர், மௌனகுரு வந்திருக்கிறுர் என்று கேள்விப்பட்டா திருச்சி மலைக்கோயிலுக்குப் போனவர்? வழக்கம்போல் தெய்வ ஆராதனைக்கல்லவோ சென்றவர்" என்று கேள்வியும் கேட்டு விடையும் தானே கூறினுர். "சிறு வயதிலேயே உன்னை நாகபூஷணி அம்பாள் சந்நிதானத்தில் ஸ்ரீ அருணுசலேஸ்வரருக்கு அர்ப்பணஞ் செய்ததை அறியாயா? திருவண்ணுமலையில் அந்த மகான் உனக்குத் தாயாகவும் தந்தையாகவும் குருவாகவும் விளங்குவார். உனது வருகையை எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருக்கிறுர்" என்று கூறினுர்.

சுவாமியாரின் வார்த்தைகளில் மனதைப் பறிகொடுத்த இராமச்சந்திரனுர் உள்ளம் உருகி ஆனந்தக்கண்ணீர் சொரிந்தார். வைகறை இருளும் அகன்றது. சுவாமிகளுடைய திருமுகமும் தேஜோமயானந்தமாக விளங்கியது. இராமச்சந்திரனுர் எழுந்து அடியற்ற மரம்போல் சுவாமிகளுடைய பாதத்திலே வீழ்ந்து தமது கண்ணீரால் பாதங்களைக் கழுவினுர். சுவாமிகள் அவருடைய சிரசிலே தமது திருக்கரத்தைக் காட்டி ஆசீர்வதித்தார்.

நயினுதீவிலுள்ள மக்கள் சுவாமிகளை முத்துக்குமார சாமியார் என்றே அழைத்தனர். ஆனுல் அயலூரவர்கள் சுவாமியாரைப் பெயர் பெயர் சொல்லி அழைக்க அஞ்சிப்போலும், நயினுதீவுச் சுவாமியார் என்றே அழைத்தனர். திருவாதவூரர், செம்மங்குடி, சீர்காழி போன்ற பெயர்களும் இவ்வண்ணம் வந்தவையே. ஊரைச் சொன்னுலும் பேரைச் சொல்லக்கூடாது என்ற தத்துவம் இப்படி வந்ததேதான்.



சுவாமிகளுடைய குருநாதன் பெரியானைக்குட்டி சுவாமிகளேதான். குருநாதன் அவருக்கு என்ன பெயரை வைத்தாரோ யாரறிவார்? இப்படி ஊர் பேர் தெரியாது, உலகுக்குத் தம்மைக் காட்டிக் கொள்ளாது மறைந்த மகான்கள் எத்தனை பேரோ யாரறிவார்?

சுவாமியார் என்று பெயர் எடுத்துவிட்டால் அவர்களைச் சுற்றி ஒரு கூட்டம் எப்பொழுதும் இருந்துகொண்டேதான் இருக்கும். நயினுதீவுச் சுவாமிகளும் அதற்கு விலக்கானவர் அல்லர். சுவாமிகள் தமது அடியார் கூட்டத்தோடு வடபகுதியில் உள்ள எல்லா ஆலயங்களுக்கும் யாத்திரை செய்தருளினுர்.

சுவாமியை நாடிவந்தவர்கள் யாவரும் ஏதோ ஒரு வகையில் பயன்பெற்றே சென்றனர். சுவாமி கொடுத்த விபூதியைப் பெற்று உடல்நோய், உள்ளநோய் தீர்ந்தவர் ஆயிரத்திற்கதிகமானவர்கள். ஆத்மஞானம் நாடி வந்தவர்கள் ஆத்மஞானம் பெற்றனர். சுவாமிகளுடைய சீடர் கூட்டம் இன்று எல்லா ஊர்களிலும் உண்டு. தமது சீடர்களில் முதல்வரான சண்முகரத்தினம் அவர்களைக்கொண்டு நயினுதீவு தென்மேற்குப்பகுதிக் கடற்கரையில் ஒரு தீர்த்தக்கேணி அமைப்பித்தார். இன்றும் நயினுதீவு நாகம்மாள் தீர்த்தம் ஆடிவருவது இத்தீர்த்தக் கேணியில்தான் என்பது குறிப்பிடத்தக்க தொன்ருகும்.

சுவாமிகள் இயல்பாகவே கவிபாடும் திறமை வாய்ந்தவர். இவரியற்றிய தனிப்பாடல்கள் பல உள்ளன. நாகேஸ்வரி தோத்திரமாலை, நாகபூஷணி அந்தாதி போன்ற நூல்கள் அன்னுரின் சமாதி நிலையத் தொண்டர் சபையினரால் வெளியிடப்பெற்றுள்ளன. அடியவர்களுடைய இன்னல்களை வாக்கினுலும் நோக்கினுலும் தீர்த்தருளிய சுவாமியவர்கள் 1949 ஆம் ஆண்டு தை மாசம் 26ஆம் திகதி தமது அன்பரின் இல்லத்தில் யாழ்ப்பாணம் சிவலிங்கப்புளியடியில் சமாதிநிலை எய்தினுர். சுவாமிகளுடைய திருவுளப்படி அவரின் பூதஉடலை நயினுதீவு காட்டுக் கந்தசுவாமி கோயிலின் மேற்குப்புறத்தில் அடியார்கள் சமாதி வைத்தனர், இன்று அதன்மேல் ஒரு சோமாஸ்கந்த லிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டு நித்திய பூசை நடைபெற்று வருகிறது.

சமாதி நிலையத் தொண்டர் சபையினரால் ஒரு மடாலயம் தாபிக்கப்பெற்று ஆண்டுதோறும் அன்னுரின் ஞாபகார்த்ததினம், பூசை, வழிபாடு, மகேசுவரபூசை என்பனவற்றுடன் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான அடியார்கள் சென்று சமாதியைத் தரிசித்துச் சாந்தி பெறுகின்றனர்.